உ





சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# தமயந்தி



## ஒரு புதிய தமிழ் நாடகம்

பி.ஏ.பிரணதார்த்திஹரசிவனார், பி.ஏ., எல்.டி.,

இயற்றியது.

மூன்றாம் பதிப்பு

சென்னை:
கணேஷ் கம்பெனி

1912

TO

The Educated Women

OF

SOUTHERN INDIA

WITH SINCERE WISHES FOR

Their further improvement and enlightenment.

# முகவுரை.

‘தமயந்தி’ என்னும் மகுடஞ் சூட்டப்பெற்ற இந்நாடகமானது, வேதவியாச முனிவராலருளிச் செய்யப்பட்ட மாபாரத மென்னும் இதிகாசத்திற் சிறந்த பாகமாகவும், பாண்டவர்களுடைய தீராத்துயரத்தைத் தீர்த்து இன்பமளித்ததாகவும் இவ்வுலகிற் சிறந்து நடமாடும் கீர்வாணம் முதலிய எல்லாப் பாஷைகளிலும், காப்பியங்களாகவும், நாடகங்களாகவும பல்வேறு பாவலர்களாற் புனையப்படும் பெருமை வாய்ந்ததாகவும் உள்ள, நளச்சக்கிரவர்த்தியின் கதையை வைத்துகொண்டு, சுதந்திரயூகத்தா லாங்காங்கு நாடகத்தின் போக்கிற் கேற்பச் சில விஷயங்களை விடுத்தும், வேறு சில புதியவிஷயங்களைத் தொடுத்தும், கீர்வாணாங்கில நாடகலக்ஷணங்களைத் தழுவியும், நாடகவிய லுடையாரைப்பின் பற்றியும், நவரஸங்களும் வாய்க்கச் செந்தமிழ் நடையி லியற்றப்பட்டுளது.

இனி, இதன்கண் எம்மாலாக்கப்பட்ட செய்யுட்கள், கண்ணிகள், கீர்த்தனங்கள் முதலியவைகளைத்தவிர, ஆன்றோரியற்றியுள்ள செய்யுட்களிற் பலவும் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. இந்நாடகத்தில், அவலச்சுவையே அதிகரித்திருப்பதனாலும், கதாநாயகர்களாகிய நளன், தமயந்தி முதலியவர்கள் துன்புறுங்காலத்துக் கீர்த்தனங்கள் பாடுவது அவர்தம் பெருமைக் கிழுக்கென்பது எமது துணிபாதலாலும், அதிகக்கீர்த்தனங்கள் வரையாது விடுத்தனம். இன்னும், இந்நூலின்கண் முக்கிய பாத்திரமாய் விளங்கும் சனீசுவரபகவானுடைய தோற்றத்தைப்பற்றிய நம்மனோர் பெரும்பான்மை யோரின் அபிப்பிராயத்திற்கும், அந்தத்தேவதையின் செய்கைக்கும், தக்கபடி பாட்டுக்களையும், வசனங்களையும் நகைச்சுவையை விளைக்கக்கூடியதாய் எழுதியிருப்பதனால் அதைத்தவறெனக் கொள்வார் தயைகூர்ந்து மன்னிப்பாராக.

# முகவுரை.

இந்நாடகத்திற் பொதிந்துள்ள கதை அனைவர்க்கும் தெரிந்திருக்குமாதலால், விரிவாயுரையாது, எமது நாடகத்திற்கு வேண்டியவரையிற் சுருக்கமாய் நாம் செய்துள்ள மாறுதல்களுக்கேற்பக் கூறுவாம். அது வருமாறு.

உத்தரதேசத்திற் குண்டினபுரத்தைத் தலைநகராகக் கொண்டு விளங்கிய விதர்ப்பதேசத்தில் வீமராஜன் என்றோ ரரசன் செங்கோலோச்சி வந்தான். அம்மன்னன் எல்லாப்பேறுகளையும் பெற்று வாழ்ந்தனனாயினும், மக்கட்பேறொன்றில்லாது மனத்துயரெய்தினன். அதைப்பெறவான் கருதிப் பல்வேறு விரதங்களை யநுட்டித்தும், பல்வகைத் தானங்களைச்செய்தும் பரமனிடத் தன்பு பூண்டும் நடந்து வந்தான். அவனுடைய அறச்செய்கைகளே உருவெடுத்தன்ன குமாரத்தி யொருத்தி பிறந்தாள். அவள் அழகும் அருளும் வாய்க்கப்பெற்றவள். அவள் வளர வளர அவளழகும் வளர்ந்து வந்ததுடன், அவளைப்பெற்று வளர்த்தவர்களுக்கும், அந்நாட்டுக் குடிகளுக்கும், அவளையறிந்த மற்றவர்களுக்கும், அவளிடத்துக் காதலும் வளர்ந்து வந்தது. அப்பெண்கணையகத்தை அவளுறவினர்களும், தாய் தந்தையர்களும் பேணி வளர்த்த பெருமையைப் பேசவும் வேண்டுமோ? அக்குலக்கொடி தக்க பருவமடைந்து தளிர்த்துப் பூத்தனள்.

அம்மலர் மணம்வீசிவருகாலை மேலார்பகல் தெய்வலோகத்தில் மானஸஸரஸி லுறைந்துகளிக்கும் அன்னப்பறவையொன்று, தன்னினமெனக் கருதியோ, மலர்ச்சேக்கையென மயங்கியோ தமயந்திபாலெய்திற்று. நெருங்கி நோக்கித் தானநுபவிக்கு மலரன்றெனத் தேர்ந்தும், அம்மலரை வாளாவிடுத்தல் கூடாதெனக்கருதி அப்பூவை மணத்தற்கேற்ற பூபதியாம் நளனை இசைந்து வருவேனென்று, பூபதியின் பெருமையையும், அவன் அம்மலரை நுகர்தற்குப் பாத்திரனென்பதையும் பகர்ந்து, நளன்பாற் சென்று, 'நினது மார்பகத்துக்கிடக்கும் மலரன்று உனது மார்பை மிளிரச்செய்வது, விதர்ப்பதேசாதி

பதியாகிய வீமனது குலக்கொடி பூத்த மலரேயாம்,' என்று கூறி, அம்மலரின் நயத்தையுஞ் சொல்லிப்போயிற்று. அது கேட்ட நள தமயந்தியர்கள் பரஸ்பர மையல் கொண்டு பலவிதமாய்ப் பரிவெய்தியிருந்தனர்.

இது நிற்க, குண்டினபுரத்து தமயந்தி நளனை நினைந்து நினைந்து நகைபாராட்டி வலிந்து வருவதைக் கண்ணுற்ற நங்கையர் பலருமவள் நற்றாயை நாடி நவிலலும், அத்தாய் அரசனிடத்துரைத்தாள். அரசனு மதுவே தருணமெனத்தேர்ந்து, தனதருமைக் குமாரத்தியின சுயம்வரத்திற் கோர்தினங்குறிப்பிட்டுப் பலதேயத்தரசர்களுக்கும் திருமுகம் விடுத்தான்.

திருமுகம்பெற்ற தேயமன்னர் பலரும், திருவனையாள் தமயந்தியின் எழிலையுங் குணத்தையும் பலர் பலதடவைகளிலுங் கூறக்கேட்டவர்களாதலின், உடனே புறப்பட்டுச்சில நாட்களுக்கு முன்னரே குண்டினபுரம் சேர்ந்தார்கள். நளனே, தான் பெற்ற திருமுகம் மணவோலையே யென்று மதியாது, தமயந்தியின் திருமுகமே தனக்குக் கிடைத்ததென்று மதித்து, மனோவேகமும் பின்னிட்டியங்கும்படி மாதரசினுறைவிடம் நோக்கி வருகின்றான். வரும்வழியில், நல்லொழுக்கங்களின் சிறப்பைக் காட்டி யவற்றினை நிலைநாட்டிப் பூலோகத்தாரை நல்வழிப்படுத்தவும், நல்லொழுக்கங்கள் வாய்க்கப் பெற்றவர்களுக்குத் தக்கபடி பயனளிக்கவும்கருதிப் பார்ப்பவர்களுக்குக் கலகமெனத் தோன்றுமாறு கலகம் விளைக்கும் பிரமபுத்திரராகிய நாரதபகவானுடைய தூண்டுதலாற் காமுற்றுக் கண்ணிழந்து தமயந்தியைக் கைப்பிடிக்கவெண்ணிவரும் இந்திராதி தேவர்கள் நிறுத்த நின்றான். அவர்கள் தமது எண்ணத்தை நிறைவேற்ற, 'அக்கன்னியி னிடத்துத் தூதுசெல்லத் தகுந்தவன் இவனே. இவனிடத்து மதிப்புள்ளளாதலின் இவன் மதிக்கும் நம்மிடத்து மதிப்புவைப்பாள். இவனிடத்துக் காதலுள்ளளாதலின், இவன் சொல்லைக் கடவாள். இவனும் வாய்மையாளனாதலின், நம்பணிமேற்

கொண்டு தன்னுலானமட்டும் பார்ப்பான். வஞ்சனை செய்யான்' எனத்தேர்ந்து இவனிடம் தெரிவித்து இவனை இணக்கினுர்கள்.

அவனும், தேவர்களினுணையென ஏற்றுக் கன்னிபாலேகிக் காரியசித்தியின்றிக் கன்றிய மனத்துடன் கடவுளரைச் சார்ந்துரைத்தான். தமது காரியம் பலித்திலதாயினும், காவலனது கருத்தை யறிந்து வியந்தவர்களாய்க் கனலிமுதலாயினேர் வரமளித்துச் சென்றனர்.

அனுமதிபெற்றவரசன் சுயம்வரமண்டபமேகித் தமயந்தியால் மாலையிடப்பட்டு, அவளை மணந்தான். சுயம்வரமண்டபத்தில் நளனைப்போன்று உருவெடுத்துத் தமயந்தியை மயக்க நினைத்த தேவதைகள், தமயந்தியின் நுண்ணறிவைக்கண்டு வியந்துவிண்ணுலகேகிறுர்கள். இவ்விடத்திலேயே நமதுநாடகம் தொடங்குகிறது.

சுவர்க்கம் நோக்கிச்செல்லும் தேவதைகள் வழியிற் கலிபுருஷராகிய சனீசுவரபகவானைக் கண்டார்கள். சனீசுவரபகவானும் நாரதரின் தூண்டுதலால் தமயந்தியை விரும்பி வருகிறுர். வரும்வழியில் தமயந்தி மண்ணரசனுகிய நளனை மணந்துவிட்டாளென்றும், அவளை நாடிப்போன தாங்கள் வெறுங்கையாய்த் திரும்புவதாகவும் தேவர்களாற் றெரிந்துகொண்ட கலிபுருஷர், நளதமயந்தியர்களைக் கனன்று இந்திரன் முதலிய தேவர்கள் என்னசொல்லியுங் கேளாது அவர்கட்குக் கேடுவிளைப்பதாகச் சபதமிட்டார். சபதமிட்டுக்கொண்ட கலிபுருஷர் தமது பராக்கிரமத்தைப்பற்றிப் பலவாறு வியந்துகொண்டும், தம்மைத் தமயந்தி அவமதித்தாளென்று வெகுண்டும், அவர்களைத் துன்பப்படுத்துவதாகத் தீர்மானித்தும், இந்திராதி தேவர்கள் வியந்து கூறிய அவர்களுடைய சீலத்தை நினைந்து பயந்தும், வாய்பதறிச் செய்துவிட்ட சபதத்திற் கிரங்கியும் கூறிக்கொள்கிறுர்.

இங்ஙிதிப்படியிருக்க, நெடுநாளாய்க் காதலித்துக் கைப்பிடித்த கணவன் காதலியர்களாகிய நளதமயந்தியர்கள் சையாக்கிருகத்தி லுய்யாராமாய்ப் பலதினங்களைக்கழித்து வருகிறார்கள்.

அவ்வித மிருந்துவரும் நாட்களி லொரு சாயங்காலம் அரண்மனையை யடுத்த சிங்காரவனத்திற் சென்ற தமயந்தி தன் கரத்திலேந்திய நளராஜனுடைய படத்தைக் கண்கொட்டாது கண்டு களித்து, அத்தகைய காதலரைக் கைப்பிடிக்க நேர்ந்த தன் பாக்கியத்தை வியந்தவளாய்ப் பலவாறு அப்படத்தை நோக்கி வார்த்தை யாடிக்கொண்டிருக்கிறாள். அப்பொழுது அவளை நாடிச்சென்ற நளராஜர், ஏதோ தனியே பேசிக்கொண்டிருப்பதை யறிந்து, அவள் கையிலுள்ள படமும் அவளது மொழியும் யாவெனத் தெரிந்துகொள்ள வேண்டி மறைவாகவே யிருக்கிறார். அது தெரியாத தமயந்தி தன்நாயகரைப் பலவாறுபுகழ்ந்து பேசிக்கொண்டிருக்கிறாள். அது கேட்டுத் தெளிந்த நளராஜர் அவ்வளவு இனிமையான வசனங்களைத் தம்மிடத்து வசனிக்கவில்லையே யென்றிரங்கித் தக்கதருணத்தில் முற்போந்து தமயந்தியைக் கட்டியணைத்து, அவளை வார்த்தைக்கிழுத்துப் பலவாறாய்ப்பேசிப் பிறகு காதலி கணவனிடமிருக்கும் முறையைப்பற்றிப் பாடல்கள் பாடக்கேட்டு மகிழ்ந்து, பெண்கல்வியிலும், தக்க வயது வந்த பிறகு கல்யாணஞ் செய்வதிலுமுள்ள நன்மைகளைப்பற்றி யுரையாடினர்கள். கடைசியாய் ஒரு சிருங்காரப்பதம் பாடும்படி கேட்கத் தமயந்தி நளராஜரையே பாட்டுடைத் தலைவராக வைத்துப்பாடியதில், அவர் நாட்டைக்குறித்துப்பாட,— அதுகேட்ட அரசர் மறுநாட்காலையிலேயே தமது நாடுபோக வேண்டுமென்றுரைக்கத் தமயந்தியும் அப்போதேகூட வருவதாகக்கூறினாள்.

மறுநாட் காலையில், தமயந்தி தன் தாய் தந்தையர்களிடம் தனது கணவருடைய கருத்தைக்கழறினாள். தாமென்ன

சொன்னபோதிலும் நளராஜ சினித்தாமதியாரென்று தெரிந்துகொண்டவர்களாய்த் தமதுமகளைக் கொஞ்சக்காலமிருந்து செல்லலாமென்று மன்றாடிக் கேட்டும் அவளிணங்காமைகண்டு, அவர்க ளெண்ணப்படியே விடையளிக்க நிச்சயித்தும், புத்திரபாக்கியமே யில்லாது நெடுநாட்கழித்துப் பெற்று வளர்த்த ஒரு குழந்தையையும் விட்டுப் பிரியவேண்டிய தனபத்தைப்பற்றிப் பலவாருகப் பிரலாபித்தும், நளராஜரிடத்துத் தமதுகுழந்தையின் குணங்குறைகளைக்கூறித் தமது அன்பையும் வெளிக்காட்டி அக்குழந்தையை யன்போடு நடாத்திவரக் கேட்டுக்கொண்டதுடன், குழந்தையும் நளராஜரும் அடிக்கடித் தமது நாட்டிற்கு வந்துபோக வேண்டுமென்றும் தெரியப்படுத்திக்கொண்டார்கள்.

இவ்விதம் உத்தரவு பெற்றுப்போனவர்கள் மாவிந்தநகரஞ் சென்று அன்பும் காதலு மதிகரித்து வாழ்ந்து வந்தார்கள். தமயந்தியும் நளராஜ ருத்தரவுப்படி அடிக்கடி தாய்வீடு சென்று தாய் தந்தையர்களின் குறையையும் நிறைத்து வந்தாள். இவ்வரசன் நீதியையும், தமயந்திக்குக் குடிகளிடத்துள்ள அபிமானத்தையும் சொல்லிப் புகழாதார் அந்நாட்டிலிலர். ஆயினும், சிலகாலம்வரை மகப்பேறடையாததனுல், அந்நாட்டாரடைந்த துன்பத்திற்களவில்லை. கொஞ்சக்காலத்தில், அந்நாட்டுக் குடிகளின் ஆசீர்வாதத்தினுலும், பாக்கியத்தினுலும், பகவானுடைய கருணையினுலும் ஓராண்மகவைப் பெற்ருர்கள்.

அக்குழந்தை பிறந்தவுடன் நிடதநாடடைந்த ஆநந்தத்திற் களவில்லை. அரசனும் அகமகிழ்வுற்று அறங்கள் முப்பத்திரண்டும் வழங்கலாயினன். சோதிடர்களை வரவழைத்துச் சாதகம் கணிக்கச்செய்து பலனையுங் கேட்டுக் களிகூர்ந்தான். ஆனுல், சாதகம்பார்த்த அந்தணர்கள் பலன் சாதகமாயிருக்கவில்லையென் றபிப்பிராயப்பட்டதாக ஊகிக்கலாயிற்று. அதன் பிறகு சில வருஷங்களில் ஒரு பெண் மகவையும் பெற்றெடுத்தார்கள். இவ்விதம் பன்னிரியாண்டுகள் கழிந்தன.

இவ்வாறிவர்களிருக்க, இவர்களைக் கெடுப்பான் சபதஞ் செய்துவந்த கலிபுருஷர் பன்னிரியாண்டும் பதுங்கிப்பார்த்தும் அவர்களிடத்துத் தவறு காண்கிலராய்த் தமது புகழ்போய் விடுமேயென்றும், தேவர்கள் தம்மைத் தூறுவரே யென்றும், தாம் பதறிக்கூறினதாகவும் பலவிதம் பிரலாபித்துக் கடைசியாய் நளன் சூதாட்டத்திற் கொண்டுள்ள அளவற்ற ஆசையையே காரணமாக்குவதாக நிச்சயித்து, அதன் பொருட்டுச் சிற்றரசர்களி லொருவனாகிய புஷ்கரனிடஞ்சென்று, அவனைத் தூண்டி நளனுடன் சூது பொரச்செய்து, வஞ்சகமாய்ப் புஷ்கரனுக்குச் செயமுண்டாக்கி நளனைப் பரதேசியாக்கிக் காட்டிற்குத் துரத்திவிடுகிறதென்று தீர்மானித்துக்கொண்டார்.

அவ்விதமே புஷ்கரனிடம்போய், அவனைக்கண்டு, அவனைத் தமதெண்ணத்திற் கிணக்கி, நளனிடமனுப்பினர். நளனிடத்துச்சென்ற புஷ்கரன் சனியின் வலியால் நளனைச் சூதாட விசைத்ததுமன்றிச் சிறிதுநேரத்திற்கெல்லாம் பந்தயப்பொருள் வைக்கவுஞ்செய்து, வேடிக்கைபோல ஒவ்வொருபொருளா யபகரித்தான். அதைக்கண்டு தீராது கேடு விளையுமோ வென்றஞ்சிய மெய்காவலாளன் உடனே ஓடி மந்திரிக்குரைக்க, மதியூகியார் அக்கணமே சபாமண்டப மேகிச் சூதாட்டத்தைக் காணப்பொறுது பயத்தாலும் நயத்தாலும் பலவிதமாய்த் தடுக்கவும், ஒருபொழுதும் உல்லங்கனஞ் செய்தறியா நளராஜர் விதிவலியினுல், மந்திரியின் வாசகத்தையும் திக்கரித்துச் சூதாடித் தம்பொருள், நாடுநகரம் யாவற்றையும் தோற்ருர். புஷ்கரன் நேற்றுயர்ந்தநிலையுடையானுதலால் மரியாதையும், அநுதாபமுமின்றிக் கலியின் தூண்டுதலால் உடனே அரண்மனையை விட்டோடும்படி நளனுக்குக் கட்டளையிட்டான். அநியாயமாய் நாட்டைப் பிறன்கொள்ள நளன் நாட்டைத் துறத்தலைக்காணச் சகியாத மந்திரி பலவிதத்தால் அந்நாட்டைப் பலவந்தமாய்ப் பிடுங்கிக்கொள்ளலாமென்று நியாயங் கூறியும், தாம் மனமாரக் கொடுத்ததைத் திரும்பக் கைக்கொள்ளல் தகாதென்றுரைத்து மந்திரியிடம்

நளராஜர் விடைபெற்றார். அத்தகைய நீதிமன்னன் நிர்க்கதியாய்ப் போவதனாலும், அற்பனரசாட்சி பெறுவதனாலும் தனக்கு அங்கிருக்க மனமில்லாமல் தாமும்கூட வருவதாகக் கூறிய மதியூகியை நளராஜர் பலவாறு பலவந்தப்படுத்தி நாட்டிலிருந்தே நீதி செலுத்திச் சனங்களைப் பாதுகாக்கும்படி ஏற்பாடு செய்துவிட்டு அந்தப்புரம் போனார்.

அங்கு ஒருநாளு மில்லாமற் பகலிற்றூங்கிய தமயந்தி கனவுகண்டு திடுக்கிட்டு விழித்துத் தன் தோழியிடங் கூறிக் கொண்டிருந்தாள். அக்கனவின் பயனேபோல அலங்கோலமாய் அரசன் வரக்கண்ட இருவரும் ஆச்சரியமுற்று அசைவற்று நின்றார்கள். அங்குவந்த நளராஜரும் நடந்தவைகளை நவின்று நாட்டைவிட்டகல வேண்டுமென்றுங் கூறினார். இடிவிழுந்தாற்போல எதிர் பாராத்துயரமுறக்கண்ட தமயந்தியும், மோகனமாலையுந் தயங்கித்தவித்தார்கள். அரசரும் அரசியைத்தேற்றிக் குழந்தைகளுடன் அவள் தாய்வீடு செல்லவேண்டுமென்றும், தாம் எங்கேனும்போய்க் காலத்தைக் கழித்துவருவதாகவும் சொன்னார். தமயந்தி பதைப்பொறாளாகித் தன் கணவர் தாள்களில் விழுந்தழலும், அவளை யெடுத்துத் தேற்றி யென்னசொல்லியும் பயன்பெறாது, குழந்தைகளை மோகனமாலையிடம் விதர்ப்பதேச மனுப்புகிறதென்றும், தாமிருவரும் காட்டிற்குப் போகிறதென்றும் தீர்மானித்துக் கொண்டார்கள். இதில் மகப்பேற்றின் பெருமை கூறப்படும்.

பிறகு குழந்தைகளை மோகனமாலையிட மனுப்பிவிட்டுக் கானகமெய்திக் காட்டின் வனப்புக்களையும், இயற்கைப் பொருள்களின் அழகையும், கடவுளின் படைப்புத் திறத்தையும், இயற்கைப் பொருள்களுக்கும் செயற்கைப் பொருள்களுக்குமுள்ள பேதங்களையும், கான்விலங்குகளின் குணத்திற்கும் மனிதர்களின் குணத்திற்குமுள்ள வேற்றுமையையும், மான் கன்றுகளின் பேதைமையையும் பற்றிப் பலவாறு சம்பாஷித்துக் கண்ணுற்றுக்கொண்டே சென்றார்கள். பிறகு, அங்கு

ஓர் தீம்புனல்யாற்றையும், அவ்விடத்துத் தோன்றிய செவ்வானத்தோடுகூடிய படுஞாயிற்றையும்பற்றிப் பலவாய் வியந்தும், உத்பிரேக்ஷித்தும் பேசினார்கள். சாயங்காலவேளையிற் பொன்னிறம்வாய்ந்த அன்னப்பறவை யொன்று ஆகாயத்திலிருந்து அவர்களருகே இழிந்து நெருங்க, அதைத் தமயந்தி வேட்டதனால், நளராஜர் அதைத் தொடர்ந்துபோகத் தமயந்தியும் பின்சென்றாள்.

நெடுந்தூரஞ் சென்றும் பறவை பிடிபடாமையால், மனைவியினுடையிற்பாதியைத் தாம் சுற்றிக்கொண்டு நளராஜர் தம் மாடையை யவிழ்த்து அதன்மேற் போட்டுப் பிடிக்கப்போகவும், அப்பறவை அவ்வாடையையு மெடுத்துக் ககனமார்க்கமேகிவிட்டது.

பறவை, உடுத்திருந்த ஆடையையு மெடுத்துச் சென்றுவிட்டதே என்று ஆச்சரியத்தோடும் விதனத்தோடும் நடந்து ஓர் பாழ்மண்டபத்தைச்சார்ந்து இராப்பொழுதைக் கழிக்க நினைந்தார்கள்.

உடனே, நாட்டையுங் கவர்ந்து காட்டிலுஞ் செலுத்திய கலிபுருஷர் தோன்றித் தாம் தமது காரியத்திற் சயமடைந்ததற்கு மகிழ்ந்து, தாமே பறவையி னுருவெடுத்து அவர் தம் உடையை எடுத்துச் சென்றதாகவும் மொழிந்து, அவ்வளவு செய்தும், நளதமயந்தியர்களின் அன்பு மிகுதியா லவர்கள் பிரிந்திலரேயெனத் துயருற்றுத் தாம் அவர்கள் நாடிச்செல்லும் பாழ்மண்டபம்போய்த் தமயந்தி தூங்கும்பொழுது அவளைவிட்டு நீங்கும் வண்ணம் நளன் மனத்தைக் கலைத்து, அவள் உடையைக் கொய்வதற்கு வேண்டும் கத்தியாகவும் இருந்து அவர்களைப்பிரித்துத் தமயந்தியைக் காட்டில் தவிக்கவிட்டு, நளனை அவனுடைய சிற்றரசர்களு ளொருவனுக்குக் கீழ்மைப்படுத்துவதாகவுந் தீர்மானித்துப் போகின்றார்.

அவ்விதமே பாழ்மண்டபத்திற் படுக்கச்சென்றவர்கள் அங்குபோய்த் தங்களுக்கு நேரிட்ட ஆபத்தையும், தாங்கள்

படுக்கவேண்டி யிருக்கிற இடத்தையும்பற்றிப் பலவாறு பரித வித்துப் பிறகு தமயந்திகழுத்தை நளன்கையாற்கட்டலும் இரு வருமபடுத்தார்கள். படுத்தவுடனே, தான்பட்டசிரமமாற்றாது துயின்றனள் தமயந்தி. துயரமும் கவலையு மேலிட்டதனால் நளராஜருக் குறக்கம்வரவில்லை. உடனே நித்திரை போகுந் தமயந்தியின் முகத்தைப்பார்த்து, அதன் வாட்டத்தையும் சோர் வையுங்கண்டு துக்கித்து, நாளை யென்னசெய்யப் போகிறே மென்று தவித்துத் தம்மனைவியின் துன்பந் தாங்கமாட்டாது வருந்திப், பலவிதம் நினைந்து, கடைசியாய் அவளைவிட்டு நீங் குவதே மேன்மையெனத் துணிந்து, பின்னும் கான்விலங்கிற் கும், காமவிடர்கட்கும், அவள் தன் கற்பிற்குமஞ்சி, வேறுகதி யில்லாததனால் விடுவதே சரியெனத்தேர்ந்து, அவள்முகமண்ட லத்தையும், அவயவங்களையும் பன்முறையும் நோக்கிப் பிரலா பித்து, முகத்தையும் கரங்களையும் முத்தமிட்டு, உடையையும் பக்கத்திலிருந்த கத்தியினுதவியாற் கொய்துகொண்டு, மணை லைக்குவித்துத் தலைவியின் தலையை வைத்துவிட்டு நீங்கிச் செ ல்வார். போக மனம் வாராமலும், காலெழாமலும், தமயந்தி யின் அவயங்களிழுக்கத் திரும்புவார். மறுபடியும் விதியை நினைந்து விலகுவார். பின்னும் அவள் நிலைமையைக் கருதி நெருங்குவார். இவ்விதம், தயிர் கடைபவர்களின் கைகள் போன்று இங்கு மங்குமா யலைந்து விதியின்வலியா லிழுபட்டு வீமன் மகளை விடுத்தேகினார் நளராஜர்.

பிறகு துயிலொழிந்த தமயந்தி நளனைத் தடவிப்பார்த் துக் காணாது, பயந்து, துக்கித்து மறுபடியுந் தேற்றிக்கொ ண்டு பக்கத்திற் புரண்டிருக்கக் கூடுமென்று நகர்ந்து பார்த் துங் கண்டிலளாய், ஒளித்து விளையாடுகிறாரோ வென்று ஐயு ற்றுப் பல்வாறு நயமாகவும் பயமாகவும் தலைவனை விளித்துங் காணப்பெறாது, அருகேயுள்ள தாமரைத்தடத்திற்குக் காலைக் கடன்முடிக்கச் சென்றிருக்கக்கூடுமென்று போய்ப்பார்த்தும் பயன்பெறாது, தன் கனவு பலித்ததோவென்று பலவாறாய்ப் புலம்பித் தன் கணவனைக் கோவியாது, தன்னையும் தன் வினை

யையும் கடவுளையும் நொந்துகொண்டு, கான்விலங்குகளையும், கான்விருக்ஷங்களையும் விளித்துத் தன் நாயகன் போன வழியைக்காட்ட வேண்டிப் போகையில், தெரியாமல் ஒரு மலைப் பாம்பின் வாயிற் காலையிட்டுவிட்டாள் அப்பாம்பு விழுங்க வெத்தனிக்கவும், 'ஓ!' என்றலறினாள். அத்தொனி கேட்ட வேடனொருவன், தன் பெண்சாதியுடன் உல்லாசமாய்ப் பேசிக்கொண்டிருந்த பேச்சையும் விட்டு ஓடி அவளை அப்பாம்பின் வாயினின்றுந் தப்பிவைத்தான்.

தப்பிப்பிழைத்த தமயந்தி வேடனை நோக்கிக் குண்டினபுரஞ் செல்லும் வழிவினவ, அவன் இவளழகையும், தனிமையையுங்கண்டு காமுற்றுக் கைப்பிடிக்கவேண்டினான். அதைக் குறிப்பாலறிந்த தமயந்தி அவனிடமிருந்து தப்பத்துரிதப்பட்டாள். வேடன் அவளைவிடானாகிப் பலவாறாகத் தன்பெருமையை வியந்துபேசித் தன் எண்ணத்தையும் வெளியிட்டான். அதைக்கேட்ட தமயந்தி அவனுக்கு நயமாகவும், அடக்கமாகவும் புத்தி கூறினாள். அதைக்கேளா மூர்க்கன் அவளது குழலைப்பிடித்திழுத்துப் பலவந்தஞ் செய்தான். அது சகியாது பலவாறாயலறி, அவனையும் இகழ்ந்து, தன் குலத்தையும் புருஷன் பெருமையையும் நினைந்து, தெய்வத்தை நோக்கிப் புலம்பத் திடீரென்றொரு பெரியவர் தோன்றினார். அவரைக் கண்டதும் பயந்து கூந்தலை விட்டுவிட்டான் அவ்வேடன். தமயந்தியும் அப்பெரியவரிடத் தடைக்கலம் புகுந்தனள். அவர் அவளைத் தைரியப் படுத்தி, அவ்வேடனையும் கடிந்து காத்தனர். அவரைக்கண்டதும் புத்தியுண்டாகிய வேடன் அவர் காலில் விழுதலும், அவரும் அவனை மன்னித்து விடுத்தனர். பிறகு அப்பெரியவர் தமயந்தியின் நிலைமைக்கிரங்கி, சேதிநகர் போகும் வழியையும் காட்டிக் கொஞ்சக்காலத்தில் துன்பம் நீங்கித் தலைவனைக்கண்டு இன்பமெய்துவாளென்றுஞ் சொல்லிப்போய்விட்டார்.

சேதிநகரடைந்த தமயந்தி அவ்வூரரன்மனையிற் பணிப் பெண்ணாயமர்ந்து காலங்கழிக்குநாளில், நளனையும் தமயந்தி

யையுந்தேடவேண்டிப் பலதிக்குகளிலு மனுப்பப்பட்ட வீமன் தூதுவர்களி லொருவர் இந்நகரம் வந்து தமயந்தியைக்கண்டு குண்டினபுர மிட்டுப்போக அங்குத் தனது தாய் தந்தையர்களைக்கண்டு துன்பெய்தி, உடனே நளராஜரைக் கண்டுவரவேண்டித் திக்குத்திக்கா யாளனுப்பிவிட்டுச் கணவர் வரவைக் குறித்தே பலவிரதங்களைச்செய்தும், தெய்வத்தை தொழுதுங் காலம் போக்கிவந்தாள்.

நீங்கிச்சென்ற நளராஜரோ, போகும்வழியில் ஒரு தீப்பற்றிய மூங்கிற்புதரிடத்திருந்த சர்ப்பமொன்றைக்கண்டு வருந்தி அதைக்காப்பாற்ற, அப்பாம்பு அவரைக்கடித்தது. பாம்பு தீண்டியதும் கதிரவனொளியை யேய்க்கு மவர் காந்திமாறிக் காரிருளடர்ந்த குகைபோலாகிவிட்டது. அதைக்கண்டு நளராஜர் தயங்கவும், அப்பாம்பு வாய்திறந்து, “ஏ ! நளராஜனே ! இப்பொழுது நீ யிருக்கும் நிலைக்கேற்ற தேகம் இதுவே. ஆதலின், இது, நீ செய்த உபகாரத்திற்குப் பதிலுபகார மென்று நினை. இனி உன் துன்பம் நீங்குங்காலத்தி லென்னை நினைத்தால் நான் வந்து இவ்வுருவை நீக்கி உன் சுய உருவம் தருகின்றேன். இது சத்தியம்” என்று சொல்லிற்று. அதுவும் உண்மையே யெனக்கொண்டு அநேகவிடங்களிற் சுற்றிக் கடைசியாய் அயோத்தியடைந்து, ரிதுபன்னமகாராஜனிடத்து வாதுகன் என்ற பெயருடன் பரிசாரகனாக வமர்ந்து காலம்போக்கி வருகின்றார்.

குண்டினபுரத்திலிருக்கும் தமயந்தி வழக்கப்போல ஒரு நாள் அந்திமாலையில் விளக்கேற்றி வைத்துத் தன் பூஜாக்கிருகத்திலிருந்து அம்பிகையை வணங்கித் தன் தலைவனைச் சீக்கிரம் கொண்டு சேர்க்கவேண்டுமென்று வேண்ட விளக்கினின்றும் புஷ்ப முதிர்கிறது. அதுகண்டு வியந்து கொண்டிருக்கையில், மாவிந்த நகரத்தி லரண்மனையிலிருந்த பண்டிதரொருவர் வந்திருப்பதாகப் பாங்கி கூறக்கேட்டு அவரை வரவழைத்துப் பார்க்கையில், அவர் நளராஜர் அயோத்தி அரண்மனையி

விருப்பதாகத் தமக்குச் சந்தேக மிருக்கிறதென்று சொல்லி, அதற்கு முகாந்திரங்களாக விரண்டொரு குறிப்புக்களையும் கூறினர். அக்குறிப்புக்களால் அவர் ஐயுற்றவர் நளராஜரா யிருத்தல் கூடுமென்று அபிப்பிராயப்பட்ட தமயந்தி அவ்வை யத்தினின்றுந் தெளிவ தெப்படியென்று அந்தணரைக்கேட்க அவர் பின்வருமாறு கூறுகின்றார்: 'நளராஜர் ரதசாரத்தியத் திற் சமர்த்தராதலால், அத்திறத்தைப் பரீக்ஷித்து விட்டால் நிச்சயங்கொண்டு விடலாம். அதற்குத் தகுந்த யோசனை ஒன் றேயுளது. ரிதுபன்னன் சபலசித்தன். உன் சுயம்வரத்தின் பொழுதே உன்னிடம் காதல்கொண்டவன். அவனுக்கு இப் பொழுது ஒரு மணவோலையனுப்பவேண்டும். அதிலுனக்கு இர ண்டாஞ்சுயம்வரமென்று எழுதி நாளைக்குச் சுயம்வரமாயின் இன்றேபுறப்படவேண்டும்படி நான்கொண்டு கொடுக்கிறேன். அந்தக் கொஞ்சக்காலத்தில் இங்கு அவ்வரசன்வந்தானே அப் பொழுது அவர் நளராஜரென்பது நிச்சயம். நளராஜர் அங்குத் தானிருக்கவேண்டும்.' இதைக்கேட்ட தமயந்தி தனக்கு இரண் டாம் சுயம்வரமென்றுசொல்ல உடன்படவில்லையாயினும், அத னல் தோஷமில்லையென்றும், காரிய சித்திக்கு அதுதான் வழி யென்றும் அந்தணர் கூறியதனல் ஒப்புக்கொண்டு மணவோ லையையும் எழுதித்தருகிருள். உடனே அந்தணர் கொண்டு போய் ரிதுபன்னனிடங் கொடுத்து அன்றைக்கு மூன்றுநாள் முகூர்த்த மென்றுஞ் சொன்னர். ரிதுபன்னன் அவ்வளவு சீக் கிரம் தேர் நடத்தக்கூடியவன் பரிசாரகனகிய வாகுகனே யென்று தேர்ந்து அவனுக்கு உத்தரவளித்து விட்டான்.

அவ்வுத்தரவும், அவ்விஷயமுங் கேட்ட நளனகிய வாகு கன், தன் குலத்திற்குவந்த கேட்டையும், தன்னறிவீனத்தை யும், இரண்டாஞ்சுயம்வர மேற்படுத்திய வீமனுடைய இழி வையும், அவளை மணக்க நினைக்கும் ரிதுபன்னனுடைய துணி வையும், மணக்கவியன்ற தமயந்தியின் மானக்கேட்டையும் மாற்றிமாற்றி நினைந்து, சினந்து, கடிந்து, துயருற்றுப் பலவா முக வெகுண்டு, தன்னுயிரை மாய்த்துக்கொள்ள நினைந்து

எஜமானத்துரோகம் வருமென்றஞ்சி அவனிஷ்டப்படியே தேர் நடத்திப் பிறகு பார்த்துக்கொள்வோமென்று நிச்சயித்துப் பெண்களையே பலவாறு தூஷித்துத் தன் வினையையும் நொந்து தன்னுளே கூறிக்கொள்வானாயினான். பிறகு, தான் செய்த காரியத்தை நினைந்து வருந்துகின்றான். கடைசியாய், ஒருவேளை தன்னைத்தான் காணவிசைந்தனளோவென்றும் ஐயுற்றான். இவ்விதம் பலவாய்ப்பிதற்றிப் படுத்துறங்கினான்.

மறுநாட்காலையி லிரதமேறிவந்துவிட்டான் ரிதுபன்னன் குண்டினபுரத்திற்கு. அவனுடன்கூடத் தேரிலேறிவந்த அந்தணர் தாம்வந்த சாயங்காலமே, 'போனவர் வரக்காணோமே? என்னவாயிற்றோ?' என்று சிந்தித்துக்கொண்டிருக்கும் தமயந்திபாலெய்தித் தேர்வந்த வேகத்தையும், மற்றும் தாம் குறித்த இரண்டொரு செய்திகளையுஞ் சொல்லி அப்பரிசாரகர் நளராஜரே என்பது நிச்சயம் என்று சொல்லிவிட்டார். அதுகேட்டுக் களிப்படைந்த தமயந்தி அதன்மேல் அப்பரிசாரகரை வெளிப்படுத்தி எல்லோருக்கும் தெரிவிக்குமாறென்னென அந்தணரை வினவ, அவர் தமக்கொன்றுந் தோன்றவில்லையென்றும், தாம் மாலைக்கடன் முடிக்க விரைவிற்போகவேண்டுமென்றும் சொல்லிப்போய்விட்டார். தனியேவிடப்பட்ட தமயந்தி ஆலோசித்து ஒருவழியாய்த் தீர்மானித்தாள்.

இதன் மத்தியில், குண்டினபுரமடைந்த ரிதுபன்னன் பட்டண மிருந்ததைப்பார்த்துச் சுயம்வரமென்றே நினைக்க இடமில்லாமையால், வாகுகனை யழைத்து அவனபிப்பிராயத்தையும், அவன் கேள்வியுற்றதையும் தெரிந்துகொள்ள சுயம்வரமில்லையென்றே ஏற்பட்டது. ஆயினும், திருமுகமெப்படி வந்ததென்று பலவிதமாய் ஊகித்துந் திருப்திப்படாது, கடைசியில் அரசனைக்கண்டு தெளிகிறதென்று தீர்மானித்துக்கொண்டார்கள்.

அவ்விதமே வழிநாட்காலையில் ரிதுபன்னன் வீமனைப் பார்க்கச் சுயம்வர மில்லையென்பது வெள்ளிடை மலைபோல்

விளங்கிவிட்டது! அவ்வீரரசர்களும் பேசிக்கொண்டிருக்கையில், இருகாவலாளர்கள் தொடரப்பட்ட ஒருவன் பிணிப்புண்டு வந்து நின்ருன். அவன் யாரெனவும், அவன் என்ன குற்ற மியற்றினுனெனவும் விசாரிக்க அவன் ரிதுபன்னனுடைய பரிசாரகனென்றும், அவன் தமயந்தியின் இரண்டு குழந்தைகளையுங்கண்டு கண்ணீர்விட்டுக் குழந்தைகளையும் ஏதோ கேள்விகள்கேட்டு அழவிட்ட குற்றத்திற்காக மோகனமாலையினுத்தரவுப்படி சிறைப்படுத்தப்பட்டானென்றும் தெரியவந்தது. அவன் என்னகேள்விகள் கேட்டானென்று தமயந்தியின் மகனை விசாரித்தார்கள். அக்குழந்தையைக்கண்டு கண்ணீர்விடக் காரணமென்ன? என்ற விஷயத்தைக்குறித்து மேன்மேலும் விசாரித்துச் சென்றதில் வாகுகன் நளராஜனேயென்று ஒப்புக்கொள்ள வேண்டிவந்தபடியால், அவ்விதம் ஒப்புக்கொண்டவுடனேயே கீழே மூர்ச்சையாய் விழுந்துவிட்டான். பக்கத்தறையிலிருந்து, தனதாலோசனையின் பயனும் நடக்கிற விசாரணையைப் பார்த்துக்கொண்டிருந்த தமயந்தி இவன் வாக்குமூலத்தைக்கேட்டு, ஓரேபாய்ச்சலாய்ப்பாய்ந்து, 'நாதா! நாதா!!' என்றரற்றிக்கொண்டு நளராஜனைக் கட்டிக்கதறி மூர்ச்சையாயினள். இவ்வகைவையும் பார்த்திருந்த அரசர்களும் மற்றவர்களும் ஆச்சரியப்பட, நளராஜர் மூர்ச்சைதெளிந்தார். அவரை யெடுத்தணைத்து அவர் விருத்தாந்தத்தை யறிந்து வீமன் இரங்க, ரிதுபன்னன் தான் அவரை நடத்திவந்த விஷயத்தைக்குறித்துப் பயந்து விழித்தான். உடனே காஞ்சனமாலை, மோகனமாலை முதலாயினேர் தமயந்திக்குச் சைத்தியோபசாரஞ்செய்ய, நளராஜருக்கு அன்றே விதர்ப்பதேசத்தைப்பட்டங்கட்டுவதாக வீமன் அறிவித்தான். தமயந்தி மூர்ச்சை தெளியவும் அந்தப்புரம் கொண்டுபோகப்பட்டாள்.

பிறகு, நளராஜரைநோக்கி யவர் தம்மேனி கறுத்த காரணத்தை வீமன் வினவ, அவர் நடந்த விருத்தாந்தங்களைச் சொல்லிக் கொஞ்சநேரம் விடைபெற்று வெளிப்போந்து

புதியவுருவைநீத்துப் பழையவுருவை யேற்றவுருதலும் எல்லோரும் ஆச்சரியப்பட்டுக் களித்தார்கள்.

அப்பொழுதே ஒரு சேவகன்வந்து, நிடதநாட்டு மந்திரி கிரீடமும் கையுமாக நான்கு பிராமணர்கள்சூழ வந்திருப்பதாகவும், நளராஜரைப்பார்க்க வேண்டுகிறதாகவும் சொன்னான். ஆச்சரியத்துடன் எல்லோரும் எதிர்பார்த்திருக்க, அநுமதிபெற்ற மதியூகியார் வந்தார். நளன் முதலியவர்களும் மதியூகியாரும் கண்டுபேசியபின்னர், புஷ்கரனிறந்துவிட்டதாகவும், இறக்குமுன் அந்நாட்டை நளராஜருக்கென்று எழுதிவைத்துவிட்டுப் போனதாகவும், அதுமுதல் நளராஜரிருக்குமிடந்தெரியாதிருந்து சிலதினங்களுக்குமுன்தான் தனக்கும் மற்றைய மந்திரிகளுக்கும் அவரை இங்குக் காணலாமென்று கனவு நிகழ்ந்ததாகவும் சொன்னார். எல்லோரும் ஈசன் கருணையை வியந்தார்கள்.

அதுவே சுபசூசகமெனக்கொண்டு, அப்பொழுதே இரண்டு நாடுகளையும் பட்டாபிஷேகஞ் செய்து விடுகிறதெனத் தீர்மானித்து அதற்குவேண்டியவைகளைச் சித்தப்படுத்தச்செய்து குலகுருவைக்கொண்டு பட்டங்கட்டி வைத்தார்கள்.

அப்பொழுது, ஆகாயத்திலிருந்து ஒரு குரல். 'நளராஜனே' எனக்கேட்க, எல்லோரும் வியந்து ஆகாயத்தைப்பார்க்கத், தான் சனீசுவரனென்றும் நளனுடைய சூதாடுமாசையினாலும், தமயந்தியின் இறுமாப்பினாலும் தானே அவர்களை அத்தனை துன்பங்களுக்கு முட்படுத்தியதாகவும், ஆயினும் அவளிடத்திருந்த வாய்மையையும், அவளிடமிருந்த கற்பையுங்கண்டு களிகூர்ந்து இவ்வித நன்மையைச் செய்ததாகவும் கூறிப் புஷ்கரனிறக்குமுன் அந்நாட்டை நளனுக்குக் கொடுக்கும்படி தூண்டியவனும் தானேயென்றுசொல்லி நளராஜன்கேட்ட வரத்தையுங்கொடுத்து மறைந்தான்.

உடனே, நளராஜர் சபையோர்களை நோக்கித் தாம் பட்ட துன்பங்களனைத்திற்கும், சூதாட்டமும், இறுமாப்புமே

காரணமாதலின், எல்லோரும் அவ்விரண்டையும் விடவேண்டு மென்றும், தங்களிடத்துள்ள வாய்மையும், கற்புமே தங்களைக்காத்தனவாதலால் அவைகளைக் கைப்பற்ற வேண்டுமென்றும்சொல்லி, இவ்விதம் தீச்செயல்களைக்கடிந்து, நற்செய்கைகளை நாட்டவேண்டிச் சனிபகவானை நியமித்து உயிர்களை உய்யுமாறு செய்கின்ற பரமனைப் பணிவோமென்று சொல்ல எல்லோரு மெழுந்து நின்று கடவுளைத்துதித்து மலர்மாரி பெய்தார்கள்.

இந்நாடகத்திற் பல்வித நீதிகளும், வருணனைகளும, ஆசாரநெறிகளும், பக்திமார்க்கங்களும் ஆங்காங்குச்செறிந்திருக்கக் காணலாம்.

தமிழ்மொழியினிடத்து எமக்குள்ள ஆர்வத்தாலும், எமது சிறுவயதுமுதல் நளசரித்திரமெமது மனத்தைக்கவர்ந்து வந்ததனாலும், ஈசனதருளா லிக்கதை இதுகாறு மொருவராலுந் தமிழில் நாடகமாகச் செய்யப்படாததனாலும், சிற்றறிவுடைய யாம் எமது நண்பர்களின் தூண்டுதலைக்கொண்டும், எமது ஆசிரியராகிய பிரமஸ்ரீ - சூரியநாராயணசாஸ்திரியாரினூக்கத்தைக்கொண்டும், எல்லாம்வல்ல முழுமுதற்கடவுளின் கருணையை முன்னிட்டு இந்நாடகத்தையியற்றலாயினேம். ஆதலின், கசடறக்கற்ற சான்றோர்கள், இதன்கண்ணுள்ள குற்றங்களை நீக்கிக் குணங்களைக்கொண்டாடுவார்களென்று நம்புகின்றோம்.

இன்னும், இந்நாடகம் ஆங்காங்குச் சிறந்துவிளங்குமாறு எமக்குச் சில திருத்தங்கள்கூறிய மாங்காட்டு-ஸ்ரீகிருஷ்ணமாசாரியாரவர்களுக்கும், அச்சாகும்பொழுது பிழையறப்பரிசோதித்த எமதாசிரியராகிய சாஸ்திரியாரவர்களுக்கும் மிக்கநன்றி பாராட்டக் கடமைப்பட்டுளேம்.

திருச்சிற்றம்பலம். P. A. P.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தமயந்தி.



## கடவுள் வாழ்த்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அகிலபுவ னங்களுறை யான்மகோ டிகளெலா
மடிபணிந் தங்கைகூப்ப
மகிமையுற மாபாலர் பங்கயா சனர்முதலர்
மனமுவந் துடனிருப்பத்
திகிலடைந் தோடிடத் தீயமரு வலர்புரந்
தீவாய் மடுத்துவாழுஞ்
சுகிர்தகுண நளராசர் தமையந்தி மாலைபெறு
சுபவேளை போற்றிவாழ்வாம்.

———:0:———

# நாடகப் பாத்திரங்கள்

1. நளன்: நிடதநாட்டரசன்-நாடகத்தலைவன்
2. வீமன்: விதர்ப்பதேசத்தரசன்-தமயந்தியின் தந்தை.
3. புட்கரன்: நளனைச்சூதில்வென்றவன்.
4. ருதுபன்னன்: அயோத்தி மன்னன்-நளனைப்பரிசாரகனாகவைத்திருந்தவன்.
5. மதியூகியார்: நளனுடைய பிரதானமந்திரி.
6. மிருதுவசனர்: வீமன் மந்திரி.
7. கலிபுருஷன்: சனீசுவரபகவான்-இந்நாடகத்திற்குக்காரண புருஷன்.
8. இந்திரன்:
9. அக்கினி:
10. இயமன்:
11. வருணன்:

} தமயந்தியை வேட்டுவந்த தேவர்கள்.

12. நாகேசபட்டர்:
13. நாராயணபட்டர்:

} நளனரண்மனைச்சோதிடர்கள்.

14. கலியன்: தமயந்தியைவருத்தியவனவேடன்.
15. நித்தியாநந்தர்: தமயந்தியை வேடனிடத்தினின்றும் காப்பாற்றிய தவசி.
16. வாதுகன்: நளனுடைய புனைவுபெயர்.

நளன்மகன், பிராமணர்கள், ஊர்க்குடிகள், சேவகர்கள் முதலாயினர்.

17. தமயந்தி: நளன்மனைவி-நாடகத்தலைவி.
18. காஞ்சனமாலை: தமயந்தியின் நற்றாய்.
19. மோகனமாலை: தமயந்தியின் உயிர்த்தோழி.

கலியன்பெண்சாதியாகிய வேடுவச்சியும் சிலதியர்களும்.

## நாடக நிகழ்விடம்.

பெரும்பான்மை மாவிந்த நகரத்திலும், அதற்கடுத்த காட்டிலும்; சிறுபான்மை குண்டினபுரத்திலும், அயோத்தியிலுமாம்.

# தமயந்தி.

## அங்கம்—க.

### முதற்களம்.

இடம் : குண்டினபுரத்திற் கருகிலொரு சோலை.

காலம் : முற்பகல்.

பாத்திரம் : கலிபுருடன்.

கலி: —[பாடுகிறான்]

(க) இராகம்-நாதநாமக்கிரியை ; ஏகதாளம்.

பல்லவி.

ஆண்மையைக் கேளீர்-அழகுள்ள கலிராஜன்
அதிகாரம் பாரீர்.

அநுபல்லவி.

உலகமனைத்துந்தன் னுள்ளங்கை யிடமாக்கி
அலகிலா தெவர்முன்னு மதிகார முறைகாட்டும். (ஆ)

சரணங்கள்.

1. ஆதியி லீசனு ரயன்சிர மறுத்ததும்
அதில்வரும் பாவத்தா லதிகாரம் வெறுத்ததும்
சோதி மிகவழிந்து சுத்தமாய்க் கறுத்ததும்
சோறு மிரக்ககா ணுமையவள் சிறுத்ததும்
என்னுலேயன்றோ-இன்னுமெனது செயல்
சொன்னுலுமொன்றோ. (ஆ)

2. அன்றைய னவையினி லறியாமல் விடுத்தும்
அதுகண்ட முருகனு மருஞ்சிறை மடுத்ததும்
பின்றைப் பிரணவப் பிரசங்க மெடுத்ததும்
பிள்ளைக்குத் தாதைதம் பிறைமுடி யடுத்ததும்
நானன் றிவேறோ-நாரணன் றானுமே
எனமெவ்வாறோ. (ஆ

(உ) நொண்டிச்சிந்து.

அரனோடு மூவருமே-மற்ற
அண்டர் முனிவரு மெவ்விடத்தோ-இன்னும்
குறமாதை வேண்டியுமே-அந்தக்
குமரனும் வேங்கை மரமானான்-பின்னும்
மறலிதனக்குதையும்-பொன்
மானைத் தொடர்ந்தவன் போனதுவும்-இன்னும்
கோடானு கோடியுமே-செய்து
கோலா கலத்துடன் வீற்றிருப்பேன்-நானும்
கூடாதுங் கூட்டிவைப்பேன்-பின்னும்
கூடியே யுள்ள குடிகெடுப்பேன்-என்னை
நாடாத பேர்களையும்-இந்த
நாட்டைக் கடந்து நடக்கடிப்பேன்-என்றன்
பேரோ கலிராஜன் - என்முன்
பேசத் துணிபவ ராரோ தாம்-என்னை
யாரோவறியாதார்-எவர்
அந்தமெனந்தந் தனக்கிணையாம-அந்தக்
காரோதி யென்னுடைய-கொஞ்சக்
காலின் குறையைக் கடைக்கணிப்பாள்-ஐய
நானனன் னானநன்னா-நன
நானன்ன நன்னன நானநன்னா.

இப்போதும் அரிஹரப்பிரமாதிகளும், முப்பத்துமுக் கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் ருஷிகள் முத

லிய யாவரும் எனதாக்கினைக்குட்பட்டுக் கீழ்ப்படிந்து நடக்கும்பொழுது, யார்தாமெனக்குநிகர்? பலத்திலும், சௌரியத்திலும், அழகிலும் யார்தாமெனக்குச் சரியாவார்? ஒரு கால்தானே நொண்டி? எவ்வுலகத்தாரையும் ஆக்கினைக்குள்ளாக்கு மென்னிலும் மேலோருண்டோ? ஆதலின், அத்தமயந்தி ஒருகாலும் என்னைவிட்டு வேறொருவரை மணம்புரியாள். அவளுக்கென்ன பயித்தியமா? என் கீர்த்தியைப் பன்முறையுங் கேட்டிருப்பாளன்றோ? அவளை நான் உடனே தெய்வலோகம் கூட்டிப்போவேன். அங்கு ரூபத்தி லிவளுக்கிணையாவார் யார்? இந்திராணியே இந்த ராணியின் காலழகுகொண்டவள்தானே. ஆதலால், அவளை நான் மணந்து இத்தெய்வமாதர்களைப் பங்கப்படுத்துகிறேன். அசேதனர்களாகிய அரம்பை முதலிய ஸ்திரீகள் நான் கொஞ்சம் தாங்கி நடப்பதைப்பார்த்து முகத்தை மறைத்துக்கொண்டு சிறிப்பார்கள், ஏதோ அவர்கள்தா மழகுள்ளவர்களென்று நினைத்து. இப்பொழுது நான் தமயந்தியைக்கொண்டு அவர்களுடைய கர்வத்தையடக்கி என் பெருமையை நிலைநாட்டுகிறேன். அதோ தெரிகின்றன குண்டினபுரத்துக் கோட்டை கொத்தளங்களும், ஆஸ்தான மண்டபங்களும் நாழிகை யென்னவிருக்கும்? பத்து நாழிகையிருக்குமா பூலோகத்தார் கணக்குப்படி? இதற்குள்ளாகவா சுயம்வர மாகிவிடும்? ஆகமாட்டாது. [போகின்றான்.

மறுபக்கத்திலிருந்து, இந்திரன், அக்கினி, இயமன், வருணன் வருகிறார்கள்.

இந்திரன்:—தேவர்காள்! பார்த்தீர்களா, நாம் நளன் போலவுருவெடுத்து அவன் பக்கத்திலேயே யுட்கார்ந்தும் அவளறிந்து கொண்டதை?

அக்கினி:—அறிந்துகொண்டதுடன் விட்டாளா? நம்மை வணங்கி நளனைமாலையிட வனுமதியுமன்றோ பெற்றாள் எவ்வளவு அமைவு! எவ்வளவு மரியாதை!

வருணன் :—உயர்குலத்துப் பிறந்த பெண்ணல்லளோ? மேலும் மிகப்படித்தவள். கற்புடையாள்.

இயமன் :—நாம் என்னதான் பரிகைக்கென்றே வந்தபோதிலும், அவள் நம்மைவணங்கி, 'நீங்கள் எனக்குப் பிதாமுறை' என்றுளே அப்பொழுதே எனக்கு வெட்கமுண்டாகிவிட்டது.

இந்திரன் :—நாம் பலவாறு நம் வரலாற்றைப் பற்றி வியந்து கொண்டாலும், அந்தத் தமயந்திக்குத் தகுந்தவன் நளராஜன்றான்.

வருணன் :—வாஸ்தவந்தான், ரூபத்தில்மட்டுமா? குணத்திலும் குலத்திலுமே. என்ன சத்தியசந்தன்!

அக்கினி :—அத்தமயந்தி வேதவிதிப்படி ஒருநாள் என்பத்தினியாவாளே அதுகூட எனக்குச் சம்மதியில்லை. நான் சுத்தனென்று கொள்ளுதல் சந்தேகம். அவளுடைய மனத்தூய்மைக்கு என்றன் தூய்மை எந்தமூலே?

இந்திரன் :—என்னவோ, போனற்போகிறது. நம் நாட்டிற்றான் ரூபமுள்ள மாதர்கள்; பூலோகத்திற் கிடையாரென்றெண்ணி யிருப்போமன்றோ இங்குவாராதிருந்தால்? வந்ததனுல் அஃதொன்று தெரிந்தது. நம்ம நாட்டில் யார்தாம் தமயந்திக்குநிகர்?

இயமன் :—ஒருவரு மில்லை. ஆடவர்களிலேதாம் நளனுக்கு ஈடாரிருக்கிறார்?

வருணன் :—என்ன தவமியற்றியிருந்தோமோ இத்தகைய தம்பதிகளைத் தரிசிக்க? கண்டாலும் ஒருவன் கலிநீங்கும். பார்த்தாலும் பாவம்போகும்.

கலி வருகின்றான்.

கலி :—அதோவருகிறவர்கள் யாவர்? தேவேந்திரனே? ஆம் அவன்றான். மற்றவர்கள்? (யோசித்து உற்றுப்பார்த்து) தரு

மன்-வருணன்-அக்கினி. இவர்கள் பூலோகத்திற்கெங்கு போயிருந்தார்கள்? ஓகோ! சுயம்வரத்திற்கோ? ஆம். நாரதமுனி சொன்னரே. அவர்சொன்னபடியே அவமா னப்பட்டுத் திரும்பினார்களோ? நல்லது கேட்போம். (தேவேந்திரனைநோக்கி) அ, ஆ! தேவேந்திரா!

இந்திரன் :—ஓ, ஓ! சனீசுரபகவானே! எங்கே இப்படிப் பூலோகத்திற்கு? வெகுவிரைவாகப் போகிறீர்களே என்னவிசேஷம்?

கலி :—ஆம். பூலோகத்திற்குத்தான். நீங்கள் விரும்பிச்சென் று வெறுங்கையர்களான தமயந்தியின் சுயம்வரத்திற்குத் தான்.

இந்திரன் :—அப்படியா? ஆனல், நீரும் எங்களுடன் திரும்பி விடலாம். வாரும் ஊர்போய்ச்சேர்வோம்.

கலி :—எனப்படி? நடந்ததென்ன? உங்களுக்கில்லையென்று ஆனதனலேயோ?

இந்திரன் :—எங்களுக்குமில்லை; உமக்குமில்லை. வாரும் போ வோம்.

கலி :—என்னசமாசாரம்?

வருணன் :—சமாசாரமென்ன? தமயந்தி நளனென்னுமொரு மண்ணரசனை மணந்துவிட்டாள்.

கலி :—(கோபத்துடன்) அ, ஆ! அப்படியா தேவர்களே? நீங் கள் தேவர்கள் நாடிப்போயும் அம்மானுடப் புழு உங்களைப் புறக்கணித்ததா?

இயமன் :—கோவியாதீர் கலிபுருஷரே! நாங்கள் சும்மா அத் தமயந்தியின் கற்பைப் பரிசோதிக்கச் சென்றிருந்தோமே யன்றி உண்மையாய்க் காதல்கொண்டுபோகவில்லையே. மேலும், தேவர்களாயிருந்தாலென்ன? அந்நளனுக் கீடா வாரெவர்?

கலி :—இயமதர்மராஜனே! நன்றுகூறினீர்! எட்டாத திராக்ஷை புளிக்குமென்பதுபோலக் கருதிச்சென்ற கன்னிகை தவறியபின் சற்பைக் காணவந்தோமென்று சவுரவங் காப்பாற்றிக்கொள்கிறீர்களோ? மேலும், அந்நளனுக் கீடாவாரெவரோன்கிறீரே. என்னதானிருந்தாலும், இந்திரனுக் கீடாவானு? நீங்க ளெப்படித்தா னிவ்வவமானத்தைப் பொறுத்தீர்களோ? நான் சகியேன். நானிப்பொழுதே பூலோகஞ்சென்று அவ்விருவரையும் படாதும் படுத்திவைக்கிறேன். அப்பாவையையும் அவ்வரசனையும் கதறடியாவிடில் நான் கலிராஜனு? என்முகத்திலுள்ளது மீசையா? (மீசையை முறுக்கிக்கொள்கிறான்) பார்க்கிறே னிவர்கள் வாழ்வதை.

இயமன் :—கலிராஜனே! கோபந்தணியும், பதறவேண்டாம். 'பிச்சைக்காரன் பேரிலா ப்ரம்மாஸ்திரந் தொடுக்கிறது?' அவர்களோ மானிடர்கள். நீரோ தேவர்களை யாட்டிவைக்கும் சூத்திரதாரி. உமக்கு அவர்களொருபொருட்டா? கொசு மொய்க்கிறதென்று கோடாரி கொண்டா பிளக்கிறது? தட்டிவிடவேண்டியது தானே? மேலும், அவள் மானிடப்பெண். உமக்குப் புத்திரி முறையில்லையோ? அவளை மணக்கலாமா? இந்தக் கேள்வி அவள் கேட்டதற்குத் தான் மறுமொழிசொல்ல வாயெழாது வந்துவிட்டோம். ஆதலால், சொல்வதைக்கேளும். திரும்பும். நம் நாடு போகலாம்.

கலி :—அண்ணு! உமது தர்மப் பிரசங்கங் கேட்டுக் கேட்டு காது புளித்துப்போயிருக்கிறது; போதும். இந்த மானிடப்புழுவா நமக்குப் புத்தி புகட்டுகிறது? நீதி சாஸ்திரமோதுகிறது? நல்ல திருக்கட்டும். நீங்கள் யார் என்ன சொன்னபோதிலும், நான் இப்பொழுதேபோய் அவர்களுக்கிடுக்கண் விளைப்பேன்.

இயமன் ;—கலிராஜனே! நீர் எவ்விதத்திலும் அவ்வரசனுக் கீடில்லை. வீணேபோய்க் கெடாதேயும். அத்தம்பதிகள் மகாசீலர்கள். மேம்பாடுள்ளவர்கள். தருமமே உருவெடுத்தன்னவர்கள். அவர்களிடத்துத் தவறு கண்டுபிடிக் தலசாத்தியம். குற்றமில்லாதபொழுது அவர்களை வருத்துவீராகில் உம்மை நான் சாதாரணமாய் விடமாட்டேன் சாக்கிரதை. ஈசனுணையைத்தப்ப யாவராலுங் கூடாது பார்த்துப்பிழையும்.

கலி :—குற்றங்காணுது தொடேன். குற்றங்காண எவ்வளவு காலமாயினுங் காத்திருந்து துன்பப்படுத்துவேன்.

அக்கினி :—சனீசுவரபகவானே! வீணே கெடாதேயும். திறனிருக்கிறதென்று தெறிக்கலாகாது.

கலி :—நல்லது. உங்கள் புத்தி யெனக்குவேண்டாம். வந்ததை யனுபவிக்கிறேன். நீங்கள் போய்வரலாம்.

இந்திரன் :—நல்லது, தேவர்காள்! நாம்போகலாம் வாருங்கள். கெடுவான் கேடுநினைப்பான்.'

[இந்திரன், அக்கினி, இயமன், வருணன், போகிறார்கள்].

கலி :—(தனக்குள்) பார்த்தாயா, இந்த அரசன் செய்தமோசத்தை? நான் கால்நோவத் தெய்வலோகத்திலிருந்து அவசரமாய் வருகிறேன். இந்த நளராஜன் நான் விரும்பி வந்த தமயந்தியுடன் கூடிக்குலாவிக்கொண் டிருக்கிறுனே! அடாபாவி! நான் தொடக்கருதிய கையை நீ தொட்டாய்விட்டதா? நல்ல திருக்கட்டும். நீயுமவளும் வாழ்கிறதைப்பார்ப்போம். தேவர்கள் முன்னிலையிற்கொண்ட சபதத்தை நிறைவேற்றுது விடுவேனு? ஆனல்,—அவர்கள் பயமுறுத்தினர்களே! ஒருகுற்றங்கூட வியற்றுமல் மானுடராலிருக்க முடியுமா? ஒருகால் அப்படியிருந்தார்கள்—அப்பொழு தென்னசெய்கிறது? என்வாயிழக்கவேண்டிவருமன்றே? அடடா! அவர்கள்போலவே

நானும் ஏன் சும்மா இருந்திருக்கக்கூடாது? ஏன் கோபிக்கவேண்டும்? அவளோ நளனுக்கு மாலையிட்டு விட்டாள். இனி நாம் புநர்விவாகம் செய்துகொள்ளப் போகிறோமா? ஆயின், அவர்களைவருத்துவதிற் பயனென்ன? புத்தியில்லாததான் கோபித்தேனே, அதை வெளிவிடாது மனத்திலேயே வைத்துக்கொள்ளக்கூடாதா? ஐயோ! வாயாற்கேட்டேனே!

" யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு" (உ)

என்றதை மறந்தேனே! நல்லது, எஃது எப்படியானுலுஞ்சரி. நாம் சொன்னவார்த்தையை நிறைவேற்ற வேண்டியதுதான். அவர்கள் மகாசீலர்களென்று தேவர்களே புகழ்வதனாற் குற்றங்கண்டு பிடிப்பது கடினமாகவேயிருக்கும். ஆதலால், அவர்கள் பக்கத்திலேயே எப்பொழுதும் காத்திருந்து, அணுவளவேனுந் தவறு கண்டவிடத்துப் பிரவேசித்து நாம் சொன்னவண்ணம் முடிக்க வேண்டியதுதான். ஐயோ! எவ்வளவு காலமாகுமோ குற்றங்காண? இவ்வளவு கஷ்டப்பட்டுக் காணுங் குற்றந்தான் எவ்வளவு அற்பமாயிருக்கவேண்டும்? அவ்வற்பக் குற்றத்திற்காகவோ இடுக்கண்விளைப்பது? மனதுதான் வருமா? ஐயோ! வாயாற் கெட்டேனே! வாய்பதறுவதனால் வருங்கேடுபோலும் இது! இக்கேட்டினின்றுமினியாகிலும் தப்பவேண்டும். நல்லது. இனி வீணாய்ப் புலம்புவதிற் பயனில்லை. ஆதலின், நம் காரியத்திற்கு ஆரம்பிக்கவேண்டியதுதான். எவ்விதம் முடியுமோ? போய்ப்பார்க்கிறேன். போகிறான்.

---0---

## இரண்டாங்களம்.

இடம்: குண்டினபுரத்தி லரண்மனையடுத்த சிங்காரவனம்.

காலம்: மாலை.

பாத்திரம்: தமயந்தி.

**தமயந்தி:**—(நளன்படத்தை உற்றுநோக்கி) அ, ஆ! இந்த அதிஸுந்தர புருஷரைத் தலைவராயடையப்பெற்ற என்பாக்கியமே பாக்கியம்! இவ்வளவு அழகும்-அறிவும்-அந்தஸ்தும்-ஆண்மையுங்கூடிய புருஷரையடைதல் சாமானியமா?

"பண்புடைய குடிப்பிறப்பும் பழிப்பில்லாப் பேரழகும் பரந்த கேள்வி
நுண்பொருளை நீரொழியப் பாலுகரு மன்னம்போ னோக்கித் தேரு
மொண்பொருளு மிந்நான்கு முடையாரைக்கிடையாதிவ் வுலகந் தன்னிற்
பெண்பெறுகை போலிந்தப் பெரியதுயர் தானுண்டோ பேசுங் காலே" (ரு)

என்று சொல்லியிருக்கும் பொதுவியலுக்கு வியக்காக வன்றோ நமக்குக் கிடைத்திருக்கிறது? ஆ, எவ்வளவு அழகாயிருக்சிறது இப்படமே! (ஊன்றிப்பார்க்கிறாள்.)

பின்புறத்தில்-நளன்-பிரவேசிக்கிறான்.

**நளன்:**—(மெதுவாய்) அ, ஆ! இவள் ஏதோ தானே பேசிக்கொண்டிருக்கிறாள் போலிருக்கிறதே!—ஓ! ஏதோ ஒரு படத்தையன்றோ பார்த்துக்கொண்டு நிற்கிறாள்? ஆ! எவ்

வளவு அழகாயிருக்கிறது இப்பொழுதுள்ள இவள் தோற்றம்! நாம் வந்ததைக்கூடக் கவனித்திலள். நல்லது, நாமும் மறைவாகவே கொஞ்சநேரமிருந்து அப்படத்தின் வரலாற்றையுந் தெரிந்துகொள்வோம். மேலும், அவள்தான் நம்முடன் ஒரு வார்த்தைசொல்வதே அருமையாயிருக்கிறது. இப்பொழுதாவது இவளுடைய வசனமிருதத்தை நஞ்செவி வழிப் பருகுவோம்.

(மறைவாய்நிற்கிறான்).

**தமயந்தி** :—அ, ஆ! என்ன அழகு! இந்த அருள் நோக்கொன்றே போதுமே!

மாரனிவரோ மதியோ விவர்வதனம்
வீரமோ வெற்றி மிளிர்புயங்கள்—பாரையோர்
செண்டாடி நின்றுமினிச் சிந்திக்கு மென்னையுமே
பெண்டாளும் மன்னவரோ பேசு. (சு)

ஏதோ, நானாவது, எனது பெரியோர்களாவது முற்பிறப்பிற் செய்த தவப்பயனால் நமக்கிந்த் மகாபுருஷர் கிடைத்தாரே யன்றி வேறில்லை.

**நளன்** :—(தனக்குள்) ஆ! அது நம்படந்தான் போலிருக்கிறதே!

**தமயந்தி**:—அந்த அன்னப்பறவை கூறியவன்றே அவரிடத்துக் காதல்கொண்டேன். அப்பொழுதே, 'ஐயோ! அத்தகைய புருஷர் நமக்குக் கிடைப்பாரா? நாம் அவருக்குத் தகுந்தவளா?' என்றுவிசாரமுற்றிருந்தேன். பிறகு, அவர் தேவராஜனுக்காக என்னிடம் தூதுவந்தகாலத்தில் அவரழகைக்கண்டு, அன்னம், பறவையினமாதலின் அழகைத் தக்கபடி தெரிந்து சொல்லவில்லையெனத் தீர்மானித்தேன். ஏதோ, என்றவப்பயனால், அப்புண்ணிய புருஷரையடைந்தேன். அன்றுமுதல் இன்றுவரை அவருடனுறைந்தே வருகிறேனாயினும், அவர் வனப்பானது

என்னையறியாது நாளுக்குநா ளதிகரித்துக்கொண்டே வருகிறது. இப்படியும் ஒருவருடைய அழகுவளருமா? அப்படி வளர்கிறதென்கிற உண்மையை இப்படமேகாட்டுகிறது. அ, ஆ! அவர் குறுநகையால் மிளிரும் முகம் அப்படியேயிருக்கிறதே! (உற்றுநோக்குகிறாள்)

நளன்:—(தனக்குள்) அ, ஆ! இம்மாதரசி, என் படத்தைப்பார்த்தே ஆனந்தித்துக்கொண்டும், என்னை மணந்த பெருமையையே பேசிக்கொண்டு மிருக்கிறாள். இஃதன்றோ கற்புடைய மங்கையரி னிலக்கணம்? தம் கணவருடன் கூடியிருக்கும்பொழுது களித்திருந்தும், அவர் தணந்தகாலையில் அவரையே நினைந்து, அவருடைய கீர்த்தியையும் வனப்பையும் வியந்துகொண்டாவது, அவருக்குபயோகமான காரியங்களைச் செய்துகொண்டாவதிருப்பார்கள். அவ்விதமே, நான் பிரிந்திருக்கும் சிறிதுநேரமும், வேறு விஷயங்களில் மனத்தைச் செலுத்த வியலாது, என் படத்தையே பார்த்து வியந்துகொண்டிருக்கிறாள். அந்தோ! இந்தவண்ணந் தீட்டப்பெற்ற பலகையின் பாக்கியமெனக்கில்லையே! என்னுடன் ஒருவார்த்தைகூடப் பேசமாட்டே னென்கிறாளே! ஒரு பத்துவார்த்தைகள் நான் பேசினால், அவள் வெகு சிரமத்துடன் ஒரு வார்த்தை சொல்கிறாள்! எப்பொழுது அவள் வாயில் வார்த்தை வருமென்று வாயையே பார்க்கவேண்டியிருக்கிறதே! இப்பொழுதோ, இந்தப் படத்துடன் சண்டமாருதமாய்ப் பேசுகிறாள். அந்தோ! என்னுடன் இதிற் பாதிப்பேச்சேனும் பேசக்கூடாதா? இவள் பேச்சையே கவனியாமலும், மறுமொழிகூறாமலுமிருக்கின்ற உணர்வற்ற பலகையினுடனோ சம்பாஷிக்கவேண்டும்?—ஆனால், அஃதோருலகவியற்கையே. நம்முடைய முகத்தையே ஆவலுடன் நோக்கிக்கொண்டிருப்பவர்களுடன் நாம் பேசுகிறதில்லை. அவர்களைப் புறக்கணிப்போம். நமமைக கவ

னியாது போகிறவர்களுடன் தொடர்ந்து தொடர்ந்து உரையாடுவோம். அவ்விதமே போலும். அட! என்னைப் போலெழுதியுள்ள ஒரு படத்திற்கிந்தக் கொண்டாட்டம்! அதற்கே மூலகாரணமாகிய எனக்குத்திண்டாட்டமா? ஆம். எப்பொழுதும் போலிமனிதர்கள் தாமே பயனடைகிறார்கள்.

தமயந்தி:—ஆ! நான் இவரைப் பெறவேண்டுமேயென்று கொண்ட கவலையையும், சுயம்வரத்திற்கு முன்னிரவில் நான் பட்டபாட்டையும் நினைத்தால் அம்மம்ம! அளவுண்டோ? அதுதான் தருணமென்று மன்மதனுமன்றோ கருணையில்லாது என்னைக் கலங்கச்செய்தான்?

காதலர்ப் பிரிந்து வாழுங் கன்னியர் தமையே நாடி
வாதைகள் பலவுஞ் செய்து வதைத்திடு மனங்கா வென்றன்
நாதர்தம் மருளா லின்று நலம்பெறு மமய நீயும்
பேதுகொண்டொளித்தல்தானும் பேடிய ரியல்பதன்றோ? (ரு)

என் நாதருடைய அழகையும், வீரத்தையுங் கண்டு கரந்தனையோ? உனது ஆண்மையே ஆண்மை! பேதையரை வருத்தும் பேடிதானே நீ? இதோ என் காதலருடைய ஆண்மையைப் பார்த்தேனும் போடா! முகத்தின் கம்பீரத்தை கண்ணுற்றுக் களியடா! (படத்தைநோக்குகிறாள்.)

நளன்:—(தனக்குள்) ஐயோ! இந்த மதுரமானவார்த்தைகளை என்னிடத்துச் சொல்லக்கூடாதா? நான் கேட்டு ஆநந்திக்கக்கூடாதா? இவ்வளவு காதல்கொண்ட என்னுயிரனையாளுக்கு, என்னைக்கண்டால் லஜ்ஜையுண்டாகிவிடுகிறதே! என்செய்வேன்? ஆனால், இவள் உத்தம லக்ஷணங்களோடு கூடிய முக்தையாதலின், நாணம், அச்சம் முதலியன இருத்தல் ஸகஜமே. இவ்விதம், நாணத்தோடு தயங்கித் தயங்கிப் பேசிக்கொண்டும், கூசிக் கூசி நெருங்கிக்கொண்டு மிருக்கும் தமயந்தியுடன் பழகுவதும், விசேஷ இன்பமாகத்தானிருக்கிறது. மேலும்,

இவ்வித மிருப்பவர்களின் காதலும், அன்புமே நீடித்து நாளுக்குநாளதிகப்பட்டுக்கொண்டும் வரும், ஏனையோ ரன்புங் காதலும் நீடித்திரா.

நாணிமிகத் தலைகுனிந்து களிர்நோக் கெய்தி
நயந்தணையு நாரியரின் காதல் நாதன்
வேணியிருந் திழிந்துவளர்ந் துயர்ந்து வாழும்
வியன்கங்கை விளங்குதல்போல் விளங்கு மன்றி
வீணினிற்பன் மொழிபகர்ந்து விரசங் காட்டி
விலகிடுமவ் விலைமகளிர் காத லோதான்
காணிலொரு பெருவெள்ளந் தோன்றி மற்றைக்
கணந்தனிலே வறண்டிடுமோர் கான்யாறாமே. (ச)

தமயந்தி:—அந்தோ! இத்தகைய மணவாளருடைய மனத்தை மகிழ்விக்கும்படி வார்த்தை யாடுவோமென்றால் நாணமென்னும்பேய் பிடித்தாட்டுகிறதே! அதனால், அவரென்னவெண்ணுகிறாரோ? ஆயின் தீரக்கற்ற திவாகரராதலின், 'நாணெனப்படுவது நாரியரணிகலம்' எனத்தெளிவார். இருந்தாலும், கிடையாப்பொருளாகக் கிடைத்த என் காதலரை நான் களிப்பிக்கவேண்டாமோ? அவரைப் பிரிந்திருக்கும்பொழுது, அவரிடம் எத்தனையோ சொல்லவேண்டுமென்று நினைக்கிறேன். அவரைக் கண்டவுடன் அத்தனையையும் மறந்து விடுகிறேனே! என்செய்வேன்? இவரழகைக் காணும்போதெல்லாம், 'நான் இவருக்குப் பாத்திரையல்லேன்' என்ற எண்ணமதிகரிக்கிறதே! அப்படியிருக்க, என் மாற்றத்தினாலாவது அவரை மகிழ்விக்கவேண்டாமோ? (ஆலோசிக்கிறாள்)

நளன்:—(தனக்குள்.) அ. ஆ!. 'ஏதோ நம்பாக்கியம் இவள் கிடைத்தாள்' என்றும், 'நாம் அவளுக்கீடல்லமே' யென்றும், நான் சிந்தித்திருக்கும்பொழுது, இத்தையனல்லாளிவ்விதம் கூறுவது வியக்கற்பாலதே! ஆயின், இவ்வித

மிருத்தலே மேன்மை. அப்பொழுதே ஒருவரிடத்தொரு வர்க்கன்பு அதிகப்படும். இருந்தாலும், இவள் என்னைப் பற்றி இவ்வளவு கொண்டாடக் காரணமில்லையே? ஆனால்,

நூன்பமு மின்பமாய்த் துலக்கித் தோன்றிடும்
புன்மையு மேன்மையாய்ப் புகழ்பெற் றோங்கிடு
மன்மத னிரதியென் மதிப்பு மெய்திடு
மன்பெனு மொருகட லினைக டக்கினே. (எ)

தமயந்தி:—(படத்தை நோக்கி) என் மனத்தைக் கொள்ளை கொள்ளும் மன்னவா! நான் ஸரஸமாய்ப் பேசவில்லையே யென்ற வருத்தந் தங்களுக்குண்டோ? ஆயின், நான் காணிலகப்பட்டுத் தடுமாறுகிறேனே! தாங்கள், அந்நாணினின்றும் என்னை விலக்குங்காலத்தில், உம்து குமுதச் செவ்வாயை இவ்விதமன்றோ முத்தமிடுவேன்?

(படத்தை முத்தமிடுகிறாள்).

நளன்:—(வெளிப்போந்து) தமயந்தி! (தமயந்தி திடுக்கிட்டுப் படத்தைக் கீழே போட்டுவிட்டு நாணத்தாற் கீழ்நோக்கலாயினாள்). உனக்கு நாணமாயிருந்தால், நான் இதோ உன்னைக் கட்டி முத்தமிடுகின்றேன்.

(தமயந்தியைக் கட்டி முத்தமிடுகின்றான்; தமயந்தி வெட்கித் தலைகுனிகிறாள்).

என் கண்மணி! என்னைக் காணுதபொழுது அந்த அசேதனமாகிய படத்தைப்பார்த்து என்னென்னவோ பகர்ந்துகொண்டிருந்தனையே? இதோ, நானே வந்திருக்கிறேன். என்னுடன் பேசு? என், கீழே பார்த்துக் கொண்டிருக்கிறாய்? எத்தனையோ பேசவேண்டுமென்று நினைத்ததாகக் கூறினையே? அவற்றுள் இரண்டொன்றைச் சொல்லு.—மாட்டாயா? நல்லது (படத்தை யெடுத்து) இந்தப் படம் யார் எழுதியது?

**தமயந்தி** :—(கீழ்நோக்காகவே) என்தோழி மோகனம் எழுதினாள்.

**நளன்** :—(தனக்குள்) இனி இவளை இவ்விதந்தான் பேச்சிற்கிழுக்கவேண்டும். (தமயந்தியைநோக்கி) நல்லது. உனக்குச் சித்திரிக்கத் தெரியுமோ?

**தமயந்தி** :—(புன்சிரிப்புடன்) ஏதோ, கொஞ்சந் தெரியும்.

**நளன்** :—காந்தாமணி! பார்த்தனையா, என்பாக்கியத்தை! அதிரூப சவுந்தரியத்தோடும், சிறந்த கல்வியோடும், சித்திர மெழுதல் முதலிய உத்தமஜாதிப் பெண்களுக்குரிய கைத்தொழில் நலனும் வாய்க்கப்பெற்ற உன்னை யடைந்த என்னிலும் பாக்கியவந்த ருளரோ? ஆனால் கலகலப்பாய்ப் பேசமட்டும் மாட்டேனென்கிறாயே! (தமயந்தி அதிகநாணத்துடன் கீழ்நோக்கி நிற்கிறாள்.)

நல்லது, நீ நன்றாய்ப்படித்த நங்கையாயினையே! உன் போன்ற உத்தமஜாதிப்பெண்கள் தங்கள் கணவரிடத்து எவ்விதம் நடந்துகொள்ளவேண்டுமோ, நீ எவ்விதம் நடந்து கொள்வையோ அதை ஒருவாறு சொல். உன் வாக்கினால் கேட்டானந்திக்க வேண்டுகிறேன். (தமயந்தி புன்னகையுடன் கீழ்நோக்குகிறாள்). பாதகமில்லை. சொல். அதை உன்முகமாய்க் கேட்க அதிக அவாக்கொண்டுளேன்.

**தமயந்தி** :—(முறுவலுடன் பாடுகின்றாள்).

மணவினை முடித்தெம் மோடுமகிழ்வுற விளங்குமந்தக் [ங்
கணவரைக்கண்முன் கண்டகடவுளாமெனவுட்கொண்டு
குணமுறினவருமுள்ளக்குறிப்புக்களைத்துங்கூடுந்
தணைந்தவர்நோக்கநாமுந்தாங்கிடாதழிவோமென்றும். (அ)

மகப்பெறுசெல்வம் வாழ்வுமகிழ்வுறுபோகமின்னுஞ்
சகப்பிரசித்தம்பின்னைச்சந்தனமலர்கள்காட்சி
புகக்கவர்முத்திலோகம்புனைந்திடுமணிகண்மற்று
மகக்களிப்புடனின்றுளுமனைத்துமேயவராலென்றும்.

நளன் :—(தனக்குள்) ஆ! எவ்வளவு தெளிவாகவும் இன்பமாகவும் பாடுகிறாள்!

தமயந்தி :—காதலராணுகவன்ஞர்கால்களைக்கழுவிநானு
மாதனமளித்தும்பாதவருச்சனைசெய்துமேத்தி
யாதரவோடுதூபமருளிப்பல்பணியுஞ்செய்வேன்
நாதரென்னன்பைநாடிநயமுடன்றழுவிநிற்பார். (கo)

சேடியைநோக்கியொன்றைச்செய்யெனக்கணவர்கூறி
லோடிநானதனையப்போழ்தொருநொடியினிற்செய்கிற்
நாடிநானெனதுநாதர்நடுவெணிலாதபொழ்து [பேன்
கூடிப்பேசிடுதற்கென்றன்குமரனதிடத்துமொவ்வேன்.

கணவரதொக்கல்மற்றுங்கணக்கிலாநண்பர்தங்கட்
குணவுடையனைத்துமீந்துமுபசரித்தவரைப்போற்றி
மணந்தவர்முனியும்வஞ்சமாந்தரைக்காணிலுள்ளந்
தணந்தகன்றிடுவேனென்றன்றலைவரேகேண்மினீரே.

நளன் :—அ, ஆ! நன்குரைத்தனை. இப்பொழுதன்றோ என் காதுகளும் மனமுங் குளிர்ந்தன. எவ்வளவு சேர்க்கையாகவும், நுட்பமாகவுங் கூறினை! இஃதன்றோ கல்வியாலாயபயன்! பார்த்தாயா படிப்பிலிருக்கும் நன்மையை? சில மூடர்கள் பெண்களுக்குப் படிப்புக்கூடாதென்பார்கள். கூடாதாயின் உன்போன்ற அறிவுமுதிர்ந்த பெண்களைக் காணலாகுமோ? பெண்களுக்குப் படிப்பு இன்றியமையாததாகும். பத்தினி படித்திருந்தால், பர்த்தாவிற்கு மனத்துயரம் நேரிடும் வேளையில், அவனுக்குப் புத்திபுகட்டி, அவன்விசனத்தைமாற்றிக் களிப்

புறச்செய்வாள், படியாப்பெண்டிரோ, மிடியால் வருந்துங் கணவனைத் தன்னிடியாலும் வருத்துவாள். ஊணுக்கு வழியில்லாத காலத்து நாணின்றிப் பூணும் பூணுக்கு வழிதேடுவாள். இத்தகைய பெண்டிரிலும் பேய் வேறுண்டோ? படிப்பிருந்தாலோ, புருஷனுடைய கஷ்டத்தையறிவாள். தான் கழுத்திற் பூணும் நகையிலும், தன் கணவனிதழிற்றவழும் நகையே பெரிதென நாடுவாள். படிப்பாலாய பயனிம்மட்டோ? பயன்கள் பலவுளவாதல் கசடறக்கற்ற வுனக்கே தெரியுமாதலின் நான் அதிகமாக விவரிக்கவேண்டாம். நீயும் ஏதோ வேற்று ஞாபகமாக விருக்கிறாய்போலும்?

தமயந்தி:—ஒன்று மில்லையே! தாங்கள் சொல்லிவந்தவனைத்தையுங் கேட்டுக்கொண்டுதானே யிருந்தேன்.

நளன்:—உன் முகத்தைப்பார்த்தா லேதோ யோசித்தவன் போலத் தோன்றியது.

தமயந்தி:—ஆனால், நீங்கள் சொன்னதையுங் கவனித்து வந்தேன்.

நளன்:—ஓ! நீ அவ்வளவுதானஞ் செய்வாயோ? நல்லது. என்னயோசித்துக்கொண்டிருந்தாய்?

தமயந்தி—வேறொன்றுமில்லை. இவ்விதம் பெண்களுக்கு அறிவுவந்தபிறகு மணஞ்செய்வித்தலும், அவர்கள் மனதிற்கிசைந்த மணவாளர்களை வரித்துக்கொள்ளு முரிமையும் மாத்திர மில்லாதிருந்தால்?

நளன்:—(தமயந்தியை முத்தமிட்டு) என்கண்மணியே! நீ சொல்வது உண்மைதான். அஃதோர் பெரிய நன்மையே. நல்லது, எங்கே ஏதேனும் ஒரு சிருங்காரப்பதம் பாடு கேட்போம். உன்கண்டம் இனிமையாயிருக்கிறது.

**தமயந்தி** :—(பாடுகிறாள்)

(ரு) இராகம் - தோடி, ஆதிதாளம்.

பல்லவி.

இன்றுநாளும் உன்னைச்சேர
இறைவனே துறையாகினேன்

அநுபல்லவி.

அன்றென்மனதைக் கொள்ளைகொண்ட
அரசர்தொழுமென் கள்வனே (இன்று)

சரணங்கள்.

1. ஆழிவளையல் போயவே - யினி
யாழிவளைநிலம் தீயவே
மாலையடைந்து வருந்தினேன் - உன்றன்
மாலையடைந்துந் திருந்திலேன் (இன்று)

2. கோலெடுத்தேமன்னர் இறைவனாய்-இச்செங்
கோலெடுத்தாய் என்றன்நிறைகொண்டாய்
மாமலைபிடித் துயர்த்தினை - நன்று
மாமலர்முடித் தயிர்த்தனை (இன்று)

3. நீதியுடைய நிடதர்கோனே - இவ்
வாதையோவினித் தாங்கிடேன்
பீதியேயுடைப் பேதையேன் - எனைப்
பேணுதலுன்றன் பெற்றியே. (இன்று)

**நளன்** :—(திடுக்கிட்டு) ஆ, என் கண்ணே! உன்னிடத்திருந்த மோகத்தால், குடிகளையும், நாட்டையும் விட்டுவந்திருக்கிறோமே என்றுகூட யோசியாமல் நெடுநாளிருந்துவிட்டேன். இப்போழுது நீ பாடியபாட்டால் நினைப்பூட்டப்பட்டேன். என்குடிகளெல்லாம் என்னைக்கண்ணெனக் கருதியிருக்கிறார்கள். ஆதலால், நானிங்கிருத்தல் அவர்களுக்குக் குருட்டுத்தனத்தை யுண்டு பண்ணுமன்

ரோ? அவர்கள் ஆயனிழந்த ஆட்டுமந்தையாய் விடுவார்க ளாதலால் இக்கணமே என்நாடுபோகவேண்டும். நாளைக் காலையிலேயே நான் உன் தாய் தந்தையர்களிடம் விடைபெற்றுக்கொண்டு போகவேண்டும்.

தமயந்தி :—(வருத்தத்துடன்) நாதா! அவ்விதஞ் சொல்லக்கூடாது. நானிங்கு தனித்திரேன். தயவுசெய்து தங்களுடனே என்னையு மழைத்துச்செல்லுங்கள்.

நளன்:—காந்தாமணி! உன்னைவிட்டு நான் நெடுநாட் பிரிந்திருக்கத் தரிப்பேனே? இருந்தாலும் வேறு புத்திரபாக்கியம்கூட இல்லாமல் உன்னையே கதியென்றெண்ணிப் பெற்றுவளர்த்தவர்க ளாகின்றனரே, உன் தாய் தந்தையர்! அவர்களைவிட்டு இருந்தாற்போலிருந்து நீ பிரிந்தால் மெத்தத்தவிப்பார்களே யென்று பார்த்தேன்.

தமயந்தி :—(வருத்தத்துடன்) நாதா! தாங்கள் சொல்வது மிகவும் சரியான விஷயமே. ஆனால், என்றிருந்தாலும் பிரிய வேண்டியது தானே ஒருநாள்?

நளன்;—நல்லது. அப்படியாயின், நீ பொழுது விடிந்தவுடனே உனது தந்தை தாயர்கள், தோழிமார்கள், உன்னை எடுத்து வளர்த்த செவிலித்தாயர்கள் முதலியவர்களிடத்தும் விடைபெற்றுக்கொண்டு புறப்படச் சித்தமாயிரு. நானும் அவ்விதமே ஆயத்தப்படுகிறேன்.

தமயந்தி :—(வருத்தத்துடன்) நாளைத்தினமேயா? இன்னும் இரண்டு தினங்க ளிருக்ககூடாதா?

நளன் :—கண்மணியே! அதற்காகத்தான் உன்னைப்பின்னல் வரச்சொன்னது. உனக்கும் திடீரென்று உன் ஜனங்களைப் பிரிவதென்றால் வருத்தமாகத்தானிருக்கும். அவர்களுக்கு மவ்வண்ணமே. ஏதோ, என்னிடத்துள்ள அன்பா லவ்விதம் சொல்லுகிறாயே தவிர அவர்களிடத்து வி

டைபெற்றுப் பிரிந்துவருவது கடினந்தான். நாளடைவி ற்றான் தேற்றிக்கொண்டு வரவேண்டும். நாரே, இனி ஒருதினங்கூட என்றுட்டைவிட்டுத் தனித்திரேன். உன் னைப்பிரிதல் எக்காலத்திலும் முடியாதாயினும், சம்மதிப் பேன். ஆதலால், சில தினங்கள் கழித்து நீ வக்துசேர்.

தமயந்தி :—நாதா! நான் தங்களைவிட்டுக் கால்விநாடியு முயிர் தரியேன். அதனால், என்னகஷ்ட மிருந்தாலும், தங்க ளுடன் புறப்படச் சித்தமாயிருக்கிறேன். என்னைவிட் டுப் போகக்கூடாது. என்ன, சரிதானா?

நளன் :—நல்லது. அப்படியே யாகட்டும். ஆனால், தாமதிக் கக்கூடாது. சூரியனுடன் நாமும் இரதமேறவேண்டும்.

தமயந்தி :—அப்படியே செய்கிறேன். (போகிறாள்—திரும்பி) நாதா! ஓர் அநுமதிமட்டுங் கொடுக்கவேண்டும்.

நளன் :—என்ன? எதாயினுஞ்சரி. சொல்.

தமயந்தி :—என்னுடன் இளமைப்பருவந்தொட்டு வளர்ந்து வந்த தோழியொருத்தி யிருக்கிறாள். அன்று நீங்கள் கன்னிமாடத்தில் வந்திருந்தபொழுது என்பக்கத்திலி ருந்தாளே—அவள். அவளை நம்முடன் கூட்டிப்போய் அவளுக்குத்தக்க புருஷனைத்தேடி மணம்புரிவித்து, நம் அரண்மனையிலேயே வைத்துக்கொண்டு எனக்கு நடக்கு முபசாரங்களனைத்தும் அவளுக்கும் நடக்கும்படி செ ய்யவேண்டும்.

நளன் :—இதுதானா? தடையென்ன விருக்கிறது? எத்தனை பெயர்களை யென்றாலுங் கூட்டிவா, பாதகமில்லை.

தமயந்தி :—சரி. நான்போய்ச் சித்தமாயிருக்கிறேன்.

நளன் :—தாமதிக்கக்கூடாது. நானும் இதோபோய் ஆகவே ண்டியதைப் பார்க்கிறேன். [போகிறார்கள்.

# மூன்றாங்களம்.

---

இடம் : குண்டினபுரத்தில் வீமனரண்மனையி லந்தப்புரம்.

காலம் : காலைப்பொழுது.

பாத்திரங்கள்: காஞ்சனமாலை, தமயந்தி வீமராஜன்.

வீமன் :—குழந்தாய்! ஆனால், உன் பர்த்தா இப்பொழுதே புறப்பட வேண்டுமென்றதானு சொல்லுகிறார்? இன்னும் சில தினங்களிருந்து போகக்கூடாதோ?

தமயந்தி :—அப்பா! அவரும் தங்களைப்போல ஓர் அரசரல்லரோ? அவர் தம் நாட்டைவிட்டு இவ்வளவு காலமிருந்ததற்கே வருந்துகிறார்.

காஞ்சனமாலை :—அவர் சொல்வது நியாயந்தான். நீ இன்னும் கொஞ்சநாளிருந்து போகக்கூடாதோ?

வீமன் :—பேதாய்! அவளென்பதினியேது? இனி அவள் அவருடைய அடி நிழல்தானே?

காஞ்சனமாலை :—என்கண்மணியே! உனது ஐயர்சொல்வது உண்மைதான். நீ இவ்வளவு புத்திசாலியாகி இத்தகைய அழகும், அறிவும், அந்தஸ்தும் கூடிய அகமுடையானை அடைந்து ஆயுளையும் பெற்று வாழவேண்டு மென்றுதானடியம்மா, நான் இரவும் பகலும் ஈசனைத் துதித்தது! இனியும், ஒரு குறையுமின்றி வாழ்வாய் இருந்தாலும், பெற்றமனம பித்துத்தானேயம்மா! ஐயோ! 'இருபுறம் சேடியர் சூழ்ந்து, ஒருபுறம் திரும்ப ஓராயிரம் சிலதி

யர்கள் கைகட்டி வாய்புதைத்து ஆக்கினைக் கெதிர்பார்த்திருக்க, எறிய புஷ்பசயன மிறங்காமலும், கொஞ்சமேனும் கண்கலங்காமலும், பாதுகாத்தோமே! இப்பொழுது, இடம், பொருள், ஏவல் யாவும் புதியனவாகவுள்ள விடத்திற்குப் போகிறாயே, என்று மனம் தளர்கிறது. ஆனால், அவ்வரசர் நற்குணமுடையவர். உன்னுடைய முகம் கோணக்காணார். இருந்தாலும் எங்களுக்கு வருத்தமாகத்தானே அம்மா இருக்கும்?

**தமயந்தி** :—அம்மா! (வருத்தத்துடன்) தங்களைப்பிரிய எனக்கு மனம் வருமா? நினைக்கும்பொழுதே என்மனம் பதைக்கிறதே! ஆயினும், என் கடமையை நான் நிறைவேற்ற வேண்டாமா? ஆதலால், நீங்கள் கொஞ்சமேனும் கவலைப்படவேண்டாம். ஏதோ நான் வேற்று நாட்டிற்குப் போய்விட்டேன் என்றும், தூரதேசமென்றும் எண்ண வேண்டாம். நான் இங்கு அடிக்கடி வருகிறேன். நீங்கள் பார்க்கவேண்டுமானால், ஒருகிள்ளையின் கழுத்தி லோலையைக்கட்டி யனுப்பினாலும் உடனே அனுமதி பெற்றுக் கொண்டு வந்து சேர்வேன். தாங்கள் என்னைப் பெற்று வளர்த்த பெரும்பேற்றிற்கு இந்தக்கைம்மாறுகூடவா நான் செய்யாது போவேன்? விசனப்பட வேண்டாமம்மா.

**காஞ்சனமாலை** :—அம்மா! நீ இவ்வளவு தூரம் நேர்த்தியாய்ச் சொல்லிவிட்டாய். உன்னுடைய வார்த்தைகளைக் கேட்கும்பொழுதே இந்த மதுரமான வார்த்தைகளை இனி என்று கேட்கப் போகிறோமோ வென்று விசன மென் தொண்டையிலடைக்கிறதே! நினைக்குமுனனே கண்ணீர் என் கண்ணைப் புதைக்கிறதே! வாயில் வார்த்தை தடுமாறுகிறது. என்செய்வேன்? நீ உன் கணவனிடம் போகவேண்டியது நியாயந்தானென்று ஒரு பக்கந் தோற்றுகிறது

ஐயோ! எங்களுயிருக் காதாரமாகிய உன்னைவிட்டு எவ்வாறு உயிர் தரிப்போமென்று ஒருபக்கம் தோற்றுகிறது. என்ன செய்வோம்? இனி ஒரு நல்லநாள் பெரியநாளென்றால் யாரை உத்தேசித்துக்கொண்டாடுவோம்? என் கண்ணே! ஒரு வருஷத்தில் எந்த நாள் வந்தாலும், நம்மூரில் எந்தத்திருவிழா வந்தாலும், எந்த அரும்பொருளைக்கண்டாலும் உன்னினைவு வருமே! நிலா நாள் வந்தால், உன்னுடைய தோழியர் குழாத்துடன் நீ விளையாடுவது நினைவிற்குவரும்! இருள் நாள் வந்தால், ஒளிந்திருந்து உன்தோழியரைப் பயமுறுத்துவையே அது நினைவிற்குவரும்! மல்லிகை பூக்குங்காலத்தில் உன் கூந்தல் என்முன்வந்து நிற்குமே! பூங்காவனத்திற் கினிப் போகேன்! ஆஸ்தான மண்டபத்தி லடியெடுத்து வையேன்! உன்கன்னிமாடங்காணேன்! இனிநல்லபடுக்கை கொள்ளேன்! இவ்வளவு செய்தும் அவையாவும் உன்னைப்பிரியும் பிரிவிற்காறுதலாமோ? (பிலாபித்தப்பாடுகிறாள்).

இனியே தெனக்கு முளதோ விகத்தி லுனையே
    பிரிந்து மகளே
தனியே யுழன்று தளர்வுற் றிருந்து தரியே
    னினிப்பு வியின்மேல்
கனிவாயி லுற்ற கலையும் முகத்தி னெழிலுங்
    கடைக்க ணளியு
மினியென்று காண்ப னிதுவோவு னன்னை தனைநீ
    மதிக்கு மியல்பே. (௰௫)

அன்றுநம் மமைச்சர் தாமு மழைத்திட வழுது நீயுஞ்
சென்றிடேனுன்னை யன்றிச்சென்றிடேனன்னேயென்று
யின்றையுன் றலைவனுன்னை யிங்கு விட்டகல்வா யென்று
லுன்றனை யீன்ற நானு முடன்வர வேண்டா யென்றோ?
(மூர்ச்சையாகிறாள்).

தமயந்தி :—(அன்னையை யெடுத்தணைத்தேற்றி) தாயே! நீயே னிவ்வளவு வருத்தப்படவேண்டும்? என்னை வளர்த்துச் சீராட்டிப் பாராட்டி, என்பொருட்டே இரவிற்றுயிலை வெறுத்தும், பகலில் நல்லுணவருந்தாமலும், எப்பொழுதும் பத்தியமிருந்தும், என் நன்மைக்காகவே விரதமிருந்தும், ஈயெறும்பு வாராது பார்துகாத்தும், உன்வயிற்றையுங்குறைத்து என்னைவளர்த்து, என்பொருட்டு நேரிடும் பொல்லாப்புக்களனைத்தையும் பொறுத்தும் வளர்த்த என்னம்மா! உன் மனங்கோண நான் சகிப்பேனோ? நீ தளராதே. தாய் செய்யுமுபகாரத்திற்குக் கைம்மாறு செய்தலுங்கூடுமோ? அதைவிட, நமக்கு ஜீவாதாரமாகிய நீரை வஞ்சகமின்றி வலியக்கொடுக்கும் மேகத்திற்கு அதிசுலபமாய்க் கைம்மாறு செய்துவிடலாம். (பாடுகிறாள்).

"ஈன்று வளர்த்த தாய்தந்தைக்
கெவரே கைம்மா றியற்றிடுவார்
ஆன்ற மதலை நூறுவய
தளவு மடிமைத் திறம்பூண்டு
மூன்று புவனத் துள்ளபொருண்
முற்று மளித்து முறைமுறையே
என்று வழிபா டியற்றிடினு
மொருநாள் வளர்த்தற் கிணையாதே." (௰௫)

ஐயோ! இத்தகைய தாயின் மனம்வருந்த நடக்கும் குழந்தைக்கு, இன்ன நரகந்தானென்றும், இன்ன அநுபவந்தானென்றும், மூதறிவுடையோர் விதித்திலர், அவ்விதக் குழந்தைகளிருக்க முடியாதென் றெண்ணியேபோலும்! அத்தகைய பாதகத்தையோ நான் செய்வேன்? அம்மா! என்னை மன்னித்து, உன் மனதையுந் தேற்றிக் கொண்டு எனக்கு உத்தரவுகொடு. நீ நமது அப்பாப் பக்க

த்தி லிருக்கவேண்டியது இன்றியமையாதது. (பாடுகி றாள்.)

தாயொடு தந்தை சுற்றந் தயைரைப் பிரிந்திட்டாலும்
ஆயவாழ் வனைத்தும் பாழா யாருயிர் துறந்திட்டாலும்
நேயமா யிருந்துவாழ்ந்த நேரிழை தனக்குக்கொண்ட
நாயகர்ப் பிரிதலாமோ நவில்கவெற் பெற்றவன்னே!

வீமன்:—காஞ்சனம்! குழந்தை தன்னுடைய கடமையை உனக்குக் கூறுவதுபோற் குறிப்பித்து விட்டாள். ஆதலால், இல்விதம் ஒருவரோ டொருவர் துயரப்படுவதிற் பயனென்ன? அரசரோ போகவேண்டு மென்கிறார். நாழிகையும் ஆகிறது. இனி நாம் துயரப்படுவதென்றால், நம் துயரமென்று தான் முடியும். நம் துயரக்கடலுக்கு ஆழமேது? நாம்தாம் அக்குழந்தைக்குப் பாத்தியஸ்தர்களென்று எண்ணியிருந்ததே பேதைமையன்றோ? அவ்வித உரிமைகொண்டாடுங் காலஞ் சென்றுவிட்டது இனி அனுபவிக்கப் பாத்தியம் பெற்றவரை அவள் சேரவேண்டியது நியாயந்தானே? திருமகள் திருப்பாற்கடலிற்பிறந்தாள். எனினும், திரிப்பாற்கடலுக்கென்ன வுரிமை? உரிமைபெற்ற திருமாலை யடைந்தாள்! ஆனால் அத்திருப்பாற்கடலுக்கு ஒரு பாக்கியம் கிடைத்தது; தன் பெண்ணையும் மாப்பிள்ளையையும் தன்னிடத்திலேயே வைத்துக்கொள்ளும்பாக்கியம். நமக்கு அஃதில்லை. சாதாரணமாய்ப்பார். ஒரு மல்லிகைக்கொடியானது, தோட்டக்காரனால் நீர் வார்க்கப்பெற்று, கொழுகொம்பிடப்பட்டு, அக்கொழுகொம்பி னாதரவாற் படர்ந்து அரும்பி மலர்கிறது. இருந்தாலும் அம்மலர் அதிலேயே தங்குகிறதா? அனுபவிக்கத் தக்கவர்களன்றோ அனுபவிக்கிறார்கள்? அக்கொடி, 'நான் வளர்த்தேனே, என்னிடத்துத்தா னிருக்கவேண்டும்' என்கை பேதமைதன்றோ?

அதுபோலவே, நம்மலர்போன்ற தமயந்தி, அனுபவிக்க உரிமைபெற்ற நளராஜருடன் போவதை நாமேன் கொடியராயிருந்து வருந்தித் தடுக்கவேண்டும்? என்றைக்குமே பெண்ணைப்பெறுதல் பெருந்துன்பந்தான். பிறந்தால், வளர்த்துத் தக்க மணவாளனைத் தேடிக்கொடுக்க வேண்டுமேயென்னும் விசாரம். பிறகு, இளவயதுமுதல் அருமையாய்வளர்த்த பெண்ணைப்பிரியும் விசாரம். பிறகு, அவள் கணவன் சொற்றவறாது நடந்து, 'இவள் நல்ல குலமகள்' என்று கணவனைச் சேர்ந்தவர்களும், மற்றுமுள்ளவர்களும் கொண்டாட வேண்டுமே யென்னும் விசாரம்.' இவ்வண்ணம் முற்றும் விசாரந்தான். அதிலேயும், (விசனப்பட்டுக்கொண்டு) புத்திரசம்பத்தில்லாத நம்போலியர்களுக்கு மிகத்துயரமாய்தானிருக்கும். இருந்தாலும், நடக்கவேண்டிய காரியம் நடக்கவே வேண்டும். அபசகுனம்மாதிரி அழக்கூடாது. தேற்றிக்கொள். குழந்தைக்கு வேண்டிய பதார்த்தங்களை மறவாது எடுத்துக்கொடு.

காஞ்சனமாலை :—அம்மா, தமயந்தி! ஐயோ—அதோ சீவனற்று நிற்கிற உன் தோழி மோகனத்தையுமா விட்டுப்போகிறாய்? ஐயோ—உன்னைக் காணாவருத்தத்துடன், அவள் கோலத்தையும் நான் பார்த்துச் சகிப்பேனா? அவள் உயிரிழந்தாலு மிழப்பளே!

தமயந்தி :—அம்மா! நானவளை யவ்விதம் விடவில்லை. அவளை என்னுடன் கூட்டிப்போக என் நாயகரிடம் அனுமதி வாங்கிவிட்டேன். அவளைத் தக்கபடி வைத்து நடத்துகிறேன். நீ கவலைப்படவேண்டாம்.

காஞ்சனமாலை :—அப்படியா? அவர் அனுமதிகொடுத்தாரா? ஆனால், அவர் கொடுக்கக்கேட்பானேன்!

சேவகன் வருகிறான்.

சேவகன் :—ஸ்வாமி! நளமகாராஜர் தமது வரவைத் தெரியப் படுத்தச்சொன்னார்.

வீமன் :—நல்லது, வரட்டும். [சேவகன் போகின்றான்
அரசன் எழுந்து) தமயந்தி! உனது சாமான்கள் யாவற்றை யும் மறவாதெடுத்துக்கொள். அநேக சேனைகள், பரிசு கள், சீர்கள், வேலையாட்கள், நகைகள் முதலியன நான் உன்னுடன் அனுப்புகிறேன்.

தமயந்தி :—(கண்ணீர்விட்டு) அப்பா! தங்களை நான் எவ்விதம் விட்டுப்பிரிவேன்? (வீமனும் கண்ணீர்விடுகிறான்)

காஞ்சனமாலை :—குழந்தாய்! என்னசெய்கிறது? அழுவதிற் பயனில்லை. கண்ணைத்துடைத்துக்கொள். புறப்படும்பொ ழுது அழவேண்டாம். வா போகலாம். [போகிறார்கள்.

நளன் வருகின்றான்,

(வீமனை நமஸ்கரிக்கிறான்.)

வீமன் :—கல்யாணமுண்டாவதாக! வாருங்கள். உட்காருங் கள். குழந்தை தாங்களூருக்குப்போக விரும்புகிறீர்க ளென்று சொன்னாள். தாங்களின்னும் சில தினங்களிரு ந்து போகக்கூடாதோ?

நளன் :—நான் நாட்டைவிட்டு நெடுநாளாகி விட்டபடியால் இனித்தாமதித்த லமையாது. ஆகவே தங்களுடைய உத்தரவு பெறவந்தேன்.

வீமன் :—ஆனாற்போய்வாருங்கள். நீங்கள் சகலகலையுங் கற்ற வர்கள். உங்களுக்கு நான் சொல்லவேண்டிய தொன்றுமி ல்லை. ஆயினும், பெண்ணைப்பெற்ற பேதையேனாதலின், இரண்டொரு வார்த்தை சொல்லத் துணிந்தேன். தங் கள் மனைவி யெங்குழந்தையை மலர்போல் வளர்த்தோம். ஆனால், அனுபவிக்கத் தகுந்தவரிடமே தாம் கொடுத்

தோம். ஆயினும், மலரின் நயங்கூறுதல் மலர் விற்பான் கொள்கையன்றோ? இம்மலர், மோவாமலே குழையும்; வெம்மையின்றியே வெதும்பும்; வெகு இளேது. அவள்-பசிபொருள், குழந்தை. ஒருவரை வேலை செய்யென்று சொல்லவுங் கூசுவாள். புத்திசாலியாயினும் பெண்பேதை. படித்துளா ளாயினும், பால்ய மாதலின் அந்நிலையில் நிற்றல் கடினம். ஆதலின், அவளைத் தகுந்தவாறு வைத்துக் காக்கவேண்டும்.

**நளன்**—மாமா! கொஞ்சமேனும் தமயந்தியைக்குறித்துக் கவலை கொள்ளவேண்டாம். ஆனால், நான் இப்பொழுது சொல்வது சரியன்று, பின்னால் யாவும் நாளடைவில் தங்களுக்கே தெரியும்.

**வீமன்**:—மகா புத்திசாலி! தாங்களறியாததென்ன? நாங்கள் அவளைவிட்டுப் பிரிந்திருப்பதை நினையாவண்ணம் அவளும் தாமும் அடிக்கடி இங்குவந்து போகவேண்டும். எனக்கு அவள் ஒரே பெண்தான். ஆனால், அவள் பெண்ணாய்ப்பிறந்தது நல்லதாயிற்று. பிள்ளையாய்ப் பிறந்திருந்தால் எப்படியாயிருக்குமோ? பிள்ளை நல்லவனாகவேயிருந்தாலும், ஒருபிள்ளைமட்டுந்தானே யிருந்திருக்கும். பெண் வாய்த்ததினால், மகா சீலரும் குணசாலியுமாகிய தாங்கள் எனக்கு மகிமைபொருந்திய பிள்ளையாகக்கிடைத்தீர்கள். ஆகவே, உத்தமமான பெண்ணொன்றும், பிள்ளையொன்றும், ஆக இருவராகி விட்டீர்கள்.

**நளன்**:—ஏதோ தாங்களிவ்வளவுதூரம் புகழ நேர்ந்தது என் பாக்கியமென்றே நினைக்கவேண்டும். தாங்கள் கேட்டுக்கொள்ளும் வண்ணமே அடிக்கடி வந்து தங்களைப்பார்த்துப்போகிறோம். இப்பொழுது நாழிகையாகிவிட்டது. சீக்கிரம் பயணம்பண்ணி யனுப்பவேண்டும்.

வீமன் :—சகலமும் சித்தமே. எல்லாப்பரிவாரங்களும் ஆசார வாசலிற் காத்திருக்கின்றன. ஆதலின் நாம் போகலாம். தாங்கள் ஊர்சேர்ந்த தினம் முதல் ஒவ்வொரு நாளைக்கு மொவ்வோர் அஞ்சலாள் உங்களுடைய க்ஷேமத்தை யெனக்குவந்து சொல்லவேண்டும்.

நளன் :—அவ்விதமே செய்வேன். எல்லாரும் வந்திருப்பார்களா? நாம் போகலாமா?

வீமன் :—ஆம். போவோம். [போகின்றார்கள்.

முதலங்கம் முற்றிற்று.

# அங்கம்—உ.

## முதற்களம்.

இடம்: குண்டினபுரத்திலொரு தெரு.
காலம்: முற்பகல்.
பாத்திரங்கள்: ஊர்க்குடிகளி லிரண்டு பிராம ணர்கள்.

நீலகண்டாசாரியர்:—அடாடாடா! வாமனதீக்ஷதரா? எது இப்படி?

வாமனதீக்ஷிதர்:—ஒஹோ நீலகண்டாசார்யாளா? இப்படித் தான் நெலங்களைச் சுத்திப்பாத்தூட்டுவர்ரேன்.

நீல:—என்ன ஸமாசாரம்? பயிருகள்ளாம் எப்படியிருக்கு? பூராவெளச்சத்தானே?

வாம:—இந்த மகான் நளராஜனுடைய ஆளுகையிலே என்ன கொறவு? இவர் ராஜாவா வந்தகாலம் மொதல் எந்தவரு ஷம் மூப்போக மில்லாதெருந்துது?

நீல:—இவர் பெரியவாகாலத்துமேதான் என்னகொறச்சல்? அப்பவும் இப்படித்தானும். எங்கபிதாமகன் சொல்லி யிருக்கார்.

ஒரு வேளாளன் வருகின்றான்.

வேளாளன்:—சாமி! சேவுகம். (கும்பிடுகிறான்)

வாம:—மகராசனுயிர்ரா. (நீலகண்டரைநோக்கி) இந்த ராஜாவுக் குத் தகுந்தாப்படலே ராணியும் வந்தமஞ்சாளே!

வே:—ஆமா, சாமி! அவுக மெத்த அளகு, மொத்தக்கெட்டிக் காரிங்களுங் கூடவாஞ்சாமி.

வாம :—வாஸ்தவந்தான். நம்ம பொம்மண்டாட்டிகள்ளே ஆர்போனாலும் தடையில்லாமெ உள்ளெ போகலாமாம். ஆராயிருந்தாலும் ரொம்ப மரியாதை பண்ணி அபிமானத்தோடெ பேசிக்கிண்டிருந்தூட்டுப் போரபோது தவறாமல் பாக்கு வெத்தலையோடெ தெக்ஷணையுங் குடுத்தனுப்பறாளாம்.

நீல :—அவளென்ன அல்பஸ்வல்பமா? அவளொரு ராஜா பொண்ணில்லியோ? அல்பங்சளாயிருந்தாவேண்ணா இது ஒரு அதிசயம்.

வாம :—ஆருக்கு என்ன வியாகூலம்னாலும், ஒடனே அதை நிவர்த்திக்கிறாளாமே?

நீல :—அவளுக் கென்ன கொறச்சல்? ஆஸ்திபாஸ்தி கொறவா? ஆள்மாகாணங்கொறவா? இல்லெ, நல்லமனசுதானில்லையா? அவள் மகராஜி! அவளுக்கு ஒரு கொறவுமில்லெ. ஆனதுனாலெதான் பிறந்தியாரிடத்துலேயும் கொறையிருக்கக் கூடாதுங்கற எண்ணம்.

வே :—எஞ்சாமி! நம்மராணியோடுகூட அவுகமாதிரியே, இன்னொரு அம்மாபோகுதே; அவுக ஆருசாமி?

நீல :—அவளாரு? நான் பார்த்ததில்லையே?

வாம :—அவள் நம்மராணிக்குப் பிராணசகியாம். அவளில்லாமெ இவகானாழிகூட இருக்கமாட்டாளாம். அவாரெண்டுபேருக்கும் ஒரேவிதமான மரியாதை நடக்கணும்னு ராணி எல்லாருக்க்கும் உத்தரவு செய்திருக்காளாம்.

வே :—அப்படியா, சாமி? அப்படியும் செநேகிதமுண்டா சாமி? அதுலெயும் பொம்புள்ளெகள்ளே?

நீல :—ஏன்? பொம்புள்ளெகளுக்குத்தாண்டா மனசு எளகின மனசு.

வாம:—அந்த அம்மாவும் ராணியெப்போலயே ரொம்ப நல்ல வளாம். அநேகந்தடவைகள்ளே ராணிக்கு அவபுத்தி சொல்ருளாம். ராணிக்கு அவள்ளுக்கே ப்ராணனும்.

நீல:—அப்படியில்லாட்டா அவளெ இந்தப் பதவியிலெ வைப் பாளா?

வே:—எஞ்சாமி, அந்தம்மா புருசங்கிருசங் கட்டிக்கிறல் லியோ?

வாம:—இங்கே வந்துதான் கல்யாணம் பண்ணிக்கிண்டா. நம்ம ராஜாவுக்கு ரொம்ப அந்தரங்கமாய் ஒரு பிராமண ரிருக்காரே அவரைத்தான். கல்யாணங்கூட அமக்களமா நடந்துதேடா? அப்பொ நீ ஓம்மச்சாங் கல்யாணத்துக் குப்போயிருந்தே?

வே:—சரிதான்-இப்படி நமக்கொரு செநேகிதன் கெடச்சிட் டாப் போதுஞ் சாமி!

வாம:—கெடெக்கும், கெடெக்கும்.

நீல:—நம்ம ராஜாவும் ராணியும் இப்படி யிருக்கிறத்துக்கு இன்னம் ஒருகொழந்தை பொறக்கல்லியே? நல்லவாளு க்கும் இப்படி எதாவது ஒரு கொறவுவந்துசேர்ரதே!

வே:—இந்த மனிசப் பிறப்புலியே அப்படித்தானேசாமி. பகவாந்தான் இம்பமூந் தும்பமும் மாறிமாறிவரும்படித் தானே செய்யிருன்? ஆராயிருந்தாலும் நெஞ்சீர லில்லாமெப் போகுதில்லெ சாமி! நமக்கொரு துக்க மிண்டா அவுகளுக்கொரு துக்கம். நமக்குக்குடிக்கத்தண் ணியில்லே, புள்ளெகுட்டியள்ளாம் ஏராளமாயிருக்குது அவுகளுக்கு வேண்டியதிருக்கு, புள்ளெகுட்டியில்லெ. பகவாந்தான் ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு கொறை வச்சிருக்கிருனே? அப்படியில்லாமெத்தான் போச்சு- இவுகன்னுப்பலே, கடவுளெத்தொளுவாகளாசரியா? ஆனு நம்ம ராஜா அப்படியில்லியே? மெத்த நல்லவுகளாச்சே?

அந்தம்மாவும் அப்படித்தானே ?—ஏதோ,— கடவுளெ ன்ன எண்ணிக்கிட்டிருக்காரோ திருவுள மெப்படியோ, யார் கண்டாக ;

வாம :—ஒங்களுக்கு ஸமாசாரமே தெரியாதோ, இவ்வளவுவர்த் தப்பட்ரேள் ? நம்மராணி ஆறுமாஸங் கர்ப்பமிங்கறதே தெரியாதோ ?

வே :—அப்படியா சாமி ? ஆமா, என்னன்னாலுந் தெய்வங் கண்ணில்லாமையாபோயிரும் ? அவுக இருக்கிற மாதிரிக் கிப் புள்ளெதான் இல்லாதெ போய்ச்சிண்டா, தெய்வந் தான் என்ன தெய்வம் ?

நீல :—நெஜமாத்தானு என்ன ? கர்ப்பமா ? எனக்குத்தெரி யவே தெரியாதே ?

வாம —நீக்கூதாளுக்குத் தெரியாதெ அந்த விஷயங்கூடவா நடக்கப்படாது ? போனமாஸந்தானா வளகாப்புநடந் தது. அப்பொ ராணிகூட அவபொறந்தாத்துக்கும்போ னளே ? பொறந்தாத்துலே யிருந்துவந்ததும் நம்மூர்ப் பொம்மண்டாட்டிகளுக்கெல்லாம் பொன்வளே குடுத் தாளே ?

நீல :—நான்—நான் ஊருலேயில்லியோ ?

வாம :—ஆமான்னு. எது நீங்கதாம் - 3 - 4 - மாஸமா அப் படீ சுவஸ்ருக்ருகம்—அந்த சுகத்துலேயேயிருக்கேளே ? சரி, எனக்கு நாழியாச்சு. ரொம்ப சிரமமாயிருக்கு. ஆத் துக்குப்போறேன்.

நீல :—எங்களுக்குன்னுப்பலே இங்கே நடுத்தெருவுலே என் னவேலே ? வெய்யல் வீணுப்போறதா ? நானும் வர்ரேன்

வே :—சாமி போய்வாரீகளா ? கும்பிட்ரேஞ் சாமி ! (கும்பிடு கிறான்.)

[போகிறார்கள்

## இரண்டாங்களம்.

---

இடம் : குண்டினபுரத்தில் சபா மண்டபம்.

காலம் : முற்பகல்,

பாத்திரங்கள் : நளன், மதியூகி.

**நளன்** :—மதியூகியரே ; நமக்குப் புத்திரோத்ஸவ முண்டான சந்தோஷ சமாசாரத்தைப்பற்றி நமது நாட்டுக்குடிகளுக்கறிவிக்கவேண்டாமா ? அவர்களல்லரோ உண்மையாய் இவ்விஷயத்தி லானந்திக்கக் கூடியவர்கள் ? ஆதலால், உடனே சந்தோஷ பேரிகை முழங்கச்செய்து ஊர் முழுமையு மறிவியுங்கள்.

**மதியூகி** :—அரசே ! அவ்விதம் முன்னமேயே செய்து விட்டேன்.

**நளன்** :—பார்த்தீர்களா ? விதர்ப்பநாட்டிற்கும் நம் நாட்டிற்கும், ஒரு நாழிகை வழிக்கோரஞ்சலாளாக ஏற்பாடுசெய்திருந்ததாலல்லவோ, இவ்விதம் நமக்கு ஒரு ஜாமத்திற்குள்ளாகத் தெரிந்தது ? அவ்வித ஏற்பாடுசெய்த தமக்கு நாங்கள் மிக்க நன்றியுள்ளவர்களா யிருக்கவேண்டும்.

**மதியூகி** :—பிரபோ ! ஏதோ முன்னுளி லேற்பட்ட வழக்கத்தை நானனுசரித்தேனேயன்றி, ஒன்றும் என் சுயபுத்தியாற் செய்ததன்றே ?

**நளன்** :—நல்லது மந்திரியாரே ! ஆண்குழந்தையா ?

**மதியூகி** :—ஆம்.

**நளன்** :—குழந்தைபிறந்த நாழிகையைக்குறித் தனுப்பியிருக்கிறார்களோ ?

மதியூகி :—அனுப்பியிருக்கிறார்கள். இதோ இருக்கிறது அக்குறிப்பு. (எட்டைநீட்டுகிறார்.)

நளன் :—நல்லது. நமதரண்மனை ஜோஸியர்களை வரவழையுங்கள். ஜாதகங்கணித்துப் பலன்சொல்லச்செய்வோம்.

மதியூகி :—புண்யாகவாசனத்திற்குப்பிறகுதான் ஜாதகம் கணிக்கவேண்டு மென்பார்கள்.

நளன் :—பாதகமில்லை. ஜாதகங்கணிக்க வேண்டாம். பிறந்த நாழிகையை வைத்தே பலன் கேட்போம். சீக்கிரம் வரவழையுங்கள்.

மதியூகி :—இதோ வரவழைத்தேன். யாரடா சேவகன்?

சேவகன் வருகின்றான்.

சேவகன் :—ஸ்வாமி! (வாய்புதைத்து நிற்கிறான்.)

மதியூகி :—உடனே ஓடிப்போய் அரண்மனை ஜோஸியர்களை அரண்மனையி லுத்தரவானதாக அழைத்துவா.

சேவகன் :—புத்தி. (போகிறான்)

நளன் :—இந்த வருஷத்துப் பஞ்சாங்க மிங்கிருக்கிறதா?

மதியூகி :—இல்லை. ஆனால், ஜோஸியர்கள் பஞ்சாங்கமில்லாமல் வரமாட்டார்கள்.

நளன் :—சரி. இன்றை நக்ஷத்திரமென்ன?

மதியூகி :—பிரபோ! இன்றைத்தினம் பரணி நக்ஷத்திரம்.

நளன் :—நல்ல நக்ஷத்திரந்தான்போ லிருக்கிறதே?

மதியூகி :—தடையென்ன? பரணிநக்ஷத்திரம் தரணியாளுமென்பது வாக்கியம்.

நளன் :—அப்படியா?

நாகேசபட்டரும், நாராயணபட்டரும் வருகின்றார்கள்.

இதோ ஜோஸியர்களும் வந்துவிட்டார்கள். வாருங்கள் ஜோஸியர்களே! (வந்தனம்பண்ணி) இவிடத்திலுட்காரவேண்டும்.

**நாகேச-நாராயணபட்டர்கள்** :—ராஜராஜேந்திரா! ஸர்வமங்களமுண்டாகுக! புத்திரோத்ஸவமா?

**நளன்** :—ஏதோ எல்லாம் தங்களைப்போன்ற வேதப்பிராமணர்களுடைய ஆசீர்வாதந்தாம்.

**நாராயணபட்டர்** :—மகராஜராயிருப்பீர்! உமக்கென்ன குறைவு?

**நளன்** :—இதோ நம்குழந்தையின் ஜனன நாழிகைக் குறிப்பு வந்திருக்கிறது. (எட்டைநீட்டி) அதைக்கொண்டு பலன் சொல்லவேண்டும்.

**நாகேசபட்டர்** :—(நாராயணபட்டரிடம் ரகசியமாய்) புண்யாகவாசனத்துக்குமுன் பலன் சொல்லலாமோ?

**நாராயணபட்டர்** :—(கோபத்துடன் மெதுவாய்) சரிதாங் காணும் உமக்குத்தான் சமயாசமயங் கிடையாதே? ராஜாபார்க்கணும்னு துரிதப்பட்டார், இப்போ 'அஸ்து அஸ்து' இன்னுகிண்டு; பேசாதை யிருங்காணும்.

**நாகேசபட்டர்** :—நான் பேசல்லே.

**நளன்** :—என் யோசனையென்ன?

**மதியூகி** :—ஒன்றும் யோசிக்கவேண்டாம், பார்க்கலாம்.

**நாராயணபட்டர்** :—சரி. அப்படியே, இதுதான் அந்தக்குறிப்போ?

**மதியூகி** :—ஆம்.

நளன் :—நல்லது; மந்திரி! இவர்கள் பார்க்கட்டும். அதற்குள்ளாக நான்போய் நீராடி வருகின்றேன். தாங்களும் தானங்களுக்கு வேண்டிய சாமான்கள் சித்தமா யிருக்கின்றனவா என்று பார்த்து எல்லாவற்றையும் தான மண்டபத்திற் சேர்க்கும்படி செய்யுங்கள்.

மதியூகி :—சித்தம். [நளனும், மந்திரியும் போகின்றார்கள்.

நாகேஸபட்டர்:—(குறிப்பைப்பார்த்து) என்காணும்? இதென்னகாணும் ஜாதகம்? பிதாவுக்கு———?

நாராயணபட்டர் :— (மெதுவாய் நாற்புறமும் பார்த்துக்கொண்டு) மௌள்ளங்காணும் மௌள்ள. என்னகாணும் பிதாவுக்கு?

நாகேசபட்டர் :—என்னவாவதுகாணும்? பிதாவுக்காகாது.

நாராயணபட்டர் :—என்னகாணும் ஆகாது? சந்திரலக்னபேக்ஷையாப் பாருங்காணும்.

நாகேசபட்டர் :—சந்திர லக்னபேக்ஷயாத்தான் பாக்கறதோ? நல்ல ஜோஸியர்காணும் நீர்? இன்னம், மாதாவுக்குத்தானென்ன? அவளையுந்தான் பீடிக்கும்.

நாராயணபட்டர் :—நாகேசஜோஸியரே! இந்த லோகத்துக்கே நீர்தாங்காணும் ஜோஸியர்? நானெல்லாம் ஜோஸியனா? நல்லதிருக்கட்டும். குழந்தைக்கு வயஸு வந்ததுக்கப்புறம் ராஜியமாள அதிர்ஷ்டமிருக்கா இல்லையா காணும்?

நாகேசபட்டர் :—ஆமாகாணும். அதுக்குமுன்னாலே?

நாராயணபட்டர் :—(பயமாய்) அதுகடக்குங்காணும், இப்படிச் கஷ்டங்கிஷ்டம்னு சொன்னா ராஜாவும் வருத்தப்படுவர். மந்திரி முதலியவாளும் நம்மை ஙவவா. நமக்குந் சம்பாவனை கெடைக்காது. எப்படியும் நடக்கறது நடந்

துசான்றீரும். ஆனதுனுலே, நாம் ஏதோ ரெண்டு நல்லதைச் சொல்லிப்பிடுவமே?

**நாகேசபட்டர்** :—அப்படிப் பணஞ்சம்பாதிக்காட்டா என்ன காணும்? நம்ம ராஜாவையா நாமேச்சுச்சாப்பட்ராது? போங்காணும், நான் பொய்சொல்ல மாட்டேங்காணும்.

**நாராயணபட்டர்** :— (நாகேசபட்டர் வாயைப் பிடித்துக்கொண்டு) ஒய்! வீணுக்கெடுக்காதையுங்காணும். நான் சொல்றதைக்கேளும். சொல்லவேண்டியதெல்லாம் நான் சொல்லிப்பிட்ரேன். நீர் ஒண்ணையும் ஆக்ஷேபிக்காதையும். சம்பாவனையிலே நீர்பாதி யிடுத்துக்கிண்டேம்.

**நாகேசபட்டர்** :—(வெறுப்புடன்) நீர் என்னவேண்ணுலும் பண்ணுங்காணும்.

**நாராயணபட்டர்** —சரி, செத்தெ வாயை மூடிக்கிண்டிரும். இதோ மகாராஜா வந்துவிட்டார். (இருவரும் எழுந்திருக்கிறார்கள்.)

நளன், பதிபூதி—வருகின்றார்கள்.

**நளன்** :—என்ன ஜோஷியர்களே! என்னஸமாசாரம்? எப்படியிருக்கிறது பார்த்தீர்களா?

**நாராயணபட்டர்** .—இருக்கிறதென்ன? திவ்விய ஜாதகம். நல்ல ராஜஸவேளையிலே, திவ்யமான புருஷப்பிரஜை ஜனனம்.

**நளன்** :—சரி, அப்புறம்?

**நாராயணபட்டர்** :—கிழக்குப்பார்த்த உள்ளே, மூணுவது உத்தரத்துக்கிழே மேற்கு முகமாயிருந்து பிரஸவம்.

**நளன்** :—இருக்கலாம்.

**நாராயணபட்டர்** :—கொடிசுத்தியிருக்கும். ஸோமவாரமானதுனுலே தோஷமில்லை.

**நளன்** :—நல்லது.

**நாராயணபட்டர்** :—குழந்தை அதிக அழகுள்ளது. புத்திசாலி. குணசாலி. வயஸுவந்ததுக்குமேலே மகாயோகசாலியாகவிருப்பான். டையன் தீரன். சௌரியமுடையவன். இராஜியமாள்வான், குடிகளுக்கு ஒருகுறையு மில்லாதபடி. ஒருகுறையமில்லை. சுபம்.

**நளன்** :—நிரம்ப சந்தோஷம். மந்திரியாரே! இவர்களுக்குத் தக்க பரிசளித்தனுப்புங்கள்.

**மதியூகி** :—அப்படியே செய்கிறேன். ஜோஸியர்களே! நமது பொக்கிஷசாலைக்குப் போங்கள். நான் வருகிறேன்.

**நாராயணபட்டர்** :—(போகும்பொழுதேதனக்கேசரிடம்) இப்படி மீனமேஷத்துலேவிட்டு ஜோஷியஞ்சொல்லிப்பிட்டுப் பணத்தையடிச்சுக்கிண்டுபோகாமல், எதோ நடுக்கண்டநியாயம் பொளக்கப்பார்த்திரேகாணும்! அப்படிச்செய்திருந்தா சம்பாவனை தவடையிலேதான். அதெல்லாம் எடமும் ஸமயமும் தெரியணுங்காணும். ஜோஸியந்தெரிஞ்சாப்பலேஆச்சா?

[போகிறார்கள்

**நளன்** :—மதியூகியாரே! நீங்கள் அவர்களுக்கு ஸம்பாவனை கொடுத்துவிட்டுத்தானமண்டபத்திற்கு வாருங்கள். நான் முன்னே செல்கின்றேன்.

**மதியூகி** :—அப்படியே! [போகிறார்கள்.

# மூன்றாங்களம்.

---

இடம் : குண்டினபுரம்.
காலம் : காலை.
பாத்திரம் : கலி.

கலி :—(பாடுகிறான்.)

(ச) இராகம் - முகாரி. தாளம் - ரூபகம்.

1. ஐயோவென் புகழ்போச்சே - அமரர்கள்
வையவு மிடமாச்சே
எப்படி நான் சகிப்பேன் - அவர்முகம்
எப்படிப் போய் விழிப்பேன்

2. என்திரந் தேய்ந்திட்டதோ - ஈசுரன்
தன்வர மோய்ந்திட்டதோ
எத்தனை நாள் முயன்றும் - இவணென
தெத்தனம் பயனற்றதே

3. ஆண்டுமோ ராறிரண்டும் - அவன்றனைத்
தீண்டிட வேயிருந்தும்
ஆணையை மறந்திலனே - அதுகண்டென்
நாணமுந் துறந்தனனே

4. மக்களைப் பெற்றெடுத்தே - மங்கையும்
எக்களிப் புற்றிருக்க
இக்கதி யடைந்திடவோ - இவர்தமக்
கக்கிர மம்நினைத்தேன்

(மௌனம்

(ரு) இராகம்-மாயமாளவகவுளை, தாளம்-மிச்ரகதி

பல்லவி.

ஆறுலு மொருகேடங் குண்டு - நானும்
அநியாய மின்றி யவனைக் கெடுக்க (ஆறு)

சரணங்கள்.

1. அறமதைத் தேய்த்திடு மாட்டம் - அந்த
அண்டர் முனிவ ரகற்றிடு மாட்டம்
மறமதைப் பூண்டிடு மாட்டம் - அந்த
மாயக் கவற்றினை மாற்றிடு மாட்டம் (ஆறு)

2. ஆடிடு மாவலங் குண்டு - அவனுக்
காடுவோ மென்ற அகப்பாவ முண்டு
தேடித் திரிவது முண்டு - தன்னில்
தேர்ந்தவ ரிலரெனும் தெளிவுமே யுண்டு (ஆறு)

3. புஷ்கர னைக்கொண்டு வருவேன் - நானும்
புத்தியும் யுக்தியும் புதிதாகத் தருவேன்
சுட்கனென் றொருநாளும் வெருவேன் - நளன்
சூனிய னுகவே சூதாடப் புரிவேன் (ஆறு)

அ, ஆ! இஃதென்ன வாச்சரியம்! திரிமூர்த்திகள்முதல் என்னுற் பீடிக்கப்பட்டிருக்க, இம்மானுடனே எனக்குத் தப்புகிறது? என்னசெய்வேன்? நானும், 12-வருஷகாலம் இவனைவிட்டுப் பிரியாமலேயிருந்து, இவனுடைய ஒவ்வொரு செய்கையையும் ஆராய்ந்து வந்தும், ஒரு தவறுகூடக்கண்டிலேனே! அவனுடைய நீதி, வாய்மை முதலிய குணங்களையும், அத்தமயந்தியினுடைய கருணை கற்பு முதலிய குணங்களையும் எவ்வாறு புகழ்வேன்? இவர்களிடத் தெவ்வாறு தவறு காண்பேன்? ஐயோ! அப்பொழுது தேவதைகள் சொன்னபொழுதே கேட்டிருக்கக்கூடாதா! இனி அவர்கள்முகத்திலெப்படிப்போய்

விழிப்பேன்? என் யோக்கியதையே போய்விட்டதுபோலும்! சிவபிரான் ஒருவன் நீங்கலாகத் தேவதைகளிலொருவரு மெனக்கிணையில்லை யென்பதைக் காட்டவே சிறப்புப்பட்டமாகிய ஈசுவரன் என்னும் பட்டத்தை எனக்களித்தார்களே தேவர்கள்! அத்தகைய பெருமை இந்த நளனிடத்துச் செல்லவில்லையே! ஒருவேளை நாளானதனுல், எனக்குள்ள பலந்தான் குறைந்துவிட்டதோ? அந்தத்தமயந்தியோ, குஞ்சரம்போன்ற ஓர் ஆண்குழந்தையையும், கிளிபோன்ற ஓர் பெண்குழந்தையையும் பெற்று வளர்த்துப் பிரகாசிக்கிருள். அவர்கள் காரியம் சுகமாகவே நடந்துவருகிறது. நானேன் ஒருவன் இப்படி நடுவிற் கிடந்து தவிக்கவேண்டும்? இவர்களை விடுத்து வெறுங்கையாய்த் திரும்பினுலோ, தேவதைகள் என்னைப் பழிப்பார்கள்! ஆதலால், ஏதேனும் ஓர் அற்பவிஷயத்தையாவதுகொண்டு அவர்களைத் துன்பப்படுத்தவேண்டியதுதான். முத்தண்ணு எமதர்மனே, தவறில்லாதுவருத்திஞல், என்னைத்தண்டிப்பே னென்றிருக்கிருர். (சற்று யோசித்து). கூடியவரையில், தகுந்த காரணமாகக் கேட்டோர் நினைக்கும்படியான தொன்றிருக்கின்றது. இவ்வரசன் சூதாட்டத்திற் பைத்தியங்கொண்டவனெனத்தெரிகிறது. அவ்வாட்டத்தில் தன்னிலும் தேர்ந்தவரில்லையென்னு மகம்பாவம் கொண்டவன். இதைக்காரணமாக வைத்துக்கொண்டு வேலைசெய்யவேண்டியதுதான். ஆதலால், இவன் சிற்றரசர்களில் அதமனுகிய புஷ்கரனிடம் போய் அவனைத்தெரியப்படுத்தி, நளனண்டைபோய்ச் சூதாடச்செய்து, சூதிற்பந்தயம் வைக்கும்படி நளனைத் தூண்டுகிறேன். நளன் வைத்தானே உடனே அதை மறவினையாக்கொண்டு புஷ்கரனுக்களித்து நளனை நாட்டைவிட்டும் ஓட்டுகின்றேன், நானே சநீசுவரனுகில்!

[போகிருன்.

# நான்காங்களம்.

---

இடம்: குண்டினபுரத்துக் கொலு மண்டபம்.

காலம்: காலைப்பொழுது.

பாத்திரங்கள்: நளன், புஷ்கரன், மெய்காவலாளர்.

**நளன்** :—நல்லது, எனக்கு இஷ்டமில்லையாயினும், உமக்கு உற்சாக முண்டாக்கவேண்டி, இதோ என்கைக் கணையாழியைப் பிணையாக வைக்கிறேன்.

**மெய்காவலாளர்** :—(தமக்குள்) இதென்ன அநியாயம்? நம்ம ராஜா பந்தயம் வைச்சு ஆடவே சம்மதியாரே! யாரேனும் அப்படி ஆடுவதாக இருந்தாற்கூட அவர்களைக் கண்டிப்பாரே! இப்பொழுது ஓர் அல்பராஜனோடு பந்தயம்வைக்கச் சம்மதித்து வைக்கிறாரே! இவருக்கு இந்தச் சொக்கட்டானாடுவதிலே மாத்திரம் ஒரு பைத்தியமுண்டு. அதை இந்த ராஜா தெரிஞ்சுகொண்டு, இதுதான் சமயமென்று பந்தயம்வைக்கச் சொல்லுகிறானே! அப்படித்தான் இந்த ராஜன் நளனைப்பார்க்கிலும் கெட்டிக்காரனா? பின்னையேன் அவனுக்குக் கேடுகாலம்?

**புஷ்கரன்** :—நல்லது நானும் என்கணையாழியை வைத்தேன். தங்களுக்கு என்னவிருத்தம் வேண்டும்?

**நளன்** :—எனக்குப் பனிரண்டு வேண்டும்.

**புஷ்கரன்** :—இதோபாரும் இருகால் போடுகிறேன். (உருட்டி) இதோ, இருகாலே விழுந்தது. நீர் தோல்வியடைந்தீர் (தனக்குள்) சனீசுவரன் சொன்னது சரிதான்.

**நளன்** :—நல்லது. பாதகமில்லை. என் காது வயிரக்கடுக்கன் ஜோடிபிணை.

**புஷ்கரன்** :—ராஜக! கடுக்கனும் என்னதாகிவிட்டது. இதோ பாரும் மூணத்தோன்று. (உருட்டுகிறான்) ராஜா! ஆட்டம் ஸ்வாரஸ்யங் கொடுக்கவில்லை. ஆதலால், இனிச்சிறுபந்தயம் வையாமலேதேனும் பெரும்பொருளாக வைப்போம்.

**மெய்காவலாளர்** :—(தமக்குள்) இதென்ன விபரீதமா யிருக்கிறதே! ஏதோ மெள்ள மெள்ள வந்தாலும் மிளகுன்னும் சுக்குன்னும்னு இருக்கே! மொதல்லெ பதினாயிரம் பொன் வெலேயுள்ள நாகரத்ன மெழச்ச மோதரம் போச்சு. அப்பறம் இரவதுனாயிரம் பெறுமான வயிரஜோடியும் போச்சு. இன்னம் பெரிசாப் பந்தயம்வக்கணுமாமே! என்னவிநாசகாலமோ தெரியல்லியே? நம்மமந்திரிகிட்டவாவது சீக்கிரம் தெரியப்படுத்தினன்னுதேவலே. வேறொருவருமில்லியே? நானாவது போய்ச்சொல்றேன்.

[போகிறான்.

**நளன்** :—நல்லது, நான் என் சதுரங்கசேனையையும் வைத்தேன். நீரும் உம்முடையதை வையும். இதோ பாரும், ஈராறு. (உருட்டுகிறான்)

மதியூகி—வருகின்றான்.

**புஷ்கரன்** :—இல்லை. இல்லை. டாகடை விழுந்தது. நீர் தோற்றீர் உமது சேனைகளென்னுடையவாயின.

**மதியூகி** :—பிரபோ! இஃதென்ன வநியாயம்? தர்மப்பிரபுவாகிய தாங்கள் இவ்விதம் சூதாட எத்தனிக்கலாமா? கேவலம் ஒருவேலைக்கு முபயோகப்படாமல், பிறர் தேடிய சொத்தைக்கொண்டு காலங்கழித்துச் சோற்றுக்குக் கேடும் மண்ணுக்குப் பாரமுமாயிருக்கும் துராத்மாக்கள் செய்யும் வேலையன்றோ இது? தாங்கள் இதை மேற்கொள்

ளல் நீதியோ? அதிலேயும், சேனை பரிவாரங்களையோ வைத்தாடுகிறது? ஐயோ! சூதாட்டத்தால் எத்தனையோ தீங்குண்டாகுமே? சூதாட்டத்திற்குப் பொருளீட்ட வேண்டுமென்னு மாசையினால், அறமென்பதே இல்லாது போய், பொய்ச்சத்தியமென்பது வந்துவிடுமே! இப் பொய்ச்சத்தியத்தால் ஜீவகாருண்யமும், அதன் பயனாய புகழும் போய்விடுமே! மறுமையிலும் அழியா நரகத்திற் களாகவேண்டிவருமே! இத்தகைய பொய்யையே மெய்யாகக்கொண்ட சூதைக்கைக்கொள்ளலாமோ? அதிலும் தங்களையொத்த சக்கிரவர்த்தியோ கைக்கொள்வது? வேண்டாம். போதும், நிறுத்திவிடுங்கள்.

நளன் :—மதியூகியாரே! என்னபதறுகிறீர்? அரசர்களுக்குச் சொக்கட்டாறுடுவது ஒருவகைப் பொழுது போக்குத் தானே. அறியாததுபோற் கூறுகிறீரே!

மதியூகி :—நல்லது பிரபோ! எவ்விதம் ஆடச்சொல்லி யிருக்கிறது? ராஜாங்கக் காரியத்தில் நெடுநேரம் மனத்தைச் செலுத்தி யிருந்தபிறகு, கொஞ்சநேரம் இளைப்பாற வேண்டி யாடலாம். இவ்விதம் ஒரேயடியாய் உட்கார்ந்து கொண்டு பந்தயம் வைத்தா ஆடுகிறது? பந்தயம்வைத் தாற் பொருள் போயிற்றே யென்னும் எண்ணத்தால் மேன்மேலும் ஆடத்தோன்றும். ஆடவாடத் தோல்வியுண்டாகவே பொய் சொல்லச்செய்யும். ஒருவரோடொருவர் சண்டையிட நேரும்.

புஷ்கரன் :—ராஜா! இதென்ன தருமபிரசங்கை? ஏதாவது ஆடுவதானால் ஆடவேண்டும். இல்லையேல், நான் என்னூடு செல்கின்றேன். வீண்பொழுது போக்குவானேன்?

நளன் :— நல்லது, ஆடுவோம்.

மதியூகி :—அரசே! நான் சொல்லச் சொல்லச் செவிசாற்றாதிருக்கக் காரணந் தெரியவில்லையே! நான் என்னசொன்ன

போதிலும் அதைத்தட்டாமலும், என்முகங் கோணுமலும் கேட்டுவந்த தாங்கள் இன்று அசட்டைசெய்யக் காரணமென்ன? மகாராஜா! வேண்டாம். இச்சூதாட்டம், கேவலம் ஒருநாள் முழுமையும் நெற்றிவியர்வை நிலத்தில்விழ உழைத்துத் தன் பெண்டுபிள்ளைகளுக்கென்று கொண்டுபோகும் அற்பத்தொகையை, வழியில்வரும் சூதாடிகளைக்கண்டதும் குடும்ப நிலையையும் கருதாது, தான்பட்ட கஷ்டத்தையும் யோசியாது, சூதாட்டமென்னும் தூண்டிலில் மதியும் பொருளுஞ்சிக்க, இராவுணின்றிப் பிச்சை யெடுக்கும்படி ஒருவனைச்செய்யுமென்றால், ஏராளமான பொருளையுடைய தங்களை என்செய்யாது? ஆதலின், வேண்டாம். நிறுத்திவிடுங்கள்.

நளன்:—இருக்கட்டும், தடாதீர். இந்த ஒரே ஆட்டம் ஆடிநிறுத்திவிடுகிறேன்.

மதியூகி:—மன்னவா! கூடாது ஒன்றென்றால் ஒன்றுடன் நில்லாது ஒன்றின்மே லொன்றாகவே விளையும்.

காதலிடை யறிவழிந்து கணிகை யார்தங்
கனிவாயி னூறன்மிகப் பருக வெண்ணி
நீதமலா தனபலவு மியற்றி நாளு
நிந்தனையே யணியெனக்கொள் நீசர் கட்குஞ்
சூதுபெருந் தொழிலெனக்கொண் டருளைப் போக்குந்
துன்மார்க்கர் கட்குமொரு துணையு முண்டோ
சாதலுறுங் காலமட்டுஞ் சனிதொடர்ந்து
சன்மார்க்க மனைத்தையுவே ரறுப்பான் மன்னே
என்றவிந் நீதி தாமு மேற்றிடா தென்னே வாய்மை
குன்றுவான் செய்து மப்பாற் குணமழித் திடுமிச் சூதை
நன்றெனக் கொண்டு நாடி நவில்வது மென்னே நாதா
வின்றினி யொழிக வேண்டி யிறைஞ்சினன் போதும்
[மன்னு. (ங௨)

நளன்:—ஆமாம்.

கூறிடு மெனது மாற்றங் குறிப்பினு லறிந்து தாமே
வேறின்றிச் செய்து நாளும் விடுத்திடும் நீரு மின்று
மீறியீண் டுரைத்தல்தானும் மேன்மைத்தன் றுருகு மாறு
தேறிவா ளாதி ருத்தல் சிறப்பிற்றென் றுணரு வீரே.

மதியூகி :—கொற்றவா ! கோபிக்கலாகாது.

ஐய நீரு மறைந்திடும் வாசகம்
மெய்ய தன்றி விளங்கிடக் கண்டிலேன்
பொய்ய தானவிச் சூதைப் பொருந்திடி
லுய்ய நானு முரைப்ப தநீதமோ ? (௨.ம)

நளன் :—மந்திரி யுனக்குரிய மாமதி யனைத்தும்
எந்திற மியற்றிட விசைந்தனகொ லின்று
புந்தியுட னுடுவ னெனப்புகலு மாற்றம்
முந்திரியு மீறுகிலென் மூதறிவு கொண்டோய் !

(புஷ்கரனைநோக்கி)

நல்லது, ராஜா ! நாமாடலாம், வாரும். இதோ, என் னுடு முழுமையும் பந்தயப்பொருள். உமது நாட்டையும் நீர் வைக்கவேண்டும்.

புஷ்கரன் :—அப்படியே. இப்பொழுது உமக்கென்ன வேண்டும் ?

நளன்:—எனக்குப் பனிரண்டுவேண்டும். இதோ போடுகிறேன் காயை, (போடுகிறான்)

புஷ்கரன் :—பலே ! பலே !! ஏழு விழுந்துவிட்டது ! எனக்கு உன்னுடும் கிடைத்துவிட்டது ! இனி நீ என்குடிகளிலொருவன். இன்னு மாடுகிறாயா ? உன் பெண்சாதி பிள்ளைகளைவையேன் ? (நளன் மூர்ச்சித்துக் கீழேவிழுந்துவிட்டான். மந்திரி வாரியெடுத்து மார்போடணைத்து மூர்ச்சை தெளிவிக்கிறார்) ஒருகால்

அவர்களுக்கு அதிர்ஷ்ட மிருந்தாலு மிருக்கலாம். உனக்கும் ஜயகாலம் வரலாம். அப்படிச்செய்கிறாயா?

**நளன்** :—(மூர்ச்சைதெளிந்து சற்றுக்கூர்ந்து) அ, ஆ! என்னகஷ்டம்! நம்மை நம்முடைய தாய் தந்தையர்களைத்தவிர, வேறொருவரும் ஒருமைப்பாடாகப் பேசினதில்லையே! இவ்வரசன், நமது சிற்றரசர்களனேகர்களிலும் தாழ்ந்தவன். இவன், இப்பொழுது, 'நீ' 'உன்' என்று பேசுகிறானே! ஆனால், அவன்பேரிலென்னகுற்றம்? நம்நாடு நம்மிடத்திருந்தவரையில் நம்மை யவ்வண்ணம் பேசினனா? நம் நாடு அவனுடைய தாதலும், நாம், அவனுடைய குடிகளிலொருவன்றானே? அதுதான் அப்படிப் பேசுகிறான். நியாயந்தானே? நாமல்லவோ மதியிழந்தோம்? (புஷ்கானிடம்) மகாராஜாவே! இனிவைத்தாட எனக்குப்பொருளில்லை. என் பெண்சாதியை வைத்தாட எனக்குப் பாத்தியமில்லை. அவள் எனக்கு வாழ்க்கைத் துணைவியேயன்றி எனது அடிமையல்லள். மேலும், இவ்வளவையுமிழந்த எனக்கு, இனி முழுமையுங் கஷ்டகாலமாகத்தா னிருக்கப்போகிறது. அக்காலத்தில், எனது காதலியின் இந்து முகத்தையும், என்குழந்தைகளின் குமுதவாய்களையுமாவது கண்டு, ஆறுதலடைகிறேன். அதுவுந்தவிர, ஒரு ராஜனுக்கு ஒரே புத்திரியாய்ப்பிறந்து மிகச்செல்வமாய் வளர்ந்தவள். மாபாவியாகிய என்னைத்தேடி மாலையிட்டு இக்கதியடைந்ததற்கு அலைதொன்று குறையாயின் பாதகமில்லை. ஆதலால், ராஜா! நீர் யாவற்றையு மெடுத்துக்கொண்டு அரசாட்சிசெய்யும். ஆட்டம் நிற்கட்டும்.

**புஷ்கரன்** :—மகாராஜா! நீரேதோ மனத்தாங்கலுட னிருப்பதாகப் புலப்படுகிறது. உமது சொத்துக்களனைத்தையும் திரும்பவேண்டுமானாலும் பெற்றுக்கொள்ளும். நானேதோ அநியாயமாய் அபகரித்துக்கொண்டதாக நினைக்கிறீர்போலும்?

நளன் :—ராஜா ! அஃதொன்றுமில்லை. மனத்தாங்கலென்ன ? யார்பேரி லாயாசப்படுவது, நான்செய்த தீவினைக்கு ? என்னை நீர் ஏமாற்றினீரா ? நீர் நியாயமாகத்தான் கைக்கொண்டீர். நான் இனித்திரும்பப்பெறுவதென்ப தெங்குவந்தது ? கான்றசோற்றையுங் கவர்ந்துண்பார்களோ ?

புஷ்கரன் :—அதுதான் கேட்டேன், ஒருவேளை மனத்தாங்கலாயின் எடுத்துக்கொள்ளலாம்.

மதியூகி :—(நளனிடத்திற் றனியே) மகாராஜா ! சூதாட்டத்தாற்கைக்கொண்டபொருள் அநீதமாய்க்கொண்டதன்றென்கிறீர்களே ! என்னநியாயம் ? முதலாவது, ஓர் அரசனுக்குத் தன்னாட்டைவைத்துச் சூதாட என்ன பாத்தியமிருக்கிறது ? அதையொருவ னெவ்வாறுபெறுவது ? நம்முடன் சண்டையிட்டு இவ்வரசன் இந்நாட்டைவென்றானா ? இச்சங்கதியைநம்நாட்டாரறிந்தால் இவ்வரசனைச்சங்கரித்துவிடார்களா ? தாங்களிருந்து அரசாண்ட இந்நாட்டில், அசேதனனாகிய இவ்வரசனா வீற்றிருப்பது ? புலியிருந்த ஊரில், பூனையோ நாட்டாண்மை செய்வது ? எல்லா நியாயங்களையும் தீவிரமாகக்கற்ற தாங்களே இவ்விதஞ் செய்யலாமா ? இப்பொழுதுதானென்ன ஆகிவிட்டது ? இவ்வரசனை யுதைத்துத் துரத்தி நாட்டைக் கைக்கொள்ளத்தடையென்ன ? வஞ்சித்துத் துன்மார்க்கத்தாற்கொண்டநாட்டைப்பிடுங்குதல் நியாயவிரோதமு மாகாது.

நளன் :—ஸ்வாமி ! பதறாதீர்கள். எனக்கு இந்நாட்டைவைத்தாடும் சுதந்திரமில்லை யென்பதும், நான் சூதாடப்புகுந்தது பெரும்பிழை யென்பதும், நியாயமே. ஆனால், மதியால் விதியை வெல்லலாகுமோ ? அதனாற்றான், மதியூகியாகிய தாங்கள் தடுத்தும் கேளாது விதியாலாளப்பட்டேன். இப்பொழுதெல்லாம் தெரிகின்றன. ஆனாலும், அவன் வஞ்சித்தானென்பதில்லை. எனக்கும் நன்றா

யாடத்தெரியும். அவனுந் தவறுட்டமாடவில்லை. ஆதலின், வஞ்சக மெப்படியாகும்? இன்னும், தாங்கள் சொல்லும் வண்ணம் சூதாட்டத்தால் தோற்றபொருள் மீட்கலா மென்பது நியாயமாயினும், நான் அவனுக்கே கொடுக்கி றேனென்று வாக்குத்தந்துவிட்டதனால், எஃதெப்படியா யினும் அவ்வாக்கைக்காப்பேன். அவனுடைய நல்லகாலம் அவனுக்கு இந்நாடு கிடைத்தது என்னுடைய கெட்டகா லம் என்னை நாடிழக்கச்செய்தது. எல்லாம் காலத்தின் கோலந்தானே? ஆதலால், நான் எங்கேனும்போய் வாழ் கின்றேன். தாங்கள் தங்களுடைய நூதன எஜமானனு க்கு விரோதமின்றி வேலைபாருங்கள். அவன் சிற்றரச னுக விருந்தபடியால், அவனுக்கு இந்நாட்டை ஆளுந்திற னிராது. ஆதலின் தாங்கள் இருந்து நடத்தாதவரை நம் குடிகள்—அன்று! அன்று! அவன் குடிகள் வருந்தும்.

**மதியூகி** :—பிரபோ! நான் தங்களிடத்திலுமிருந்துவிட்டு, இவ் வரசனிடத்திலுமா மந்திரித்துவஞ் செய்வேன்? அஃது இந்த ஜன்மத்திலில்லை.

**நளன்** :—தாங்களப்படிச் சொல்லக்கூடாது. இவ்வரசனுக் கோ ஆளுந்திறனிராது. குடிகள் மிகவருந்தும். அப்பொ ழுது, 'ஐயோ,! சண்டாளப்பாவி! இருந்தநாளெல்லாமிரு ந்துவிட்டுச் சூதாடி, ஒருபாதகனிடத்தில் நாட்டைக்கொ டுத்து விட்டான்' என்றல்லவோ என்னை ஏசுவார்கள்? இஃது தங்களுக்குச் சம்மதமாகுமா? ஆதலால், இதுவ ரையில் என்சொல்லைக் கேட்டுவந்தபடி, இப்பொழுதும் கேட்டு இங்குதானேயிருங்கள். நான் தங்கள் சொல்லை உல்லங்கனஞ் செய்ததற்குத் தண்டனையாகப் பரதேசி யாய் வயிறு வளர்க்கின்றேன்.

**மதியூகி** :—(கண்ணீர்விட்டு) பிரபோ! நீங்களும் இப்படிப் பேசுங் காலம் வந்ததே! நான் இதைக்கேட்டும் உயிர்தரிக்கிறே

னே! ஐயோ! ஒரு நாயுமல்லவோ தன்னைவளர்த்த எஜமானனுக்கு இடுக்கண்வரச் சகிக்கிறதில்லை! நான் நாயினுங் கேடானேனே! ஒரு குதிரை தன்னிடத்தன்புள்ள எஜமானனைத்தவிர வேறொருவர் சவாரிசெய்யப் பொறுதே? தங்களிடத்துச் சேவித்த நான், இச்சண்டாளனிடத்தும் சேவிக்கவேண்டு மென்கிறீர்களே? தாங்கள் கொலுவிலில்லாவிட்டால் என்மனங் களங்கமற்றிருக்குமா? இவ்விதக் களங்கமான மனத்துடன் நானென்ன மந்திரி உத்தியோகஞ் செய்யப்போகிறேன்? ஆதலால், நான் தங்களுடன்வந்து தங்களுக்குப் பணிவிடை செய்கிறேனே? இவ்வளவு நாள் விசுவாசமா யுழைத்த எனக்கு இந்த வெகுமானஞ் செய்யக்கூடாதா?

நளன்:—(மதியூகியைத் தழுவிக்கொண்டு) ஸ்வாமி! தாங்களென்ன இவ்விதம் புலம்பத்தலைப்பட்டீர்கள்? என்னிடத்துத் தாங்கள்வைத்திருக்கும் அன்பை நானறியேனோ? எனக்குத்தங்களையெல்லாம் விட்டுப்பிரிய மனமிருக்குமா? இருந்தாலும், விதியின்பயனை யனுபவிக்க நான்போகவேண்டியிருக்கிறது. தாங்களும் ஏன் வரவேண்டும்? நம்மையும், நம்மால் நாட்டையடைந்த அரசனையும், பாவிகளென்று ஜனங்கள் சொல்லும்படி நாம் வைத்துக்கொள்ளக்கூடாது. அதற்குத் தாங்கள் மந்திரியாகவிருந்து காரியம் நடத்தவேண்டும். ஆதலால், தாங்களென்னிடத்துக்கொண்டுள்ள அன்பு உண்மையாயின், என்னிடத்திருந்தபடியே உண்மையோடு இவ்வரசனிடத்திலுமிருந்துராஜ்ஜியத்தை நன்கு காத்துவரவேண்டும்.

மதியூகி:—உங்களிடத்துள்ள அன்புமேலீட்டாற்றானே இவ்வுத்தியோகங் கஷ்டமாகத் தோன்றுகிறது. ஆயினும், தங்களுடைய சொல்லைத் தடுக்காவண்ணம் இங்கேயேயிருக்கிறேன். தாங்கள் மனவருத்தப்படாதீர். ஆனால், ஒரு

விஞ்ஞாபனம் செய்துகொள்கிறேன். தாங்களிருக்குமிட த்தை அப்போதைக்கப்போது தெரியப்படுத்தினால், நான் தங்களிடம் அடிக்கடிவந்து தங்களைத் தரிசித்து ஆறுத லடைவேன். தகுந்த புத்திமதிமையும் பெற்றுவருவேன்.

**நளன்** :—நல்லது. அவ்வண்ணமே செய்கிறேன். அரசன்தங்க ளைவேண்டுவான். அவனிடம் போங்கள். நாம் இனிப்பே சுவோமானால், ஏதோ சதியாலோசனை செய்கிறோமென் றெண்ணினாலு மெண்ணுவான். நானும் அவனிடம் கடை சியாக உத்தரவு பெற்றுக்கொள்கிறேன். (புஷ்கரனிடத்து) மகாராஜனே! நான் இப்படித் தேசாந்திரம் போய்ப் பிழை க்கிறேன். தாங்கள் நாடெல்லாவற்றையுங் கைக்கொள் ளுங்கள். இவர்தாம் மந்திரி (மதியூகியைச்சுட்டி) மதியூகி என் பவர். வெகு சமர்த்தர். விசேஷபுத்திசாலி. வாய்மையே மேற்கொண்டவர். அன்பு மிகுந்தவர். இவரைப்போன்ற மந்திரி கிடைப்பதரிது. அந்நாட்டிற் பரம்பரையாய் வே லைபார்த்து வருகிறார்கள் இவர்கள். ஆதலால், அவரை நன்கு விசாரித்து நீதிசெலுத்துங்கள். நான் உத்தரவு பெ ற்றுக்கொள்கிறேன்.

**புஷ்கரன்** :—நல்லது, போய்வாரும். பொக்கிஷம் முதலிய வைகளெல்லாம மந்திரிவசந்தானே? நீர் உம்முடைய பெ ண்சாதி பிள்ளைகளுடன்தானே போகிறீர்? அரண்மனையி லிருந்து ஒன்றையு மெடுத்துப்போகக்கூடாது. நீர் கட்டி யுள்ள வஸ்திரம் விலையுயர்ந்ததாதலின் அதை யவிழ்த்து வைத்துவிட்டு ஒருபழைய வஸ்திரந் தரித்துப்போம் அர ண்மனையைவிட்டும் இப்பொழுதே போய்விடவேண்டும். தெரிந்ததா?

**நளன்** :—நல்லது, ராஜா! அப்படியே செய்கிறோம். பெண் சாதி பிள்ளைகளுடனேயே போகிறோம். பொக்கிஷம் முதலியவைகள் மந்திரி ஒப்பிப்பார்.

**புஷ்கரன்** :—நல்லது, போய்வா. [நளன் போகின்றான்.

(தனக்குள்) பலே! உலகத்தில் சனியன்பிடித் தாட்டுகிறதென்று கேள்வியுற்றிருக்கிறோம், கண்டதில்லை. இப்பொழுது இந்த நளன் விஷயத்திற் கண்கூடாகக் கண்டுவிட்டோம். இல்லாவிட்டால், இந்நளன் சூதாடச் சம்மதிப்பானா? வேறுவிதத்தால் அவன் நாட்டை அடையத்தான் நம்மாற்கூடுமா? நம்மைப்பிடித்த சனி நன்மைக்கேபிடித்தது! அவனுக்கு மங்குசனி, நமக்குப் பொங்குசனி! பேஷ்! கொடுத்தாலும் சனியன்தான், கெடுத்தாலும் சனியன்தான்! பலே! சனியன்! (சனியைவியந்து பாடுகிறான்)

தண்ணளி யுனது தந்தை தபனன திடத்துப் பெற்றும்
நண்ணியுன் றாயாஞ் சாயை நலமிகு மொளியை யேற்றும்
விண்ணவர் பலரு மேத்த மிளர்ந்திடு மீசா வென்றன்
கண்ணிணை நிகர்க்குங் காக்கை வாகனா காத்தி டாயே.

காலிரண் டுடனோர் கண்ணுங் கருமையார் சிறகுமன்றிச்
சாலவே தொனிக்குங்கானக் களமுமின் முகமுந்தோன்றக்
காலனுமது முன்னர்க் காலையோ டெதிர்த்துநிற்குங்
கோலமார் காக்கைகொண்ட கோமளக் கோவேபோற்றி.

இன்றெனக் களித்த செல்வ மினியவோ ராசு மற்று
நன்றெனக் கருதலாகு நல வயிலாப் பொருளும் பெற்றே
நின்றிரு முகமு நீண்ட வெயிற்றின தொளியு நொண்டி
யன்றிவ ணடைந்தகோலமடியனேன் சாண்பதென்றோ?

நல்லது, இப்பொழுது சனி கூறியபடி அவனைச் சூதில் வென்று நாட்டைக் கைப்பற்றிக்கொண்டு வெளியே துரத்திவிட்டோம். இனியும், கலிராஜன்சொல்லியபடி அவர்களை இவ்வூர் விட்டே துரத்தவேண்டும். அவர்களிங்கிருந்தால் ஜனங்கள் அவனுக்குப்பரிந்து நம்மைத்துரத்தினாலும் துரத்திவிடுவார்கள். அவ்விதமே உத்தரவு செய்துவிட்டுத் தினமொருதரம் இச்சிங்காதன மேறும்போதெல்லாம் அக்கலிராஜனைக் கைதொழுதேறி நாட்டை ஆண்டு

வருவேன். இவ்வளவுதூரம் உதவிசெய்த கலிராஜனுக்கு ஒரு கோயிற்கட்டுவேன் (மந்திரியைநோக்கி) நல்லது, மந்திரி! நமது நாட்டாரனைவரும் சௌக்கியந்தானே?

**மதியுகி** :—ஆம், சௌக்கியந்தான்.

**புஷ்கரன்** :—சந்தோஷம். நீர் இப்பொழுது ஒரு காரியம் செய்யவேண்டும். முதலாவது, நளன் முதலியவர்கள் இந்நாட்டிலேயே யிருக்கக்கூடாது. நம் நாட்டில் அவர்களுக்குத் தங்கிடங் கொடுப்பவர்களுடைய தலையைச் சீவிப்போடுவோமென்று பறையறையச்செய்யும். (மதியுகி திடுக்கிடுகிறார்) இரண்டாவது என்பெண்சாதியையும், மகனையும் அதிசீக்கிரத்தில் என் நாட்டிலிருந்தும் துரவிக்கவேண்டும், தெரிந்ததா? உடனே செய்யவேண்டும். அல்லது, மந்திரி! ஒருகாரியம் செய்யலாமா?

**மதியுகி** :—என்ன?

**புஷ்கரன்**:—என் பெண்சாதி அழகாயிருக்கவில்லையே, அவளையெவ்விதம் இவ்வளவு பெரியராஜ்ஜியத்தையாளும் மகாராஜன் பட்டமகிஷியாக வைத்துக்கொள்கிறது? என்ன மந்திரி? நான் சக்கிரவர்த்தியில்லையோ?

**மதியுகி** :—ஆம்.

**புஷ்கரன்** :—ஆதலால், கிரம்ப அழகுள்ளவளாகப்பார்த்து வேறொருத்தியைக் கல்யாணஞ் செய்துகொண்டாலென்ன? ஆனால், என்ன கல்யாணம் செய்துகொண்டாலும் முதற்பெண்சாதிதானே பட்டமகிஷியாவாள்? ஆதலால், கல்யாணஞ்செய்தும் பயனிராது போலிருக்கிறதே? நல்லது அந்தச்சந்தேகத்தைத் தீர்த்துக்கொண்டு மேல் நடத்துவோம். இப்பொழுது, நான் சொன்ன இரண்டுகாரியங்களையும் செய்து முடியும். முதலிற் கொடுத்த கட்டளையைச் சீக்கிரம் நிறைவேற்ற வேண்டும்.

மதியூகி:—அப்படியே செய்துவருகிறேன். ஆனால், நளராஜன் இந்நாட்டிலிருந்தாற் கெடுதலென்ன?

புஷ்கரன்:—அதைப்பற்றி உம்மையார் கேட்டது? சொன்னபடி உடனே செய்யும். நான் சாப்பாட்டிற்குச் செல்கின்றேன்.

மதியூகி:—சரி! [புஷ்கரன்போகின்றான்.

ஐயோ! என்னகஷ்டம்! இச்சிற்றறிவுடையவனுக்குப் பணிசெய்யவேண்டி என்றலையிலெழுதிவிட்டானே நான்முகன்! இத்தகைய கடோரமான கட்டளைகளையும் நிறைவேற்றவேண்டியிருக்கிறதே! என்செய்வது? என் அன்னதாதாவின் சொல்லைத்தட்டாது காக்கவேண்டுமானால், அவரையே ஊரைவிட்டுத் துரத்தவேண்டியிருக்கிறதே! தெய்வமே! நீயே துணை.

[போகிறான்.

# ஐந்தாங்களம்.

---

இடம்: நளனரண்மனை யந்தப்புரம்
காலம்: முற்பகல்.
பாத்திரங்கள்: தமயந்தி தூங்கிக்கொண்டிருக்கிறாள்.

மோகனமாலை வருகின்றாள்.

**மோகனமாலை**:—இஃதென்ன வியப்பாயிருக்கிறது? ஒருநாளுமில்லாத வழக்கம்! பகலிலேன் தூங்குகிறாள்? உடம்பு செம்மையில்லையா என்ன? இதென்ன இவள்பக்கத்தில்? படமா? என்னபடம்? (கையிலெடுத்து) ஓ ஓ! தன் கணவனைப்போலொருபடம் சித்திரிக்க ஆரம்பித்துக் கொஞ்சம் வேலைசெய்திருக்கிறாள்! மெத்த நன்றாயிருக்கிறது. கணவனிடத்துக் காதல் மிகக்கொண்டவளல்லளோ? ஆதலால், நன்றாய்ச்சித்திரித்திருக்கிறாள். இதைச் சித்திரித்துக்கொண்டிருக்கும்பொழுதே சோர்வடைந்து துயின்றுவிட்டாள்போலும்!

**தமையந்தி**:—(தூக்கத்திற் பிதற்றுகிறாள்) ஆ, நாதா! இஃதென்ன வநியாயம்? இந்த வனத்தி லென்னைவிட்டுப்பிரியலாமா? இதுதானா விளையாட்டு? வேண்டாம். விளையாட வேண்டாம். என்னிடத்து வாருங்கள்.

**மோகனமாலை**:—அம்மா! தமயந்தி! (தமயந்தி முனகுகிறாள்.) என்னடி பிதற்றல்? உனக்குக் கனவிலேயும் கணவன்றானா? தூங்கும்பொழுதுகூடப் பிரிந்திருக்கக் கூடாதாவம்மா?

**தமயந்தி**:—(மறுபடியும் பிதற்றுகிறாள்) ஐயோ, நாதா! என்னைக் கான்விலங்குகள் துரத்துகின்றனவே! ஒரு வனவேடன் பற்றியிழுக்கிறானே? ஐயோ!———ஐயோ!!

மோகனமாலை :—(உற்றுப்பார்த்திருந்த, தமயந்தியைத்தட்டி) அம்மா தமயந்தி! என்னடி? இதோவிழித்துப்பார்? (பார்க்கிறாள்) அரண்மனையிற் கான்விலங்குக ளெங்கேயம்மா வந்தன?

தமயந்தி :—(மோகனத்தைக்கட்டிக்கொண்டு) ஸகி, மோகனம்! என்னபயங்கரமான கனவுகண்டேனடி! அஃது ஏதேனும் கெடுதலாயிருக்குமோடி?

மோகனமாலை :—என்ன கனவுகண்டாய்?

தமயந்தி :—ஏதோ என் கணவரோடு காட்டுக்கு வேட்டையாடப் போனது போலவும், அவ்விடத்தில் அவர் என்னைத் தனியேவிட்டுப் பிரிந்துவிட்டதாகவும், என்னைக் காட்டு விலங்குகளும் வனவேடனுந் துரத்தியதாகவும், ஒருமலைப் பாம்பு விழுங்கியதாகவும் கனவுகண்டேனே! ஏதேனும் கெடுதல் சம்பவிக்குமோடி?

மோகனமாலை :—அதொன்றும் நேராதம்மா. நீ எப்பொழுதும் உன் கணவரைப்பற்றியே நினைத்திருப்பாய். அவரிடத்தன்பால், அவரைப்பிரிந்தா லென்னசெய்கிறதென்றெண்ணியிருந்திருக்கலாம். இன்னும், முன்னதாகவே, உன்னை வேட்டைக்கு ராஜாசெல்லுமபொழுது கூட்டிப் போகவேண்டு மென்கிறதற்கு, அவர் காட்டு மிருகங்களினுபாதி உண்டென்று சொல்லியிருக்கிறார். இவையெல்லாம் ஒன்றுசேர்ந்து கனவிற்றோன்றியிருக்கின்றன. கனவென்பதே நினைவின் பிரதிபிம்பந்தானே? நம் எண்ணங்களெல்லாம் கனவிற்றோன்றும். அதற்கு, இப்பொழுது சமீபத்திலெண்ணியிருக்கவேண்டுமென்பதில்லை. நெடுநாளைக்குமுன் னெண்ணியிருந்தாலும் போதும். ஆதலால், பயப்படாதே. ஒருகேடும் நேராது. மேலும், இது பகலிற்றூங்குவதன்கேடு.

நளன் வருகின்றான். (இருவரும் திடுக்கிட்டெழுந்துநிற்க)

தமயந்தி :—(நமஸ்கரித்து) பிரபோ! ஈதென்னவாச்சரியம்? பகலில் தாங்கள் கொலுவீற்றிருக்குந் தருணத்தில் இங்கு

வந்த விசேஷமென்ன? மேலும், ஸேவகன் மூலமாக அறிக்கை செய்வது வழக்கமாயிற்றே? முகமும் வாட்டமாயிருக்கிறதே?

**நளன்** :—(விசனத்துடன்) சகி! இனி நமக்குச் சேவகனுமில்லை. கொலுவுங் கிடையாது.

**தமயந்தி** :—(கிட்டநெருக்கி) பிரபோ! என்னசெல்லுகிறீர்கள்? எனக்கொன்றும் புரியவில்லையே? ஏன் வருத்தப்படுகிறீர்கள்?

**நளன்** :—நான் அன்றேஉனக்குச்சொன்னேனே—இந்திரனை மணஞ்செய்துகொள்ளென்று!

**தமயந்தி** :—பிரபோ! அந்த நாராசமின்னும் வேண்டுமோ? நல்லது. அதனால் இப்பொழுதென்னகேடு?

**நளன்** :—என்னகேடு? மகான் வயிற்றிற்பிறந்து செல்வமாய் வளர்ந்து இக்கதியடைந்தையே என்பதுதான்?

**தமயந்தி** :—பிரபோ! என்ன, தாங்கள் சொல்வதே தெரியவில்லையே? விளங்கச்சொல்லுங்களேன்?

**நளன்** :—மாதரசே! நான் என்னென்று சொல்கிறது? என்னுடைய போதாதவேளையாற் புத்திகெட்டு, எனக்குக் கப்பங்கட்டுஞ் சிற்றரசர்களிற் றாழ்ந்தவனான புஷ்கரனுடன் கவருடி, என் நாடு நகரங்களையுமிழந்து, என் சம்பத்துக்களையும் துறந்துவிட்டேன். இக்கணமே இந்த அரண்மனையைவிட்டு வெளியே போம்படி அவ்வரசன் உத்தரவு செய்துவிட்டான். இனி நாம் பரதேசியாய்ப் போக வேண்டியதுதான். (மோகனமாலை வாயைப்புதைத்துக் கொண்டு கண்ணீர்விட்டுக்கதறுகிறாள்].

**தமயந்தி** :—(கண்ணீர்சொரிந்து) ஆ! என் நாதா! தங்களுக்கும் இவ்வெண்ண முண்டாயிற்றோ? போதாதவேளைதான். ஐயோ! நமது மதியூகியாரு மருகிலில்லையோ?

**நளன்** :—அவரிருந்து தடுத்தாரடி! தடுத்தும் நானவரை மதியாது கடிந்து பேசினேனடி! நாம் இப்பொழுதே இவ்வரண்மனையை விட்டுவிடவேண்டும். அரசன் அற்பன். அதிகாரமுறையறியாதவன். ஆதலால், நாம்தாமதித்தால் நம்மை யவமானத்திற்குள்ளாக்குவான்.

**தமயந்தி** :—நாதா! இந்த வநியாயத்திற்கு வழியில்லையா? அநியாயவழியா லபகரித்த சொத்தையேன் மீட்கலாகாது? இப்படி இடிவிழுந்தாற்போல வந்துவிட்டதே, பிரபோ!

**நளன்** :—வாஸ்தவந்தான். நாமென்னசெய்யலாம்? ஒருதடவை கொடுப்பதாகச்சொன்ன நாட்டை மீட்பதெங்குவந்தது? அது நீதியன்று.

**தமயந்தி** :—நாதா! ஆனால், நம்முடைய மந்திரிமார்களையும், நம்மிடத்தன்புள்ள வேலைக்காரர்களையும், நம்பொருட்டு உயிரையுங்கொடுக்கச் சித்தமாயுள்ள நமது குடிகளையுமோ விட்டுப்பிரிகிறது? ஐயோ! என்னகாலமிது? எங்குபோ யென்னசெய்யப்போகிறோம்?

**நளன்** :—சகி! வருந்தலே. காலத்திற் கென்னசெய்யலாம்? நீ ஒன்று செய்யவேண்டும். நீ நம் குழந்தைகளைக் கூட்டிக்கொண்டு உன் தாய்வீடுபோய்ச்சேர். நான் என்பொழுதைக் கானகத்தினிடத்திற்போக்கிப் பிறகு வந்துசேர்கிறேன்.

**தமயந்தி** :—(நளன் பாதத்தில்விழுந்து) நாதா!——ஐயோ! இவ்விதம் கேட்கவும் எனக்குக்காலமோ? என்னுயிர் நீங்கேனென்கிறதே! பெண்ணாய்ப்பிறந்த நீலியாதலின் நான் சகிக்

கிறேன். தெய்வமே! உனக்குக் கண்ணில்லையோ? அல்லது இதுவுமுன் திருக்கூத்தோ? என் துரையே! தாங்கள் அவ்விதம் சொல்லக்கூடாது. என்னிடத்துத் தாங்கள் கொண்ட அன்பு இதுதானு? நான் செல்வத்தோடு வளர்ந்தவ ளென்கிறீர்களே; தாங்களவ்விதம் வளரவில்லையோ? இந்தக் கடோரமான வார்த்தைகளையுங்கேட்டு, உயிர்தரிப்பவள் எந்தக்கஷ்டத்தைத்தான் சகிக்கமாட்டேன்?—தாங்கள் வேறு யாரையாவது மணந்திருக்கக்கூடாதோ? இத்தீவினையேனையோ கைப்பிடிக்கவேண்டும்? பிரபோ! ஆனதாகிவிட்டது. என்னைவிட்டுப்பிரிகிறதென்ற சொல்லைமட்டும் மாற்றிவிடுங்கள். என்ன துக்கஞ் சம்பவித்தாலும், தங்கள் பக்கத்திலிருந்து தங்களது திருமுக மண்டலத்தை யொருமுறை தரிசிப்பேனுல், என் துக்கமெல்லாம் சுகமாகி விடுமன்றோ? மேலும்,

* "கெடுபடு கானிடைத் தவிமியை நீங்கிப்போய்ப்
படுபர லமளிமேற் பள்ளி கொள்ளவெங்
கடிநக ரடைந்து மெல்லணையிற் கண்படி
லடியனேற் கிதனினு மறனுண் டாங்கொலோ ?" (உரு)

நாதா! என்னன்பு தெரிந்திருந்தும் இப்படிச்சொல்லலாமா? என்னைப்பரிசோதிக்க விரும்பினீர்களோ, பிரபோ? இல்லாவிடில், இவ்வளவு தீங்கிற்கு மிவளே காரணமாயிருந்தாள். இன்னும் இவள்கூடவேவரின், தீங்கு அதிகரிக்கக்கூடுமென்று எண்ணுகிறீர்களோ? எவ்விதமாயினும் சரி. இப்பொழுது தாங்கள் எங்குபோனுலும், என்ன துன்பப்பட்டாலும், என்னையுங்கூடவே அழைத்துப் போகிறேனென்று வாக்களித்தாலாயிற்று. இல்லாவிடில் தங்களை நான் விடப்போகிறதில்லை. தங்கள் காலடியிலேயே என்னுயிரை நீத்துவிடுகின்றேன்.

* நைடதம்.

**நளன்** :—(தமயந்தியை யணைத்து) சகி! வருந்தேல். எனக்கு உன்னிடத்துள்ள அன்பிற் களவுண்டோ? உன்னைப் பிரியவும் மனம் வருமோ? நீ வருந்தக்கூடாதென்றே உன்னை உன்தாய்வீடுசெல்லச்சொல்லுகிறேன். மேலும், நமக்குக் குழந்தைகள் முக்கியமல்லவா?

உலகொரு குடைக்கீழென்று மொப்பிலா தாண்டிட்டாலு
மலகிலாச் செல்வமெய்தி யமுதமுண் டுயர்ந்திட்டாலும்
நலமிகு தேவர் மூவர் நம்முட னமர்ந்திட் டாலும்
குலமணி விளங்குங்கோ திில் குதலைவாய்க் குழவியாமோ?

அத்தகைய குழந்தைகளை வளர்த்தெடுக்க வேண்டாமா? நீ யில்லாவிட்டால் தாயைக்காணாது ஏங்கிவிடுமென்றே? அதனாற்றா னப்படிச் சொல்கிறேன்.

**தமயந்தி** —நாதா!

அருமை யெனினு மடைந்திடலா
　　மரிய மதலை தமையொருநாண்
மருவி யணைந்து மனமறிந்த
　　மணவா ளரையே மகிழ்ந்தடையிற்
பெருமை யுளதோ பெரும்புகழு
　　மவமே யலவோ பெரும்பேறு
தரும முதல் நிலைத்திடுமோ
　　தக்க தலைவற் பிரிந்திடினே?　　(உஎ)

மேலும் என்தோழி மோகனமிருக்கிறாள். அவள் இனியிங்கிருக்கமாட்டாள். அவளையும், அவள் கணவரையும், நமது குழந்தைகளைக் கூட்டிக்கொண்டு என் தாய்வீடு செல்லச்செய்வோம்.

**நளன்** —ஐயோ! நம்முடைய குழந்தைகளைப் பிரியவேண்டியிருக்கிறதே! நல்ல நிலைமையிலிருக்கவேண்டிய என்குழந்தைகள் என்னுடைய [illegible] அதனை

யாகி, நம்மைப் பிரிந்து, பிறம்மனையிலிருந்து, ஆங்குள்ளார் முகத்தைப் பார்த்துப் பிழைக்கவேண்டியதாயிற்றே!

தமயந்தி :—பிரபோ! அதற்கு நாம் நொந்துகொள்வதிற் பயனென்னை? போதாதவேளைக்கு நாமென்னசெய்யலாம்? ஏதோ, சீக்கிரம் அரண்மனையை விடவேண்டு மென்றீர்களே?

நளன் :—ஆம், வாஸ்தவந்தான்.

தமயந்தி :—நல்லது. சகி! மோகனம்.

மோகனம் :—(கண்ணீர் விட்டுக்கொண்டு) அம்மா!

தமயந்தி :—ஏதோ எங்கள் போதாத வேளையால் நாட்டை விடவேண்டி வந்து விட்டது. என் கணவருடன் நான் போகிறேன். குழந்தைகளுக்கு நீதான் கதி. உன்னிடத்தி லொப்பிக்கிறேன்! நாங்கள் சொன்னதாக உன் பர்த்தாவிடஞ்சொல்லிக் குழந்தைகளைக்கொண்டு என் தாய்வீடு சென்றிருங்கள். நாங்கள் நல்லகாலம் பிறந்தால் திரும்பிவந்து பார்க்கிறோம்.

மோகனம் :—(கண்ணீர் விட்டுக்கதறிக்கொண்டு)

ஒருபெருங் கூண்டில் வாழ்ந்த
    கோவிலாக் கிளிகள் போலும்
மருமலர்ச் சாகை யொன்றின்
    வளரிரு மலரே போலும்
இருவரும் வளர்ந்து வாழ்ந்தின்
    றிவணுறும்வந் துறையு மெற்குத்
தருமமோ கூறு யுன்னைத்
    தணந்துயான் வாழ்தல் தோழி? (உஅ)

அடி, சகி; நீ துன்பப்படப் போகிறாயென்பதறிந்தும் நானின்பப்படுகிறதா? உன் தாய் தந்தையர்கள் கேட்டால்

எவ்வளவோ துன்பப்படுவார்களே! அதையுமா நான் பார்க்கவேண்டும்?

தமயந்தி :—மோகனம்! நீ சொல்வதுண்மையே. எனக்கும் உன்னைவிட்டுப்போக மனமில்லை. ஆனால், தள்ளக்கூடாத அசந்தர்ப்பத்தாற் பிரிந்துதான் போகவேண்டி யிருக்கிறது. உனக்கே தெரியாதா? மேலும், உன்னைவிட்டால் குழந்தைகளுக்கு மாதரவில்லை. இன்னும், இதுகேட்டுக் கதறும் என் தாய் தந்தையர்களுக்கும் நீயே தேறுதல் சொல்லவேண்டும். இத்தனை காரணங்களையும் முன்னிட்டு நீ இப்பொழுதே நம் நாடு செல்லவேண்டும். நாங்களும் இப்பொழுதே இவ்வரண்மனையைவிட்டு நீங்கவேண்டும். ஆதலால், சீக்கிரம் குழந்தைகளைக் கூட்டிவா. அழாதை! [மோகனமாலை போகிறாள்.

பிரபோ! பார்த்தீர்களா? என்னை நீங்களிப்படி நினைப்பீர்களென் றெண்ணவேயில்லை. செல்வமிருந்தபொழுது தங்களுடனனுபவித்துவிட்டுத் தாங்கள் வருந்தும்பொழுது தங்களை விட்டு விட்டு என்றாய்வீடுபோய் அனுபவிக்கத்தக்கவளென் றெண்ணினீர்களே!

நளன் :—என் கண்ணே! அவ்விதம் நான் உன்னை நினைப்பேனா? ஏன் வீணே வருந்துகிறாய். (தமயந்தியைக் கட்டிக்கொண்டு) தீயேனுடைய கெட்டபுத்தியால் மகாஉத்தமியாகிய நீ துன்புறவேண்டியிருக்கிறதே யென்றல்லவோ சொன்னேன்?

தமயந்தி :—பிரபோ! துன்பத்தை யெல்லாம் இன்பம்போலவே தங்களுடனிருந்து அநுபவியாவிட்டால் எவ்வண்ணம் நானுத்தமியாவேன்? நல்லது நாதா! என்னுடைய துன்பத்தைககருதி யென்தாய்வீடு போகச்சொன்னேனென்றீர்களே, அதற்குமேல் நானொன்று சொல்கிறேன் கோவியாதீர்கள்?

நளன் :—என்ன? சொல். உன்னிடத்துக் கோபமென்ன?

தமயந்தி :—எனக்கும் துன்பமில்லை. நீங்களும் சுகமுறலாம். நம்குழந்தைகளுக்கு மாதரவாயிருக்கும். என்பெற்றோர் களுக்கும் பேரானந்தமாயிருக்கும். இவைகளுக்கெல்லா மாதாரமாக, நம்போலாதவேளை நீருமளவும் எனது தாய்வீடுபோ யிருப்போமே? அவர்களு மெங்கே யெங் கேயென் றெதிர்கொண்டழைப்பார்கள்.

நளன் :—மின்னுதலாய்!

*"மிக்கவெஞ் சமத்திடை வெருவி யோடின
ரொக்கறன் புறத்தனி யுலகில் வாழுநர்
புக்குவேட் டகத்தினி லுண்ணும் புன்மையோர்
மக்களுட் பதடியென் றுரைக்கும் வையமே." (உக)

பெண்ணுற வொன்றெகூறும் பேதையரகத்துப்போயங் குண்ணுத லுறைதல்மற்று முறங்குத லுயர்ந்தோர்க்காகா பண்ணிய தருமந்தானம் பரசுதி யனைத்தும்பாழாம் கண்ணொளி யனையாய்நீயுங் கழறிய மாற்றமென்னோ? ஆதலின், நான்வர நியாயமில்லை. நீ வேண்டுமானாற் போகலாம். அது நல்லயோசனைதான். அதை நான் சொன்னதற்குத்தான் நீ கோபங்கொண்டனை. உனக்கும் தாய் வீடானதா லிழுக்கில்லை. நீ போவதனால் எனக்கும் சந்தோஷமாயிருக்கும். குழந்தைகளுக்கு மாதரவுண்டாகும்.

தமயந்தி —அண்ணலே! அறியாது கூறினேன். மன்னித்து விடுங்கள். எனக்குத் தாய்வீடுபோவ திழுக்கில்லை யென்கிறீர்களே? என்கணவனை விட்டுப்பிரிவது? ஆதலின், இனியந்தப் பேச்சே வேண்டாம். நம் குழந்தைகளைப் பார்த்தனுப்பிவிட்டு அரண்மனையைவிட்டு நீங்கலாம்.

[போகிறார்கள்,

இரண்டாமங்கம் முற்றிற்று.

---

* நைடதம்.

# அங்கம்:—ந

## முதற்களம்.

இடம்: மாவிந்த நகரத்திற் கருகிலொருகாடு.

காலம்: பிற்பகல்.

பாத்திரங்கள்: நளன், தமயந்தி.

**தமயந்தி**:—நாதா! இஃதென்ன வாச்சரியம் பார்த்தீர்களா? நாம் அந்தத்தடாகம் வருமளவும் சூரியகிரணங்க ளெவ்வளவு கடுமையாய் நம்மைத்தாக்கின? அத்தடாகத்திற் றண்ணீர் பருகியபிறகு சூரியனிருப்பதாகவே தெரியவில்லையே? அ, ஆ! எவ்வளவு குளிர்ந்தகாற்றும் நிழலும்!

**நளன்**:—வாஸ்தவந்தான் இக்காடு மிக அடர்த்தியாகவும், வளர்ந்தோங்கிய மரங்களுடனு மிருப்பதனாற் சூரியவெப்பமே தோன்றவில்லை.

**தமயந்தி**:—அதுதான் தாங்கள் அடிக்கடி வேட்டைக்கென்று வந்துவிடுகிறீர்கள்! இங்கு ஒரு நாழிகை தங்கினாலும் போதுமே! நமது சந்திரகாந்தக் கற்களிழைத்த மண்டபங்களும், அடிக்கடி தண்ணீரடிக்கப்பெற்ற வெட்டிவேர்த்தட்டிகளும், இடைவிடாது (வீசப்படும்கவரிகளும், சந்தனவகைகளும் ஒன்று சேர்ந்தபோதிலும் இவ்வளவு குளிர்ச்சியை உண்டாக்கக்கூடுமோ? நாதா! இஃதென்ன மிகமனோரம்யமான ஒரு வாசனையடிக்கிறதே? நாம் எத்தனையோ வாசனைத்திரவியங்களை அநுபவித்திருந்தும் இது நூதனமாகவே தோன்றுகின்றதே! எங்கிருந்தடிக்கிறது, பிரபோ?

**நளன்**:—நாமிதுவரை யனுபவித்திராத வாசனைதான். இது பல காட்டு மலர்களின் கலவைமணம். இதை நாம் எவ்வி

தம் நமது நாட்டி லனுபவித்திருக்கக்கூடும்? இது மாதிரி யாகவே, இன்னும் எத்தனையோ பதார்த்தங்கள் நாட்டி லனுபவிக்கக் கிடையாதன இங்குகிடைக்கும். பெண்ணே! மனிதர்களாகிய நாம் உலகத்திலுள்ள எல்லாவற்றையுமனுபவிக்கிறோமென்று நினைக்கிறோம். நாம் அனுபவிப்பதிற் பெரும்பான்மை நம்மாலேயே உண்டுபண்ணப் பட்டவைகள். இஃதன்றி, ஈசனால் இயற்கையிலேயே படைக்கப்பட்டவைகள் பலவுள. அவைகளிற் பெரும்பான்மையை நாம் அனுபவிப்பதேயில்லை. பார்! நீ முற் கூறியவாங்கு நம் நாட்டில் எத்தனை ஏற்பாடுகள், வெப்பத்தைத்தணித்துக் குளிர்ச்சியை உண்டாக்குவதற்குச் செய்திருக்கிறோம். அவைகளனைத்தும் இந்த ஒருவனத்திற் கீடாகுமா?

தமயந்தி :—ஒருபொழுது மாகமாட்டாது.

நளன் :—இன்னும் பார்! நாம் பலவண்ணங்களைக்கொண்டு சித்திரங்கள் தீட்டுகின்றோமே! அவ்வண்ணங்களாகிய பச்சையும், சிவப்பும், இதோ நம்முன்னிருக்கும் பைம்புல்லின் நிறத்திற்கும், அதோ புலப்படுகிற செவ்வானத்தின் தோற்றத்திற்கும் நிகராமோ? சற்றுக்கவனித்துக் கேள். அநேக பக்ஷி ஜாதிகள் பாடுகின்றன கேட்டாயா? நாம் நம் நாட்டில் யாழென்றும், குழலென்றும் சொல்லிக்கொள்ளும் இனிய வாச்சியங்களின் தொனி இத்தொனி கட்கீடாமோ? என்ன சாமரை வீசினலும் இளந்தென்றலாமோ? இவ்விதமே ஒவ்வொன்றும். மேலும், இங்கு வந்ததும் நம்மனம் எவ்வளவு தூய்மையாகவும், ரமணீயமாகவு மிருக்கிறது? நம் விசாரங்கூடத் தோன்ற வில்லையே?

தமயந்தி :—நாதா! தாங்கள்சொல்வது உண்மையே இவ்வளவு தௌர்பாக்கியமுடைய எனக்கே ஒருவித உற்சாகமுண்டாகிறதே! ஐயோ! இஃதன்றோ ஈசன் படைப்பின்

திறத்தை வியக்குமிடம்? இதை யறியாது நம் நாட்டி லிருந்து நாளைவிணே கழித்தோமே! இவைகளைக் கண்டு களித்தாலன்றோ கண்கள் பயன்பெற்றனவாகும்? இத னாலேதாம் துன்புற்றவர்க ளெல்லோரும் வனவாசஞ் செய்கின்றார்களோ?

நளன்:—நீ சொல்வது சரியே. இன்னும், இதனாலேதாம் முனிவர்களிங்கு வந்து தவமியற்றுவதும்.

தமயந்தி:—அதுவும் நியாயந்தான். ஓரிடத்திற் றவமியற்ற லாம். ஓரிடத்திற் காய்கனிகளைக் கொண்டுவந்து தின்ன லாம். ஓரிடத்திற் றுயிலலாம். தடாகங்களில் நீராட லாம். எல்லாம் சௌக்கியந்தான். ஆனால்—கான்விலங் குக ளிடுக்கண் செய்யுமே?

நளன்:—பெண்ணே! அப்படியன்று. தவமுனிகளிருக்கு மிடத்திற் றுன் பியற்றும் விலங்குகள் நெருங்கா. நெரு ங்கினு மிடுக்கணியற்றா. அதன்றியும், நாட்டிலுள்ள மனிதர்களிலும், காட்டிலுள்ள மிருகங்கள் கருணையுடை யனவே! எப்படியெனில், காட்டுமிருகங்களி லனேகம் புற்பூண்டருந்துவன. ஊன் புசிப்பனவும், தம் பசி தீர்ந்தபிறகு பிறவுயிரைக்கொல்லா. மானுடர்களோ, மர க்கறி தின்று சீவிக்கக்கூடியவர்களாக விருந்தும், சீவகா ருண்யமில்லாததனாற் சீவன்களைக் கொன்று பெரும்பா ன்மையோர் புலாலருந்துகின்றார்கள். இன்னும் ஆகார நிமித்தமின்றியே மனிதர்கள் ஒருவரையொருவர் அவா வினாற் கொன்றுவிடுகின்றார்கள். மிருகங்கள், தங்களுக் குக் கேடுவருங்கால், கேடு விளைப்பாரை மட்டுமே கொ ல்லும்; மனிதனோ, தன்னயம் வேண்டி நல்லவர்களை யுங் கொல்லுவான். இன்னும், மனிதர்கள் அழுக்காறு அவா, வெகுளி, காமம், பொய்ம்மை முதலியவற்றாற் றம் மயலார்க்குக் கேடு விளைத்துக்கொண்டே யிருப்பார்கள். இத்தீக்குணங்கள் விலங்குகளிடமில. அன்றியும், வில

ங்குகள் பழகிவிட்டால், விசுவாசமாகவிருந்து தம் நண்பர்களுக்காகத் தம்முயிரையுங் கொடுக்கும். மனிதர்களோ, நன்றி கெட்டவர்கள். உண்ட வீட்டிற் கிரண்டகங் கொள்பவர்கள். ஓ! மானுடப்பிறவியே!

பெருமைமிகு மாநுடராய்ப் பிறந்து வாழ்ந்திப்
பேருலகிற் றவமியற்றிப் பேசொண்ணாத
வருமறுமை நலமனைத்து மடைய லாகும்
மாநிலத்தீர் மகிமையுறு கடவு ளெம்மான்
மருமலருங் காயுமிகக் கனியுங் கூட்டி
வழங்கிடப்பல் தானியங்க ளவையும் போதா
தருளெனவு மொருபொருளை யழித்து நீரு
மரியவுயிர் செகுத்திடுத லென்னேயென்னே? (௩௧)

மனமுவந் துயிரை வதைத்தத னுடலின்
மாமிச மருந்துபுன் மாக்காள்!
வனவிலங் குகள்போற் பசிப்பிணி நீங்கின்
மனமகிழ்ந் துயிரையோம் புதிரோ?
கனத்ததீக் காம வெகுளியா தியவாங்
கடுங்குணம் பலவுட னுந்த
மினத்தையே நலியுங் கொடுந்தொழி லதனு
விழ்ந்தமா விலங்கினுங் கொடியீர். (௩௨)

ஆதலால், தமயந்தி! காட்டு மிருகங்களா லதிகக் கேடு விளையாது.

**தமயந்தி** :—நாதா! பார்த்தீர்களா அதோ ஓடுகின்ற மான் கன்றுகளை? அட! ஒரே நிமிஷத்தி லிதோ வந்துவிட்டனவே! ஐயோ!—அதோ மறுபடி போய்விட்டனவே!

**நளன்** :—சகி! இந்தக்காட்சி நமது நாட்டிற் கிடைக்குமா? கொஞ்சமேனும் விசாரமில்லாமல் உல்லாசமாய் விளையாடித் திரிகின்றன! பார்த்தாயா?

**தமயந்தி** :—நாதா! அலைகள் துள்ளித்துள்ளி, ஆகாயத்திற் கிளம்பிக் கீழே குதிக்கின்றனவே, அலைகட்குக் கால்களொடிந்துபோகாவோ? நோவாவோ?

**நளன்** :—மான்விழியாளே! மான்கன்றுகளிவ்விதந் துள்ளிக் குதித்த லியல்பு. குதியாதிருந்தாற்றான் அலைகட்குக் கால்கள் நோம்.

**தமயந்தி** :—தலைவா! அலைகளுக்குப் பயமென்பதே யில்லையே! நம்மருகே ஓடிவந்து விளையாடுகின்றனவே!

**நளன்** :—மாதரசே! இவைகள் மனிதர்களின் கொடுமையறியா. மனிதர்களையே விசேஷித்துக் கண்டிராவன்றோ?

**தமயந்தி** :—ஐயோ! நம்மிடத்து நெருங்கியதுபோல் ஒரு வேடனிடத்து நெருங்கியிருந்தாற் கொன்றுவிடுவானே பாவி!

**நளன்** :—அப்படியுங் கொல்லப்படுவதுண்டுதான்.

**தமயந்தி** :—ஐயோ! இதைக் கொல்ல எப்படித்தான் மனம் வருமோ! நாதா! தாங்கள் வேட்டையாட வருகிறீர்களே, இவைகளை அம்பால் விழுத்துவதுமுண்டோ?

**நளன்** :—பேதாய்! நானப்படிச் செய்வேனென்றோ நினைத்தாய்? நான் கொல்வதெல்லாம், மனிதர்களுக்கும், அண்மையிலுள்ள கிராமங்களுக்கும் தீங்கிழைக்கும் துஷ்டமிருகங்களையே! இவைகளைக் கண்டவுடன் உன்னினைவு வந்துவிடும். உன்னுடன் விளையாடுவதுபோல விளையாடுவேன்.

**தமயந்தி** :—ஆஹா! எங்கேயோ மறைந்துவிட்டனவே!

**நளன்** :—வேறெங்கேயாவது போய் விளையாடும். அலைகளுக கோரிடம் நிலையா?

**தமயந்தி** :—அலைகளென்னதின்னும், பிரபோ?

நளன் :—அறுகம்புல் மட்டுமே யருந்தும். அதனாலேயே மானிற்குப் புல்வாய் எனப் பெயருமுண்டு.

தமயந்தி :—காட்டிலிருக்கும் பொழுதுகூடப் புல்தானா தின்னும்? ஐயோ! நான் கொஞ்சம் புல் பறித்துக்கொடுத்திருப்பேனே!

நளன் :—அவைகள் நம்மையி லெளிதிற் பிடிபடா. நல்லது சாயங்கால வேளை யாதலின் சிரமம் தோன்றுது. ஆதலின் நாமின்னும் இவ்வனத்தைச் சுற்றிப்பார்ப்போம்.

(கொஞ்சத்தூரம் போகிறார்கள்)

தமயந்தி :—ஆஹா! பார்த்தீர்களா இவ்வருவியின் தண்ணீரை? களங்கமற்ற யோகியரின் உள்ளம்போற் றூயதாயிருக்கிறது.

நளன் :—நன்கு சொல்லினை! இன்னும், இந்நீரோட்டத்தைச் சற்றுக் கவனித்துப்பார். இந்த விடத்திற் களங்கமற்றிருக்கிறது. அதோ ஒரு பத்தடித்தூரத்திற்கப்புறம் கலங்கியிருக்கிறது. அதற்கப்பால், மறுபடியும் தெளிவாயோடுகிறது. இவ்விதமேதான் நமதுவாழ்க்கையும். நமதுவாழ்க்கையாகிய நீரோட்டத்தி னொருபகுதி, யாதொருதுன்பமுமின்றிச் சுகமாகவேயிருக்கிறது. மற்றொருபகுதி துக்கமாகிய களங்கத்தோடிருக்கிறது. வேறொருபகுதி துக்கம் நீங்கி மறுபடியும் சுகந்தோன்ற விருக்கிறது. இவ்விதம் வாழ்நாள் முழுமையும், சுகதுக்கங்களாகிய மாறுபாடடைந்து முடிவில் நித்ய பரிபூரணமாயுள்ள கருணையங் கடலாகிய பரம்பொருளை யடைகின்றோம்.

ஓரிடங் கலங்கி மற்று மோரிடந் தெளிந்தும் பின்னே
நீரின தோட்டங் கேடுற் றொழுகிடும் நிலையை நோக்கிற்
றேரிய லின்ப துன்பந் திகழ்ந்திடு வாழ்க்கை யாமென்
றோரியப் புலவர் கூற்றி னழகினை யாண்டுக் காணாய். (௯௯)

தமயந்தி :—நாதா! தாங்கள் சொல்வது உண்மையே. ஆனால், எவ்வளவு களங்கமேற்படினும் ஓராறானது கடைசியிற் கடலை யடைவது திண்ணம். அதுபோலவே எவ்வளவு துக்கத்தை யனுபவிக்கநேரினும், கடைசியில் ஈசனுடைய கருணைக்கு நாமும் பாத்திரமாவது திண்ணந்தானே?

நளன் :—அதற்கும் ஐயமுண்டோ? ஈசனுக்கு அத்தகைய வித்தியாசமே யில்லை. மனச்சுத்தம்மட்டும் வேண்டும். அதுமட்டும் நிலைத்திருக்குமேல், துக்கங்க ளனைத்தும் அதோ அந்தச்சூரியனை மறைத்துச்செல்லும் மேகங்களை யொக்கும், அதோ பார்த்தாயா கதிரவன் தோற்றத்தை? தன்னுடைய கிரணங்களையெல்லா மிழந்து ஓர் சிவந்து பழுத்த மாங்கனிபோல விளங்குகிறான். இக்காட்சி நம் நாட்டிற் செவ்வனே தெரியாது.

தமயந்தி :—மெய்தான். நான் இதுவரையிற்பார்த்ததில்லை. பார்க்கத் தகுந்ததாகு மிக்காட்சி. பிரபோ! பார்த்தீர்களா? இந்தச் சூரியன் உச்சியிலிருக்கும்பொழுது நமக்கு அண்ணாந்துபார்க்கக்கூடமுடியாது. கண்கூசும். அவ்வளவுபிரகாசமாயிருக்கும். இப்பொழுதோ அதனொளியையெல்லா மிழந்துவிட்டதனால், மிகச்சுலபமாய்ப் பார்க்கிறோம்.

நளன் :—இப்படித்தான் மனிதர்களின் அந்தஸ்தும். ஒருவன் அவனுடைய பூரணவதிகாரத்தி லிருக்கும்பொழுது, அவனை யொருவராலும் கிட்டமுடியாது. அவனைக்கிட்டி அவன்முகத்தைப் பார்க்கவுங்கூசிக் கீழ்நோக்குவார்கள். பிறகு, அவன் அவ்வதிகாரத்தை யிழந்துவிட்டால், உடனே எல்லோருக்கும் காட்சிக்கெளியனாவன். எல்லோரும் அவனை அலக்ஷியமாய் நெருங்குவார்கள். எவன் உச்சிக்காலத்தில் வெளியேபோவான்? பிறகு சாயங்காலத்திலெவன்வெளிப்போகான்? பார்! இதோ நம்பக்கமாய் ஒரு வேடன் எவ்வளவு அலக்ஷியமாய்ப்போனான்? நாம்

நம் நிலைமையிலிருந்தால், அவன் அப்படிப்போயிருப்பா ஞ? நம்மதிகாரத்திற்கும் அந்தஸ்திற்கு மஞ்சி நின்றிருப் பான். நாமிப்பொழுது ஒளியிழந்துவிட்டோ மாதலின், அவன் நம்மை நெருங்கிச் சென்ருன். அப்படியே, நீயும் ஆதவனைக் கண்கூசாது காண்கிருய்.

**தமயந்தி** :—பிரபோ! அதோ இரண்டு அன்னப்பறவைகள் வந்திறங்குகின்றன பார்த்தீர்களா? இந்த உயர்ந்த ஜாதி யாகிய புண்யப்பறவைகளின் காட்சி விசேஷத்தாற்ருன் நம்மிருவருக்கும் சேர்க்கைபலித்தது. அதனுலேயே நெடு நாட் சுகமனுபவித்தோம். இப்பொழுது மறுபடியும் கா ட்சி கொடுக்கின்றனவே! மறுபடி நமக்குச் சுகங்கிடை க்கப்போகிறதோ? தங்களுடன் என்னைச் சேர்த்துவை த்தது அன்னப்புள்ளாதலின், அவ்வினத்தி னிடத்திலே யே எனக்கொரு பற்றுண்டாய் விட்டது. ஆகையால், அதோ இறங்கி நம்மை நோக்கிவரும் புட்களைப்பிடித்து விளையாட ஆவல்கொண்டுளேன். அவைகளைப் பிடித்துத் தருவீர்களா?

**நளன்** :—அப்படியே செய்கிறேன். எனக்கும் அன்று முதல் அவைகளிடத் தன்புதான். அதிலேயும், இப்புட்கள் மிக வழகா யிருக்கின்றன. பொன்போ லொளிவிடுகின்றன. ஆகையால் இதோ பிடித்துத் தருகிறேன். நீயும்கூடவா.

[போகிருர்கள்.

# இரண்டாங்களம்.

---

இடம்: காடு.

காலம்: இரவு.

பாத்திரம்: கலிபுருடன்.

கலி:—[பாடுகிறான்]

(கா) இராகம்-மாயமாளவகவுளை, மிச்ரதாளம்.

பல்லவி.

தனதந்த நாதந்த நாதாத் - தனத்
தனதந்த நாதந்த நாதந்த நாதா.

சரணங்கள்.

1. நானே முடிக்காது விடுவேன் - எண்ணம்
நாளொரு கோடியேயானாலுந் தானே
ஏனோ இவற்குச் சுகந்தான் - என்னை
ஏமாறச் செய்த சிறுக்கியைக் கூடி (தன)

2. இந்திரன் முன்னிலை தன்னில் - நானும்
இட்ட சபதம் தவறிடா வண்ணம்
தந்திர மாய்த்வாத சாண்டு - தங்கித்
தவறுகண்டேயென்றன் வசமாக்கிக்கொண்டேன் (தன)

3. புஷ்கர னென்ற வோரரசன் - அவன்
புத்தியிலும் யுத்தி தன்னிலு மேதான்
சுஷ்க மடைந்த வோர் மூர்த்தி - அவன்
சூரத் தனத்திற் குவமான மில்லை (தன)

4. நளன்பேரைக் கேட்டாலும் போதும் - அவன்

நாலாறு லாகவும் போடுவ னங்தோ
ளமென்று காதிற் கேட் டாலும் - யுத்த
காதவழி யவன் ஓடி விழுவான் (தன)

5. அத்தகை யரசன் றனக்கு - என்றன்
அருள்கொடுத் தேபிற காண்மையுந் தந்து
சத்திய சந்தனும் நளனை - மனம்
சலிக்கச் செய்தே யிவன் றன்வச மாக்கி (தன)

6. சூது பொரவுமே செய்தேன் - சூதிற்
சூதாகவே கவறுருடும் புரண்டு
ஏது மில்லாம லடித்தேன் - நளன்
எங்கியே நாட்டைக் கடக்கவுஞ் செய்தேன் (தன)

7. இத்தனை செய்தும் பயனென் - ஐயோ
இருவரு மின்னும் பிரிந்தில ரேதான்
பத்தி யதிகத்தி னாலே - பாவை
பர்த்தா வுடன்வனம் போக விசைந்தாள் (தன)

8. நான்கொண்ட வெண்ணமும் போச்சே - அவர்
நாட்டி லிருக்கும் பொழுதேனுங் சொஞ்சம்
தான்பிரிந் திருந்தார் தனித்தே - இன்னே
தனியென்னு மெண்ணந் தனியாகப் போச்சே (தன)

9. அவரைக் கெடுக்க நினைந்து - பொன்
அன்னப் பறவை வடிவெடுத் தேநான்
கவர்ந்துகொண் டேனவ ளுடை - ஐயோ
கன்னிக்கும் மன்னற்கும் காதல் மிகவே (தன)

10. இருவர் உடற்கும் பொதுவாய் - உயிர்
இயங்குவ தொன்றே யெனும்பொருள் தோன்ற
ஒருவ ருடைமைய யிருவர் - சுற்றி
உவகை யுடனே யுலாவுகின் றாரே (தன)

11. நீரைப் பிரித்தல்போ லாச்சே - இவர்
நீடித்த காதல் நெருங்கவும் போச்சே
சீரைக் கெடுக்க நினைந்த - என்றன்
சிந்தையு மென்னைச் சிரித்திட லாச்சே (தன)

ஆனாலும் ஒருமுறை　　பார்ப்பேன் - இவர்
அன்பே யதற்கு மசையாது　நிற்கிற்
போனாலும் போகட்டு　　மென்சொல் - இந்தப்
புண்ணிய நேயர்களைப்பிரி　யேனான்　　(தன)

13. போகிறா ருறைவிடம்　　நாடி - அங்குப்
பூவை யுறங்குந் தருண　　மறிந்தே
ஏகி நளன்மனந்　　தன்னை - மிக
ஏதஞ்செய் தேயவன் நெஞ்சைக் கலைப்பேன்　　(தன)

14. கன்னியை விட்டுப்　　பிரிய - எண்ணம்
கருத்தி லுதிக்கச் செய்தேயவன் வேண்டும்
நன்மரோர் வாளா　　யிருப்பேன் - அவள்
நல்லுடை கொய்துமே செல்ல வடிப்பேன்　　(தன)

15. கணவற் பிரிந்திட்ட　　கன்னி - மிகக்
காத லுடனே கதற　　வடிப்பேன்
கணவன் றனையுமே　　கீழ்மை - செய்து
கயவ னொருவனுக் காளாக வைப்பேன்　　(தன)

ஆ! ஆ!! என்னுடைய எண்ணங்களெல்லாம் இப்படியா வீணாகின்றன? ஐயோ! அவர்கள் வனவாசத்தை யிடையூறாக நினைப்பார்களென் றெண்ணினேனே! அவர்களப்படி நினைக்கவில்லையே! ஏதோ உத்யான வனமென்றன்றோ மதிக்கிறார்கள்? ஆனால் இவர்களைப்போல உண்மையாய் நேசிக்கக்கூடிய இருவர் சேர்ந்திருக்க நேரிட்டால் நரகமும் சுவர்க்கமன்றோ? ஐயோ! இவர்களைத் துன்பப்படுத்த முயல்வது கனலைக் கத்திகொண்டு வெட்டுவதாக வன்றோ முடிகிறது? இஃதென்னபாபம்? இந்த மன்னனிடத்தில் ஒருகுற்றங்காணப் பன்னிரண்டுவருஷகாலம் பிடித்தது. இப்பன்னிரண்டுவருஷகாலமாய், அவனுடைய சீலத்தையும், ஆளுகை நேர்மையையும், இந்தத் தமயந்தியின் கற்புநிலையையும் கண்டுவந்த எனக்கு, இவர்களைத்

துன்பப்படுத்த வேண்டுமே யென்று மனந் தத்தளித்தது. இருந்தாலும், தேவராஜனுக்குமுன்செய்த சபதத்தை மேற்கொண்டு, ஓர் அற்பக்குற்றத்தை யபரிமிதமாக்கி வருத்த வெத்தனித்தேன். இன்னும், இவர்கள் நேயத்தைக்கண்டு எப்படிப்பிரிக்க முயலுவேன்? ஐயோ! வாய்பதறிக் கூறிய மாற்றம் பிழைக்குமே! நல்லது, எல்லாவற்றிற்கு மின்னு மொருமுறை பார்ப்பேன். அவர்கள் படுக்கச்செல்லும் பாழ்மண்டபத்திற்குப் போகிறேன். அவ்விடத்தில், தமயந்தி உறங்கும்பொழுது, நளன் மனத்தைக்கலக்கிப் பிரிய வெண்ணங்கொள்ளச் செய்கிறேன். இப்பொழுது இருவருக்கு மொன்றாய் விளங்குஞ் சேலையை இரண்டுதுண்டாக்க, ஒரு சிறிய வாளாகவும் நளன் காண விருப்பேன். பிறகு நளனை அவனுடைய சிற்றரசர்களி லொருவனுக்குச் சிற்றாழியஞ் செய்யப்பணிப்பேன். அப்பொழுதாவது, தமயந்திதேவதைகளை அவமதித்ததற் கிரங்குகிறாளா? பார்ப்போம். இந்த முறையும் எனது ஏற்பாடு தவறினால், இனி நான் இவர்களை வருத்தேன். என்வாக்குப் பொய்த்தாலும் பொய்க்கட்டும். இத்தகைய புண்யாத்மாக்களுக்காக நஞ்சபதத்தை யேனிழக்கக்கூடாது? நல்லது. நானிதில் ஜயத்தை யடைந்தேனுயினும், கொஞ்சக்காலத்தில், இந்நளன் முன்புதோன்றி, அவன் நாடுநகரங்களையும், பிரிய நேரும் பெண்சாதி பிள்ளைகளையும் கூட்டிவந்து ஆசீர்வதிப்பேன். எவ்வெதப்படியாயினும், என்னாற் பீடிக்கப்படாதா ரொருவருமிலர். அத்தனை பெயர்களிலும் இவனுக்கீடானவ ரொருவருமிலர். நான் இப்பொழுது அவர்கள் செல்லும் பாழ்மண்டபம் நோக்கிப் போகின்றேன். [போகின்றான்.



## மூன்றாங்களம்.

இடம் : காட்டிற் பாழ்மண்டபம்.
காலம் : இரவு.
பாத்திரங்கள் : நளன், தமயந்தி.

**தமயந்தி** :—நாதா! இந்த இருளடைந்த மண்டபத்திலா படுத்துறங்குகிறது? பயமாகக்கூட விருக்கிறதே! பூச்சிபொட்டி னுபத்திரவத்திற் காளாகுனுமாவோமே?

**நளன்** :—சகி! என்னசெய்கிறது? காட்டில் நமக்குயார் விளக்கேற்றி வைக்கப்போகிருர்? இருட்டிற்றான் கையினுல் தடவி நிதானித்துக்கொண்டு படுத்துறங்க வேண்டும். ஐயோ! பாவியேனைமணந்ததனுல், தூண்டாமணிவிளக்கெறிந்துகொண்டிருக்கும் அரண்மனையைவிட்டு இவ்விருண்ட காட்டிற்றங்க வேண்டியிருக்கின்றது.

**தமயந்தி** :—பிரபோ! இனியவ்விதம் சொல்லாதீர்கள். தங்களுடைய முகத்தினொளியால் இருளைத்தப்புவேன். இவ்விடத்திலா படுத்துக்கொள்கிறது? கல்லுங்கட்டியுமாக விருக்கிறதே? (தடவுகிருள். கையைச்சரேலென் றிழுத்துக்கொண்டு) ஆ! அப்பப்பா! முட்கூட விருக்கிறதா?

**நளன்** :—என்கண்மணி! எங்கே உன்கையைப் பார்ப்போம். முள்தைத்துவிட்டதா? ஐயோ! நானென்ன செய்வேன்? அகிற்புகை யூட்டிய மலர்மெத்தையிற்படுக்கும் உன்மேனி எவ்வித மிந்த முட்களிலும் புழுதியிலும் தங்குமோ? என்னகாலமோ இப்படியாயிற்று!

* " அனிச்சமென் புதுமல ரமளி மேயினும்
பனித்திடு மெய்யெனப் பதைத்து வாடுவேன்
கனிப்படு கிளவிவெம் பொடியிற் கண்படி
லினித்தமி யேனுயி ரெங்ங னுய்யுமே?" (௯௪)

* நைடதம்.

**தமயந்தி** :—பிரபோ! எனக்காக இவ்வளவு வருத்தப்படவேண்டுமோ? ஐயோ! தங்களுக்குத் துயர்விளைக்குமே யென்றல்லவோ வருந்தினேன்? இம்மண்ணரசர்க ளனைவரும் தந்தாள்பணிந்து, கைகட்டி வாய்புதைத்து நிற்க, மென்மையாகிய சிங்காதனத்தில் வீற்றிருக்கக்கூடிய தாங்கள் இந்த முள் நிறைந்த மண்டபத்தில், யாருமற்ற பரதேசிபோலிருக்க நேர்ந்ததே யென்றல்லவோ என் மனம் பதைக்கிறது? நாதா! நானிதையெப்படிச் சகிப்பேன்? என்னுடல் நடுங்குகிறதே! ஐயோ! தாங்கள் பள்ளியறைக்கு வரும்பொழுது, வந்தியர், சூதர், மாகதர்கள் நும்புகழ்கூறி நிற்பார்களே! இருபுறத்துஞ் சாமரைவீசுமே! மகரயாழிசைக்குமே! என பிராணநாதா! இவ் வார்த்தையின் பேரொலியோ இன்று கட்டியம்? இக் கோசுவின் ஞெளியோ சங்கீதம்? என்துரையே! இதுவோ நங்கதி? ஐயோ! யாரிட்ட சாபமோ? நாமறிந்து பிறர்க்குத் தீங்கிழைக்கவில்லையே? முற்பிறவித் தீவினையோ? ஈசா! என்ன தீங்கியற்றினே மிப்பாடுபட?

"என்செய லாவதி யாதொன்று மில்லை யினித்தெய்வமே
உன்செய லேயென் றுணரப்பெற் றேனிந்த வூனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்று மில்லை பிறப்பதற்கு
முன்செய்த தீவினை யோவிங்ங னேவந்து மூண்டதுவே"*

(மயக்கித்தேதேவிழுகின்றாள்)

**நளன்** :—(தூக்கியெடுத்து) என்னருமைக்கண்மணி! எனிவ்விதம் வருந்துகிறாய்? வருந்தலை. நாம் செய்துள்ள கர்மத்தை நாமே யனுபவித்துத் தீர்க்கவேண்டும். அழுவதிற் பயனென்னை? நாம் முன்பிறவியிற் பிறருக்கேதேனுந் தீங்கிழைத்திருப்போம். அஃதில்லையேல், நம்மிருவரையும் கூட்டிவைத்த அன்னப்பறவையே நமக்கிடுக்கணியற்றுமா? ஆதலால், என்னவந்தாலு மதைப் பொறுமையுடன் நாமனுபவிக்க வேண்டியதே. நல்லது, நாழி

---

* பட்டினத்தார் பாடல்.

கையோ ஆகிவிட்டது. பறவைகளெல்லாந் தம் உறைவி டம்நாடித் துயில் கொண்டன. அதோபார். அந்த மரங் களினிலைகள்கூட அசையவில்லை. ஒவ்வொன்றாய்க் கா ட்டுமிருகங்கள் கத்திக்கிளம்புகின்றன. அதோ கேட்டா யா? ஒரு சத்தம். அதுதான் காட்டியின்குமுறல். ஆதலால், வருத்தத்தை மறந்து கொஞ்ச நாழிகை படுத்துறங்கு வோம். தன்னாலே பொழுதுவிடிந்தா லிருக்கவேயிருக் கிறது நந்துயரம். ஆகையா லிப்படிப்படுத்துக்கொள் வோம்.

(நளன் தமயந்தியின் கழுத்திற் கையைப்போட்டுக் கொண்டு கீழேபடுக் கத் தமயந்தி நளன் கையில் தலையை வைத்துக்கொண்டு அயர்ந்து நித்தி ரை போய்விட்டாள்).

**நளன்:**—(தூங்குகிற தமயந்தியின் முகத்தைநோக்கி) என்கண்மணி அய ர்ந்து நித்திரை போய்விட்டாள். ஐயோ! இவள் விழித் திருக்கும்பொழுது என்னுடைய துக்கத்தை வெளிக்கா ட்டக்கூடாதென்று அடக்கிக்கொண்டிருந்தேன். யான் அடக்கினாலும் அடங்கவில்லையே! எவ்விதமடங்கும்? என்னுயிருக்குச்சமானமாய் என்னால் நேசிக்கப்படும் என் கண்ணாட்டி, அவளுடைய சிலதியர்கள் பரப்பிய மென் மையாகிய மலர்களின் மீது நடக்கும்பொழுதும் நோவ க்கூடிய பாதங்களுடன், இக்காட்டிலுள்ள பருக்கைக் கற்களிலும், முட்களிலும்நடந்து வருந்துவதைப்பார்க்க எனக்குச் சகிக்கவில்லையே! இதற்குள்ளாக இவள் முகக்காந்தி மழுங்கிவிட்டதே! கண்களோ கலங்கியி ருக்கின்றன! என்செய்வேன்? இனி இவ்விதம் எத்த னை நாட்கள் கழிக்கவேண்டுமோ? எப்படிக்கழிப்பேன்? அப்பொழு திவளை யெப்படிக்காப்பேன்? இக்கோலத் தைக்கண்டு கலங்குகிறதே என்னெஞ்சு! ஐயோ! இத் துன்பங்களுக்கெல்லாம் ஆளாகாது தாய்வீடு செல்லென் றாற் கேளேனென்கிறாளே! இவளை யிந்நிலைமையிற்பா

ர்க்கு மென்கண்கள் நீராகிவிடலாகாதா? என்னுயிர் நீங்காதா? என்னெஞ்சு வெடியாதா? என்னசெய்வேன்? இப்பொழுதாவது சற்று நித்திரைசெய்கிருள். விழித்தெழுந்தால், அவள் படுந்துயரை நானெவ்வண்ணங் காண்பேன்? கேவலம் ஒருபெண்பேதை. இந்திராதி தேவர்களையும் அவமதித்து, என்னிடத்துள்ள காதலால் மாலையை என் கழுத்திலிட்டாள்! அத்தகைய அருமைக்கண்மணியை வருத்தமுறாவண்ணம் வைத்துக்காக்க, ஆண்மகனாய்ப்பிறந்து அரசாண்டுவந்த என்றாற்கூடவில்லையே! அவள் துயரைப்போக்கவுந் திறனற்றேனே! அதைக்காணவுஞ் சகிக்கவில்லையே! என்னசெய்வேன்?

(புலம்புகிறான்)

உயிருக் குயிரான வுத்தமியைக் காக்கச்
செயலற் றிருப்பதுமென் செய்கை பராபரமே! (௬௫)

யாரைப் பழித்தேனோ? யார்மனப்புண் ணாக்கினனோ
பாரை யிழக்கவுமிப் பாவி பராபரமே! (௬௬)

விண்ணவர்க ணிற்க விரும்பி யெனையணைந்த
பண்ணின் மொழி துன்பப் படுமோ பராபரமே! (௬௭)

காதலி படுந்துயரங் காண்பதிலு மென்றனக்குச்
சாதல்நல மன்றுகொலோ சாற்றாய் பராபரமே! (௬௮)

ஏதோ வுனதருள்கா ணென்மீ திருந்தபடி
மாதோ ரிடத் துறுமெம் மானே பராபரமே! (௬௯)

(சற்றுக்கண்ணுறங்குகிறான். பின்னுமெழுந்து)

எனக்கு விசனமோ முழங்கி மேலெழுகின்றது. இவளையிந்நிலையிற் பார்க்கச்சகிக்கவில்லை. என்னதான் தேற்றிக்கொண்டாலு மென்மனந்தேறவில்லையே! இன்றைப்பொழுதிற்கே யிக்கதியானவள் நடுவேனிற்காலத்தி லென்னபாடுபடுவளோ? அதை நம்மாற் பார்க்கவேமுடியாது.

ஆதலால், ஒருகாரியந்தான் செய்யவேண்டும். அதுதான் சரி. இவளைவிட்டுப் பிரிதலேமேன்மை. (சற்றுப்பொறுத்து) ஐயோ! அரைநாழிகைகூடப் பிரியவாற்றாத என்கண்மணியை யெப்படிப்பிரிவேன்? பிரிந்தெப்படி யுயிர்தரிப்பேன்? அவள்தா னுயிர்தாங்கி நிற்பாளோ? மேலும், அவளைத்தனியேவிட்டா லவளென்செய்வாள்? அவளைக் கான்விலங்குக்கள் கொன்று தின்றுவிடுமே! துன்மார்க்கர்கள் காட்டிற் சஞ்சரித்த லியற்கையே! அவர்களால் மானக்கேடு நேர்ந்தாலென்னசெய்கிறது? குலத்திற்கீனமன்றோ வந்துசேரும்? அப்படி யவளைவிட்டு நீங்கினால், அவளென்னைப்பற்றி யென்ன நினைப்பாள்? சினங்கொண்டு சபித்தாலும் பலிக்குமே கற்புடையா ளாதலின்! அல்லது, என்பெயரைச் சொல்லிக்கொண்டு பிராணனைத் துறந்தாலும் துறப்பாளே! அதனாற் பெண்பாவஞ் சூழுமே! என்ன செய்வது? எதைப்பார்க்கிறது? அவள் துன்பப்படுகிறாளே யென்று பார்த்தால் அவளுயிரிற்கும், மானத்திற்கும் அபாயம் வரும்போ லிருக்கிறதே! (கொஞ்சம்யோசித்து) என்னவந்தாலும்வரட்டும். இவளைவிட்டுப் பிரியவேண்டியதுதான். அப்படிப் பிரிவதற்கு மிதுதான்தருணம். இதுதப்பினால், அவள்விழித்துக்கொண்டு விடுவாள். பிறகு, அவளைவிட்டு நீங்குத லசாத்தியமாய் முடியும். அவளும் என்காலைப் பிடித்துக்கொண்டு விடமாட்டாள். அப்படிக் கதறுகிறவளைவிட்டுக் கடுமையுடன் பிரிய என்னாலும் முடியாது. ஆதலால், இதுதான் சமயம். நான் சென்றபிறகு அவள் விழித்துக்கொண்டால், கொஞ்சப்பொழுது காடுமுழுமையுந் தேடிப்பார்ப்பாள். பிறகு என்னைக்காணமாட்டாது கதறுவாள். பெண்ணானதனாலும், இடம் காடானதனாலும் பயந்து காட்டைக்கடக்கத் துணிவாள். அப்பொழுது நான் முன்காட்டியுள்ள, விதர்ப்பதேசம் போகும் பாட்டை நினைவிற்குவரும். உடனே அதை நாடி யத்தேச மடைவாள்.

ஆங்குப் போய்விட்டால் அவர்கள் அவளைப்பார்த்துக் கொள்வார்கள். குழந்தைகளுக்கும் ஆதாரமாகி விடுவாள். இதுதான் தகுந்தயோசனை. இனித்தாமதிக்கக்கூடாது. பொழுதும் விடியுநேரமாகிவிட்டது. துயில் நீங்கினு லும் நீங்கிவிடுவாள். ஆதலால், அவள் விழித்திடாவண் ணம் என்னைக்குச் சரியாக இந்த மணற்குவியலை வைத்து நீங்குகின்றேன். (மணலைக்குவித்து அதன்மேலில் தமயந்தியின் தலையை மெதுவாக வைக்கிறான்). அட! கஷ்டமே! இஃதோரி டையூறிருக்கிறதா ? இருவருக்கும் ஒரே துகிலாகவன்றோ விருக்கிறது ? இதைக்கொய்ய வேண்டுமே. கையாற் கிழி த்தால், அவ்வதிர்ச்சியா லெழுந்து விடுவாளே ? கத்திய மில்லையே ? (நாற்புறமும் பார்க்கிறான்) அதோ ! பள பள வென்று கிடக்கிறதே அஃதென்ன ? (கிட்டி யெடுத்த) கத்தி தான் ! ஒன்று யகப்பட்டது ! எங்களைப் பிரியபதி லீச னுக்குக்கூடச் சம்மதம்போலும் ? அதனுற்றான் எதிர் பார்க்கக்கூடாதவிடத்தில் நமக்கு வேண்டிய பொருள் கிடைத்தது. பகல்வேளையில் வெய்யிலிற்குத் தங்கியிரு ந்த வேடர்கள் தவறி விட்டுப்போனதாக இருக்கும். எப் படியாவது நமக்குபயோகப்பட்டது பார்த்துக்கொள் வோம். இங்குக்கிழிக்கலாமா ? சரியாயிருக்குமா ? (பார்த்துச் சேலையைக்கொய்கிறான்.) சரி. கிழித்தாகிவிட்டது. இனிப் போகவேண்டியதுதான். ஐயோ ! என்னவிதமாய் நானி வளைவிட்டு நீங்குவேன் ? இரவின் இருள்கூடப் புலப்ப டாவண்ணம் ஒளிவீசுமிவளுடைய சந்திரவதனத்தை வி ட்டுப்பிரிய மனம் வரவில்லையே ! ஆ! ஆ! ! பளிங்குபோ ன்ற இவளுடைய நுதலும், மதுவருந்தி மதித்துத்தாம ரையிதழ்களிடத்துத்தங்கும் வண்டுகள்போன்ற கண்க ளும், திருமகளின் நர்த்தனசாலை யெனத்தகுமிவள் முகார விந்தமும், சுகம் அருந்தவொட்டாது சுகம் விளைக்கு மிவளது சுகந்தக்கொவ்வைச் செவ்வாயும், நல்லவிவே கிகளுடைய மனப்பறவையையுஞ் சிக்கச்செய்யுங் கண்

ணிபோன்றகூந்தலும், என்னைப்பற்றியிழுக்கின்றனவே! எவ்வாறு நான் போவேன்? அவள் நித்திரை செய்கிருளே. இப்பொழுது போய்விடுவோமென்றால் இத்தனை காவலாளர்களை வைத்திருக்கின்றனளே! இவைகளுங் காவலைச்சரிவரப்பார்க்கின்றனவே? ஆனால், இவையனைத்தும் அவளாற் போஷிக்கப்பட்டவையல்லவா? அதனாற்றான் அவைகள் நன்றியுடன் தந்தலைவிக்குத் துன்பநேரிடாவண்ணங் காக்கின்றன. ஐயோ! அவ்வசேதனப்பொருள்களுக்கும் நன்றியறிவிருக்கின்றதே! இப்பாழும் மனிதனுக்குத்தானே கிடையாது? அவள் என்னைப்போஷித்ததற்கு நான் அவளைச் சந்தியில் விடப்போகிறேனே! ஆனால் இவைகளுக்குச் சுயநயமு மிருக்கின்றது. நான் பிரிந்துவிட்டால், என்னிடத்து உயிரை வைத்திருக்கும் என் கண்ணாட்டி, இவைகளைப் போஷிக்கமாட்டாளன்றோ? என்னசெய்வேன்? (முகத்தை யுற்றுநோக்கி) அ! ஆ!! என்ன? முகத்தினுடைய அழகு! அடடா! எவ்வளவு அயர்ந்து தூங்குகிறாள்? இப்பொழுது அவள் முகத்தில் விசாரமென்பதே யில்லை. இதுதான் தூக்கத்திலுள்ள தோர் பெரிய நன்மை. எவ்வளவு விசாரமிருந்தாலும், என்ன கஷ்டப்பட்டாலும், ஒருவனுக்குத் தூக்கம் மாத்திரம்வந்துவிட்டதோ, அவ்வளவும்பறந்துபோம். தூங்கி விழிக்கும் வரை அவ்விசாரங்க ளவனுடையனவல்ல. அந்தத் தூக்கத்தைமட்டும் ஈசன் உண்டாக்காதிருந்தானே, மனிதவர்க்கமே நசித்துப்போம். என்னே தூக்கத்தின் பெருமை?

* " துயிலே! மாநுடர் துணையே! இமையினில்
நயனுற நடிக்கும் நலங்கனி நாரியே!
வருந்திய மனக்குப் பொருந்திய மருந்தே!
விண்ணவர் தமக்கும் மேவரி தாகி

* தனிப்பாசுரத்தொகை.

மன்னுலகினர்க்கு வாய்த்தபே ரமுதே!
வைக்க முயர்த்தி யாக்க மளிக்குநம்
அம்மையே! சுகந்தரு மனைத்தினுஞ் சிறந்ததே!
இம்மையிற் செம்மைசா லின்ப வூற்றே!
உன்னைத் தணந்தா ரொருபொழு துய்வரோ?
நின்னியல் புணரா நீசரே யிகழ்வார்.
செய்யவ டௌவையாச் செப்புநர் கருத்தென்?
செய்யவ டன்னினுஞ் சிறந்தனை யென்பதே.
இகழ்ச்சியோ விதுதான்? இயம்புதி;
புகழ்ச்சியே யன்றோ? பொருகவற் பகையே!" (௪0)

இப்பொழுது, தமயந்தியைக்காட்டிலும் துயருடையா ரிலர். அப்படி யிருந்தும் அத்துயிலினுதவியால், விசார மற்றவள்போலக் காண்கிறாள். ஐயோ! இப்படி நிர்வி சாரமாய்த் தூங்கும்பொழுது, அவளை நான்விட்டுப்பிரிய முயலுவதை யறிவாளோ? விழித்தபிறகு எதிர்பாராத தாகவன்றோமுடியும்? மேலும், அவள் இவ்விதம் விசார மற்றுத் தூங்குவதெதனால்? நாடுநகரம்போனாலும், குழ ந்தை குட்டிகள் போனாலும், தாய்தந்தையர்கள் போனா லும், என்னதுன்பப்பட்டாலும், நானிருக்கிறேன்; நான் அவளைக் கைவிடமாட்டேன் என்கிற நம்பிக்கையாலல் லவா? நான் ஒரு கொடியனாகி, நம்பிக்கைத் துரோகஞ் செய்து, அவளைவிட்டு நீங்க எண்ணுவேனென்று, கன விலுங் கருதி யிருப்பாளோ? அப்படி யவளிருக்க, நா னிந்தயோசனை செய்யலாமோ? ஆயினும், நான்செய்யக் கூடியது வேறென்னவிருக்கிறது? நான் துரோகியாகப் போகவேண்டியதுதான். வேறுவழியில்லை, இதோ போ கிறேன். (போகிறான். திரும்பு) ஐயோ! போவதென்றுபோ னால், என்கால் பின்னே யிழுக்கின்றதே! ஓர் அடிமுன் வைத்தால், ஒன்பதடி பின்வாங்குகிறதே! ஐயோ! பா விக்கால்காள்! என்னுடையவைகளாக என்னுடன் பிற

ந்து வளர்த்துவிட்டு, நடுவே வந்தவளுக்குச் சாதகமாகி நீர்களே? ஈசா! நானிறக்கலாகாதோ? என்பிராணன் நீங்கமாட்டே னென்கிறதே! இவளைவிட் டகன்றாலும் இவள்கதி யென்னுகுமோ? விலங்குகளுக் கிரையாவ ளோ? அல்லது, என்னைநினைந் துயிர்துறப்பாளோ? வே றொருவர் கைப்பட்டு வெதும்புவளோ? நாமென்று மறி கிலேனே!

உலக முழுது மொருகுடைக்கீ
ழுவம னிலியா யரசியற்றித்
திலக மனையாள் பாவையர்தந்
திருமா முகத்தி னெழில்காண
வலகி லிடையூ றனைத்தையும்வென்
றமரே சனுமே தலைகுனியக்
குலம தனுக்கோர் விளக்காகுங்
குயினேர் மொழியா டனைமணந்தேன். (௬௧)

மணந்த மனையாண் மனநிலையு
மதியும் பதியை மகிழ்விக்குங்
குணமு மனையாள் குழலிசையுங்
குழலி னெழிலுங் குளிர்முகமுங்
கணமு மகலா தனுபவித்த
கடையேன் மனமோ கன்மனமாய்த்
தணந்து படர்வான் றலைப்பட்டேன்
றனியே னென்றுந் தனியேனே. (௬௨)

தனியே கிடந்து தயங்கிடுமத்
தருண மதனிற் றேவதைகாள்
பனிநேர் மொழியாள் படுந்துயரும்
பயமு நீக்கிப் பரிந்துரைமி
னினியே குவளு னிவணகற்றி
யிதுவோ வென்றன் றலைவிதியு

மணியா யஞ்செய் தகல்கின்றே
னனமே போல்வா டனைவிடுத்தே. (சரு)

என்கதி யிப்படியோ வாயிற்று? ஐயோ! தெய்வங்காள்! என்கண்மணியை வேறு வருத்தத்திற் குட்படுத்தாது, அவளுடைய நாட்டையடையச்செய்து காப்பாற்றுவீர்களா? நான் சென்று வருகின்றேன். (போகின்றான், மறுபடி) ஜகதீசா! இவ்விந்து முகத்தை நானினி யெப்பொழுது காண்பேனோ? காணப்போகிறதே யில்லையோ? இப்பிறப்பி லில்லையாயினும், இனி எப்பிறப்பு வாய்க்கினும் அப்பொழுது இவளையே மனைவியாகக்கொண்டு வாழக் கருணைசெய்வீர்! இனி நான் பார்ப்பதே நிச்சயமில்லாத என்கண்மணியை என்மனமார முத்தமிட்டுப் போகிறேன். (முத்தமிடுகிறான்) என்கழுத்திற் சுகந்த மணமாலையையிட்டு, என்கையைப்பிடித்து, எனக்குப் பல்விதப் பணிவிடைகளுஞ்செய்த இக்கரங்களை யொருமுறை முத்தமிடுவேன். (கையை முத்தமிடுகின்றான்) இன்னு மொருமுறை அவளிந்துமுகத்தைக் கண்ணாரக்காண்பேன். இனிவருவேனோ? பின்னொருதரங் காண்பேனோ? ஏது? இனி வாரேன்? உன்முகம்பாரேன்! என்கண்மணி! தமயந்தி! இன்றுடன் நம்சேர்க்கை யொழிகிறதடி! திரும்பவுண்டாகுமோ உண்டாகாதோ? நீ யென்னிடத்து வைத்த அன்பிற்குக் கன்மனமுள்ள கொடுத்துவையாத்துரோகி நானாதலின், அநுபவிக்க மாட்டாது, உன்னை யதிகத் துன்பத்தில் விட்டுப்போகிறேன். ஆயின், இவ்வளவிற்கும் காரணம், எனக்கு உன்னிடத்துள்ள விசேஷ அன்பாகும். உன்னைக் கடவுள் காப்பாராக! எனக்குப்பாக்கியமிருந்தால், திரும்ப வுன்னையடைந்து, உனதமிழ்தினுமினிய வசனத்தைக் கேட்கிறேன். உன் குளிர்ந்த நோக்கத்தாற் றழைக்கிறேன். இல்லையேல், நாசமடைகிறேன். இதுதான் நம்கடைசிவிழிப்பு. போகின்றேன்.

கானத் துறையுங் கலைமா னினமே
தானொத் தவெழிற் றமயந் தியைநீர்
வானொத் திடுசீர் வடிவே யெனலாம்
மானக் கலனெய்ந் தமலர்த் திருவான். (௪௪)

வீமன் பதிசேர் வழியே விடுவீர்
தாமம் புனைசேர்த் தமயந் தியையே
வேமென் மனமிவ் விதனம் மதனாற்
போமா றெணுநான் புகுபோக் கெதுவோ. (௪௫)

வானத் தொளிர்கின்ற வான்மீன்கா ளென்னுடைய
மானைத் துயரடைந்து வாடாது காவீரோ? (௪௬)
காமன் றனையெரித்த கண்ணுதலே கானுறையும்
வீமன் குலவிளக்கா மெல்லியலைக் காவீரோ? (௪௭)
வனத்திடத்துச் சஞ்சரிக்கும் வானவர்கா ளென்றன்
மனத்திடத்துச் சஞ்சரிக்கும் மாதரசைக் காவீரோ? (௪௮)
போமாறென் றின்றிப் புலம்பித் தவிக்குமெனக்
காமாறென் றண்டே லதையெனக்குக் காட்டீரோ? (௪௯)
காதல்புரிந் தென்னைக் காத்துவந்த காரிகையே!
போதல் புரிந்துன்னைப் போற்றாது போகின்றேன். (௫0)
மானே! அகல்கின்றேன். மாதரசே! போகின்றேன்.
தேனே! இனியுனைநான் றேருநா ளெந்நாளோ? (௫௧)
பாரிழந்து பாலருடன் பாரியரைத் தானிழந்து
பேரிழந்து சூதாடிப் பேடியர்போற் போகின்றேன். (௫௨)
என்போ லினியுலகி லின்னாக் கவுறாடித்
துன்பெய்தி மாக்காள்! துடியாது வாழ்வீரே! (௫௩)

[போகின்றான்

**தமயந்தி** :—(துயிலொழிந்து கணவனைக்கட்டக் கைபோடலும், கையிலகப் படாமைகண்டு) ஓ! நாதா! எங்குற்றீர்? (தடவிப்பார்த்து.) என்ன! காண்கிலேன்? (கண்ணைத் துடைத்துக்கொண்டு) ஏன்

இன்னும்வாவில்லே? இஃதென்ன விளையாட்டுப் பிரபோ? காட்டிலா ஒளித்து விளையாடுகிறது, இருட்டுவேளையில்? போதும் வாருங்கள்——என்ன! இப்படித்தாளு செய்கிறது? நன்ருயிருந்தது! கேவலம் ஒரு பெண்தானே யென்று நினைக்கவேண்டாமா? எவ்வளவு நாழிகைதான் விளையாடுகிறது? இதுதாளு விளையாடுஞ் சமயம்? வாருங்கள். தாங்கள் மிகச்சமர்த்தர்தாம்——நாதா! என்ன? நான் கூப்பிடுகிறது கேட்கவில்லையா யென்ன?—நான் பயத்தாற் பதறுகிறேனே! என்னை வந்து தேற்றவேண்டாமோ? (கொஞ்சம் யோசித்து) என்ன? இன்னும் வரவில்லேயே? ஐயகோ! ஒருகால் நான் நாட்டிலிருக்கும் பொழுது கண்டகனவுதான் மெய்யாகிவிட்டதோ? அக்கனவு பலியாதென்ருளே, மோகனம்? ஐயோ! என்மாட்டுப்பலித்ததோ? தேவா! நாசமாய்ப்போய்விட்டேளு? என்கண்ணுளரும் என்னைக்கடிந்தனரோ?——ச்சை! எதற்காக இவ்விதம் பிதற்றுகிறேரும்? ஒருகால், என்னையன் தூக்கத்திற் புரண்டு கொஞ்சத்தூரத்திற்கப்புறந் துயிலக்கூடும். அதைப்பார்ப்போம். (தானும் கொஞ்சம் நகர்ந்து கையாற்றடவுகிறுள்) ஐயகோ! என்றலைவனைக் காணேனே! ஆ! தெய்வமே! என்னைச் சந்தியில்விட்டு விட்டாயோ? என்னபோனபோதிலும், என்காதலரிருக்கிருரென் றிருந்தேனே! பாழுந் தெய்வமே! உனக்கு அதுவும் சகிக்கவில்லேயோ? என்செய்வேன்? எவ்வாறுய்வேன்? (கையைக்கோத்து வயிற்றிலடித்துக்கொண்டு) ஐயோ என்வயிறு பதைக்கிறதே! என்ளுவி பதறுகிறதே! என் சீவன்ருன் போகாதோ? (மேேவிழுகிருள்) என் துரையையும் பிரிந்துமா உயிர்வாழவேண்டும்? ஐயோ! நீலித்தனந்தானே மிச்சமாகிற்து! பத்தினிப்பெண்டி ரென்னைக் காணில் நகைப்பரே! நான் இன்னும்மாண்டிலெனே? என்னுயிர் நீங்கவில்லேயே?———நாதா! விளையாடத்தான் விளையாடுகிறீர்களோ? நான் பிரிந்தா லென்னசெய்

கிறேனென்று பரீக்ஷை பார்க்கிறீர்களோ? இது தங்க ளுக்கு நீதியோ?

மணிவிளக் கெரிந்திடு மனையிற் பள்ளிமீ
தணிதிகழ் கரங்கள்சற் றகலத் தாங்கிடேன்
றிணியிருள் செறியுமித் தீய கானத்துத்
துணிவுகொண் டெனையுமே துறத்த னீதியோ? (ருச)

அன்றிலும் பேடுமா யன்பு மேவிட
வொன்றிய மனத்தோடு முவந்து வாழ்ந்தன
மின்றிவ ணெனையகன் றிருந்து பார்த்தலு
நன்றுகொ லோவென்றன் நாத நாதவோ? (ருரு)

நீண்டநல் லிசையொடு நீதி மன்னனு
யாண்டவுன் னளியினை யறைய வல்லர்யார்?
ஈண்டெனை விடுத்தகன் றியங்கு மிச்செய
லாண்டகை யளவிலுன் னருளிற் கேற்குமோ? (ருசு)

ஆதலி னிதுவரை யாற்ற வைத்தது
போதுமின் றினியெனைப் புலம்பி டாவண
நீதிமிக் குடையசீர் நிடதர் கோமக
வாதர வுடனெனை யண்மு வாய்கொலோ? (ருஎ)

ஐயோ! குறுநகை தவழ்ந்து பிரகாசிக்கும தங்களுடைய திருமுக மண்டலத்தையும், என்னைக் கட்டியணைக்கும் புயங்களையுங் காணப்பெறாது, கண்ணீர்விட்டுக் கதறி யழுகிறேனே! என்முன்தோன்றி, 'அபூர்வை, என்று ஒருமுறை சொல்லி, என்னைத்தழுவாமல், அன்று தேவேந்திர னுபதேசித்த மந்திரந்தா னிருக்கிறதேயென்று, என்கண்காணுது, என்னெதிரிலேயே நின்று வேடிக்கைபார்க்கிறீர்களோ? இதுதானு, அந்த மந்திரங்கற்ற பயன்? அந்தப்பாழு மந்திரம் பலியாது போகக்கூடாதா? நாதா! போதும். இனியாகிலும் இக்கோதாட்டொ

ழியுங்கள். இதோ, அருணோதய மாகிவிட்டது. சூரிய கிரணங்களுந் தோன்றிவிட்டன! ஆதலின், இனியேனுந் தாமதியாது காலைக்கடன் முடிக்கவாருங்கள். நான் பணிவிடைசெய்யச் சன்னத்தையாயிருக்கிறேன். (நளனுடைய உருத்தோன்ற) ஆ! இதோ வந்துவிட்டார். நாதா! இப்படித்தானா விளையாடுகிறது? கொஞ்சமாவது கருணைவேண்டாமா? நல்லது, இனி யொளியுங்கள் பார்ப்போம், அம்மந்திரத்தின் வலியை? நானுங்களைக்கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு விடுகிறேன். (கட்டப்போய் வெட்டவெளியா யிருத்தல்கண்டு) ஐயோ! என் பிரமைதானா? நாதா! வரமாட்டீர்களா? எங்குப்போ யிருக்கிறீர்கள்? ஒருவேளை, 'நமது வேலைக்காரர்களிலரே, இவள்தானே செய்யவேண்டும், அதற்கு நாமேசெய்து கொள்ளுவோம்' என்று அதிகாலையிலெழுந்து, காலைக்கடன் முடித்தற்பொருட்டு, முன்புகண்ட தாமரைத்தடஞ் சென்றிருக்கிறாரோ? போய்ப்பார்க்கிறேன். (சிறிது தூரஞ்சென்று கணவனைக்காணாது) ஐயோ! 'இந்தக்கொடியவள் போகிறவழியாகக்காணோம். துன்பப்படுத்துகிறாள். ஆதலின், இதுதான் தக்க ஏற்பாடு' என்று விட்டகன்றீர்களோ? இனி நான் தங்களைப்பார்க்கப் போகிறதேயில்லையோ? நீங்களென்னைக் காட்டில்விட்டுப்போதல் நீதியோ? தாங்கள் அரசரல்லீரோ? அநீதியாய்த் தண்டிக்கமாட்டீர்களே? நான்றானேதேனுந் தவறுசெய்தேனோ? அதுவுமெனக்குத் தெரியவில்லையே? ஆ!———.

ஐயகோ வென்ற னாருயிர்த் தலைவா!
பொய்யதோ வந்நாட் புகன்றநின் மாற்றம்
'உன்னையான் பிரியே னுண்மையீ' தென்னச்
சொன்னநீ யென்னோ சொல்லிழந் தனையே?
என்னைநீ துறத்தற் கென்பிழைப் பென்னோ?
மன்னனே நின்றன் மலர்வாய் திறவாய்.

ஆதிநா ளன்ன மறைந்தது முதலா
ஓதிநின் னாம முருச்செபித் திட்டேன்.
தோழிய ரென்றன் தோற்ற மறிந்தோர்
நாழிகைப் போழ்தில் நவின்றனர் தாய்க்குத்
தாயரு முடனே தந்தைபா லுரைக்கத்
தேயமன் னவர்க்கெலாம் திருமுகம் விடுத்தார்.
மன்னவன் கோயில் மணமுர சியம்புழிப்
பன்னுவல் யான்பட்ட பாடுக ளனைத்தும்.
'நிடதநா டாளும் நீள்புகழ் நளனே
மடவர லென்னை மகிழ்ந்தணை யாயோ?
என்றுநா னுண்டி யேதுமில் லாமற்
கன்றிய மனத்தேன் கடவுளைத் துதித்தேன்.
நளமகா ராசன் நாடுசேர்ந் தானெனக்
களபமார் தோழி கழறு முன்னே
அமரர்கள் பணித்தவா ளாகப் போந்து
குமரநீ யுன்னெழிற் கோலங் காட்டினை.
அன்றுநான் கொண்ட அன்பிற் காகவோ
வின்றுநீ யென்னை யின்னணஞ் செய்தாய்?
அல்லதூஉ முன்ற னுளநகை தனினின்
சொல்லைக் கடந்தியான் சோர்ந்தது முண்டோ?
ஐயோ நாதா! வாருயிர்த் துணைவா!
பொய்யோ? கனவோ? போக மனைத்தும்.
புட்கரன் பாவி யுட்கர வாசப்
பொய்ச்சூ தாடிப் பொருளெலாங் கவர்ந்தான்.
கொள்ளை கொண்ட கொடியவன் நம்மை
எள்ளலும் நாமும் ஏதிலார் போலக்
கானகம் நாடிக் கடுகிய போழ்து
நானுமே யுன்னை நாதவென் றாற்றிக்
கூடப் போந்த குற்றமோ நீயெனைத்
தேட வைத்துத் திகைப்பச் செய்தாய்?
இப்பெருங் குற்ற மியற்றினே னாயினும்

அப்பனே ! யென்ற னன்பு காரணமாம்.
ஆகையா லென்னை ஆதரித் தாள்வான்
வாகை யேற்றிடாய் வாகையேற் றவனே! (௫௮)

(மூர்ச்சித்து விழுந்து மறுபடி யெழுந்து.)

ஓ! நாதா? இவ்வளவுதானு தங்களுட னெனக்குவாழ்க்கை? இனிக்கிடையாதா? தங்களுடைய முறுவல் முகத்தை யென்றுகாண்பேன்? ஐயோ! என்னைக்கைப்பிடித்தநாண்முதல், என்னையொருசொற்கூடக் கடிந்து சொன்னதில்லையே! நாதா!

தண்டார் புனையுன் றடமார்பிற்
றனிவீற் றிருந்து தளிர்த்தவள்யான்
கண்டார் நகைக்கக் கானகத்திற்
கணவற் பிரிந்த காரிகையாய்த்
திண்டா டுவதுன் றிருக்கருணைக்
கழகோ தீயேன் றனைப்போலு
முண்டோ வொருவ ருலகதனி
லுயர்ந்தோர் யார்க்கு முயர்ந்தோனே! (௫௯)

அன்பா ரிடத்தி லதிகமென
வந்நா ளடியேன் மனங்களிக்க
'வென்பா லுனக்கே வதிகமெனக்
குன்பாலன்பு மிகுதி' யென்றென்
றன்பா லுரைத்துத் தடமார்பிற்
றழுவி யணைத்த தலைவாவோ
துன்பே யடைந்து துணையிலியாய்த்
துடிக்கின் றேனென் றூயவனே.! ௬0

'வாளு ளரச னுனைமணப்பான்
வருந்தி வகையொன் றறிகிலனாய்ப்

போனு னுறையு மிடநாடிப்
பூவா யுனது புகழ்க்கரிய
தேனுரிதழுந் திகழ் மார்பும்
திருமா முகமுந் தினைத்திருந்து
நானோர் கணமும் பிரிகிலனுய்
நயப்பா' னெனநீ நவின்றனையே? (கூக)

ஐயோ! வுனது திருமுகமு
மணிபெற் றிலங்குந் தடந்தோளும்
வெய்யோ னொளியை யெய்த்திடுமுன்
மேனி யெழிலும் மிடற்றமைப்பும்
மையோ டெனது நுதற்றிலக
மகிழ்வோ டிருந்து தீட்டிடுமுன்
கையோ டெனது கனிவாயுங்
கடையேன் பெறுநா ளெந்நாளோ? (கூஉ)

என்னோ டிருந்தே னிதயமதை
யெஃக மீர்க்குங் காந்தமென
வுன்னோ டிழுக்க வுணர்விலியா
யுனையே கதியென் றுற்றனனுற்
பின்னோ ரிடமு மறிகிலனே
பிரிவாற் கிடந்து பிதற்றுவனென்
மன்னு! வுனது மதிமுகத்தை
மகிழ்விற் போந்து காட்டுதியோ? (ருரு)

ஐயோ! நாதா! தாங்கள் எங்குப்போனுலும், என்ன துன்பப்பட்டாலும், நானும் பங்கிட்டுக்கொள்ளமாட்டேனு? அதற்குத் தகுதியற்றவளென்றே தள்ளிவிட்டீர்கள்? ஐயனே? தாங்களெங்குத்தான் போயிருப்பீர்கள்? ஐயோ? பாவியேனேன் தூங்கினேன்? இந்தப்பாழுந் தூக்க மென் குடியைக்கெடுக்கவோவந்தது? "பின்றூங்கி முன்னெழுதல்" என்று கற்புடைய மங்கையர்க்குக் கூறியமாற்

றம் இன்று பிழைத்தேனாதலின், அநுபவிக்கிறேன். என்னையனையல்லவா நான் முன்பு தூங்கவைத்திருக்க வேண்டும்? நான் தூங்கினேனாதலின் படுகிறேன். ஐயோ! மான்காள்! மயில்காள்! என்னைக்கண்டு ஏன் வெருண்டோடுகிறீர்கள்? நான் பேய்போலிருக்கிறேனா? நீங்கள் கூடி விளையாடத்தகுந்த உத்தமஜாதிப்பெண்ணாக யான் தோன்றவில்லையோ? ஐயோ! நீங்கள் பெண்களுடன் தோழமைகொள்பவர்களாகின்றீரே? பெண்ணுருக்கொண்ட எனக்கு உதவிபுரியீர்களா?

*"வாவு மிளமான்காள்! மயில்காள்! மடப்பிடிகாள்!
கூவுங் கரிய குயில்காண்மென் புள்ளினங்காள்!
ஆவியென மேவி யகலே மெனவகன்ற
காவலன்றான் போன வழியெனக்குக் காட்டீரோ?"

(கீழேவிழுந்து மறுபடியெழுந்து)

ஐயோ! இவைகளெல்லா மோடுகின்றனவே? எங்களிருவரையும் அந்நாளில் ஓரன்னபக்ஷி சேர்த்துவைத்ததே? இன்றோ இத்தனை புட்களுங் கவனியாது ஓடுகின்றனவே! எல்லாங்காலத்திற்குத்தகுந்தபடி தாமேயிருக்கும்? அவைகளையா குற்றங்கூறுவது? ஐயோ நாதா! நாதா!! எங்குச்சென்றால் உம்மைக் காணலாம்?

[அழுதுகொண்டே போகின்றாள்



* நைடதம்.

# நான்காங் களம்.

---

இடம்: காட்டில் வேறோர்பகுதி.
காலம்: காலைப்பொழுது.
பாத்திரங்கள்: வேடன்-வேடுவச்சி.

வேடன்:—[பாடுகிறான்]

(எ) இந்துஸ்தானிமெட்டு-மிசிரதாளம.

சின்னஞ் சிறிய குட்டி
சிங்காரமாய்ப் பேசுங் குட்டி
தன்னந் தனியே யிங்கு
தானும் வரக் காரண மென் (நன்றானே)
அடியே! காடி புலிகள் மறுகுங் காடு
கரி மரியுந் திருயுங்காடு
காம விடர்க எரியங்குங் காடு
கன்னியர் வழி மயங்குங் காடு
அடியே! என்ன நினைந்து வந்தாய் நீயும்
எங்குந் தேடி யிரங்குந் தாயும்
மாடு முனையே மறித்துப் பாயும்
மானே பிடுங்கும் வேட்டை நாயும்
அடியே! என்ன மென்னடி எடுத்துச் சொல்லடி
கண்ணே யென்றனைக் கட்டி நில்லடி (நன்றானே

வேடுவச்சி:—[பாடுகிறாள்]

மனதிற் கிசைந்த மன்றே
மாதுரியப் பேச்சு மன்றே
உனது கருணை யையே
உன்னி வந்தே னேன் கணவா (நன்றானே
அடடா! காலைப் பொழுதிற் காடி யேது
கரியு மெனையேன் கடுகு மோது
காம விடர்க்கு மனுகுந் தீது
காதல னெனக் கிருக்கும் போது

அடடா! உன்னை நினைந்து வரவு மாச்சு
உருகி மனமும் வெண்ணெ யாச்சு
அயித்தை மகளின் வீடு போச்சு
அங்கு தங்கவே பயமு மாச்சு
அடடா! அண்டி வந்தேனே அணுகி யுன்றனைக்
கண்டு மென்றனைக் கலப்பா யின்றெனை (நன்னனே)

வேடன் :—

அருமைச் சிறிய பிள்ளே
அம்பு மிகக் கொண்ட பிள்ளே
கருமை விழியு மென்றன்
காதல் வளர்க்கு தடி (நன்னனே)
அடியே! உன்னை நானும் பிரிக்கமாட்டேன்
உனைவிட்டுக் கணம் தரிக்க மாட்டேன்
பின்னொரு வரை வரிக்க மாட்டேன்
பேதை யுன்குணம் விரிக்க மாட்டேன்
அடியே! தினமு முனையே கூட்டி வருவேன்
திரும்ப வனமும் காட்டி வருவேன்
வேட்டை விலங்கை ஓட்டி வருவேன்
வேணபடி யூன் வாட்டித் தருவேன்
அடியே! சத்திய மடி சகியே கொள்ளடி
சித்த மென்னடி சிந்தை விள்ளடி (நன்னனே)

(திரைக்குப் பின்புறமிருந்து, 'ஐயோ! ஐயோ! யாருமில்லையா ?' என்ற சத்தம் கேட்கிறது).

வேடன் :—அடி, குட்டி! அந்தாலே யாரோரு பொம்புளே மாதிரியிருக்கு. பெருங்கூச்சப்போட்ராளே பாவம்! நாம் போய் என்னண்டு பாத்துக்கிட்டு வாரேன். நீ முன்னே வீட்டுக்குப்போய்ச் சோறாக்கிவை.

வேடுவச்சி :—நான் வீட்டிலே தனிச்சுல்லே யிருக்கணும்? நீ பொட்டென வந்திர்ரியா?

வேடன் :—இந்தாலே வந்துவிட்டேன், போங்கிறேன்.

[இருவரும் போகிறார்கள்.



# ஐந்தாங்களம்.

---

இடம் : காட்டில் வேறோர்பாகம்.
காலம் : முற்பகல்.
பாத்திரங்கள் : தமயந்தி-வேடன்.

தமயந்தி :—ஐயா! தங்களுக்கு அனந்தகோடி வந்தனம். தங்கள் உதவிக்கு நானென்ன கைம்மாறு செய்யப்போகிறேன்? இந்தமட்டும் அந்தப்பாம்பின் வாயினின்றும் தப்பிவைத்தீர்களே! இதை நானுள்ளளவும் மறவேன். ஐயா, பெரியவரே! இந்த விதர்ப்பதேசத் தலைநகராகிய குண்டினபுரம் போகும் சாலையெது?

வேடன் :—(தனக்குள்) அட! இந்தப்பொம்பிள்ளைதான் என்ன அளகாயிருக்காங்கறேன்! அதுக்குச்சரியா அவபேசறதெத்தாம்பாரேன் நமக்குந்தாம் பொஞ்சாதி யிருக்கா, அடத்தூ! (காரியுமிழ்ந்து, வெளியாய்) எங்கே போகணும்? ஆ!——குண்டினபுரமா? அங்கெயென்ன அலுவ?

தமயந்தி :—ஐயா! அங்கு எனக்குத்தெரிந்த சில உறவினரிருக்கிறார்கள். அங்குப்போகவேண்டும்.

வேடன் :—என் புள்ளே! நீ யாரு? (முகத்தையுற்றுப்பார்த்துச் சிரிக்கிறான்) ஆ!———இங்கெயெங்கேங்கிறேன் வந்தே? என்ன சமாசாரம்?

தமயந்தி :—(தனக்குள்) இஃதென்ன? இந்த மனிதன், 'நீ, நீ,' என்று பேசுகிறானே? ஆனால், காட்டிற்பிறந்து வளர்ந்தவன்றானே? மட்டுமரியாதை தெரியாதல்லவா? நல்லதிருக்கட்டும். (வெளிப்பட) நான் அந்த விதர்ப்பநாட்டுக் குடிகளுளொருத்தி. இங்கு என்புருஷருடன் வந்தேன் அவரைவிட்டுப் பிரிந்து வழிதெரியாது வந்துகொண்டி

ருந்தேன். அப்பொழுதுதான் நீங்கள் கொன்றெறிந்த பாம்புவிழுங்கப்பார்த்தது. இதுதான் என்வரலாறு. இனி யென்னூர் போகவேண்டும். அங்கு என்புருஷரும் வந்திருப்பார்.

வேடன் :—ஆ! அப்படியா? ஒம்புருஷன் வேறையா வந்திருக்கிறான்? எங்கே யிருப்பான்? ஒன்னேவிட்டும் ஒரு புருசம் பிரிஞ்சாளு?

தமயந்தி :—(தனக்குள்) இஃதென்ன? இவன் பேசும் மாதிரி எனக்குச்சந்தேகத்தை விளைக்கிறதே? (வெளியாய்) ஐயா! பெரியவரே! என் கணவர் என்னைவிட்டு மனதறிந்து பிரிந்திரார். ஏதோ தாமறியாது நேர்ந்திருக்கவேண்டும்.

வேடன் :—(தனக்குள்) அட! இவபேச்சைப்பாரா! அவவாயும்—கண்ணும்—மூக்கும்—! அட! பயமக எம்புட்டு அளகுடா? (சிரிக்கிறான்) ஆளு நீ யென்னதாஞ் செய்யணுங்கிறே?

தமயந்தி :—என்னைக் குண்டினபுரம் போகும் பாட்டையிற் சேர்க்கவேண்டும்.

வேடன் :—நீ ரொம்ப அளகாயிருக்கியே?

தமயந்தி :—(தனக்குள்) இஃதென்ன கஷ்டமாயிருக்கிறதே? (வேடனை நோக்கி) அதனாலென்ன ஐயா? என்னிலும் பலமடங்கு அழகுள்ளவர்கள் எத்தனையோபெயர்களிருக்கிறார்கள். (படபடபுடன்) நல்லது, அந்த வழியைக் காட்டுங்களேன்?

வேடன் :—என்னபுள்ளே அவசரம்? போரதுதானே? (தனக்குள்) அட! பயமக என்னுமயக்கு மயக்கிறாடா? இந்தாலே, நானுந்தாம் பொம்புளேயளைப் பாத்திருக்கிறேன்! இருந்தாலும், இப்படி எனக்கு மனசுலே தச்சதில்லேங்கிறேன், எம்பொஞ்சாதிகூடச் சொல்லுவ, அவகிட்ட

எனக்கு அம்பில்லேண்டு. அட! அப்படியான எம்மன சையுமில்லா கலச்சுப்போட்டா? இந்தா! அவபாக்கிற தெத்தாம்பாரேன்! பொல்லாச்சிறுக்கிடா!

தமயந்தி :—ஐயா! நாழிகையாகிறதே! நான் கேட்கக்கேட் கப் பேசாது நிற்கிறீர்களே? நானோ நடக்கத் தள்ளா தவள். ஊரோ மிகத்தொலையா யிருக்கிறது! இருட்டி னால், நானிருக்குமிடமோ காடு. சாயங்காலத்திற்குள் ளாகக் காட்டையாவது தாண்டவேண்டும். இனி வெய் யிலும் அதிகமாகிவிடும். ஆதலின், சீக்கிரம் வழிகாட் டுங்களேன்?

வேடன் :—வழியா? வழிதீவளிதான். எம்புள்ளே சும்மா கடந்தலையரே? எவனோ ஒரு சோதாவாம், அவம்பொஞ் சாதியெக் கொஞ்சங்கூட, அம்புங்கறதில்லாமேக் காட்டு லேவிட்டுப்போறானும். இவ அவனைத் தொடந்துகிட் டுப் போறாளாம்! கடங்கறேஞ்சும்மா! அவம் போனாப் போறான்.

தமயந்தி :—ஐயா! அவர் போனாற்போகிறார். என் நிலைமைக் கிரங்கித் தாங்கள் இவ்வளவு பேசியதற்கு மெத்தச் சந் தோஷம். எனக்கு வழியைமட்டும் காட்டிவிடுங்கள்.

வேடன் :—அட யென்னங்கறேன், 'வழி, வழி'ண்ணு கடந் தலையறே! இந்தா! நாஞ்சொல்றதைக்கேளு. அவனோ பொயித்தான். சும்மா, 'அங்கே, இங்கே,'ன்னுக்கிட்டுத் திரியாமே, என் வீட்டுக்கு வந்திரு. (தமயந்தி காதைப்பொத் திக் கொள்கிறாள்) அங்கெ யெம்பொஞ்சாதியிருக்கு. என் னங்கறேன் காதைப்பொத்திக்கிட்டே? அதை விட்டு ஒனக்கு ஊழியஞ் செய்யச்சொர்ரேன். சொகமாயிருக்க லாம் வா. நாஞ்சொல்றதைக்கேளு.

தமயந்தி :—(தனக்குள்) அட, கஷ்டமே! இதுவும் நமக்கு வே ண்டியிருந்ததா? ஒரு வேடனுக்கும் பெண்டாக வேண்

மோ? அதுதான் ஒரு குறைவு. ஐயோ. பாவிவாய் கூசாது சொல்கிறனே! நானோ உதவியற்றிருக்கிறே னே! என்ன செய்வேன்?

வேடன்:—என்னுபுள்ளே! சும்மா நிக்கிறே? சம்மதந்தா னே? அப்படியே செய். எம்பொஞ்சாதிமட்டும் ஒன் னைக் கண்டிச்சோ, ஒன்னைவிடும் இன்னு இருக்கிறே? அப்பறம், நானுந்தான் எம்பொஞ்சாதியெச்சேந்து வேனு?

தமயந்தி:—(தனக்குள்) ஐயோ! கஷ்டமே! என்ன விபரீத கா லத்திற்கு இப்படியெல்லாம் ஒன்றின்மே லொன்றுய்வ ருகிறதோ? (வேடனைநோக்கி) ஐயா! நானுங்கள் வீட்டிற்கெ தற்காக வரவேண்டும்? வந்தாலுந்தான், எத்தனைநாட்க ளிருக்கப்போகிறேன்? ஒரு கணவன் கீழிருந்து வாழும் பெண், அவனை விட்டு அரைக்கணமேனு மிருக்கலாமா? உங்களுக்குத் தெரியாதா? என் பொறியை நான் நிறை வேற்றவேண்டுமென்றே? ஆதலால், என்னை மன்னித்து வழியைக் காட்டுங்கள்.

வேடன்:—அட! என்னபுள்ளே! பேச்சுப்படிக்கிறே? நாந் தாஞ் சொல்றேனே, விட்டுவாபுள்ளேன்னு? வந்தியா னு, 'கவியம்பொஞ்சாதி, கவியம்பொஞ்சாதி,' ன்னு தாங் குவாகளே ஊரெல்லாம். இன்னம், ராசாக்களுக்குக்கூ டக் கிட்டாத மான்கறி நெதங்கொணுந்து தருவேன். கா ட்டு மிருகங்கள்ளாம் கவியம் பேரெச்சொன்னுக் கத றுமே! நானென்ன அளகிலேதான் ஒம்புருசனைப்பார்க் கக் கொறஞ்சிறுவேனு? என்ன? கசக்குதோ கவியனைக் கட்டிக்க?

தமயந்தி—நாராயணு, என்று, காதைப்பொத்திக்கொண்டு வேடனைப் பார்த்து) ஐயா! நான் கேவலம் அநாதைப்பெண். சுற்றமற் றவள் தாங்களோ வேட்டுவராஜராக விருக்கிறீர்கள். தங் களுக்கு நான் தகுதியா? மேலும், தங்களுக்கு ஒரு நாயகி

யிருக்கும்பொழுது, கல்யாணமான மறுமாதரைப்பற்றித் தாங்கள் நினைக்கலாமா? தங்களுக்குத்தெரியாதநீதியா?

வேடன்:—அட! பயமகளே! பேச்சில்லா படிக்கிறு? ஏங் குட்டி?

தமயந்தி:—(தனக்குள்) ஐயோ! குட்டியென்கிறானே, பாவி?

வேடன்:—நாயம் பேசிப்பிட்டியோ? நடுக்கிளிஞ்ச நாயம்! எங்குக்குட்டி கத்துக்கிட்டெ இந்த நீதி? எங்கிட்டவா நாயம் பொளக்கறே? சும்மா ஏதோ, 'குட்டி, குட்டின்னு, மினுக்குச்கு ரெண்டுகாசு' ன்னுல்லா, கிராக்கி பண்ரு? ஐயோ! போகுது நயமாச்சொல்லுவன்னு வீசறுளே பாக்கணும்! (சற்றுப்பொறுத்துச் சாந்தமாய்) எம்புள்ளே! இந்தப்பய நெசமாத்தான் நம்மகிட்டப் பிரியம்வச்சிருக்கானு, பொய்யான்னு பரிச்சைபாக்கிறயோ? அப்படித் தானிருக்கும். இல்லாட்டி இவ்வளவு துணிச்சலாக கவியங்கிட்டப் பேசிறிவியா? பின்னாலே, சலுகெகொண்டாடலாமிண்டில்லா பேசுரு? பலேயப்பா! சவாசு! நல்லகுட்டிங்கிறேன்! பயமகளுக்கு, அவளுக்குத் தகுந்தாப்பலே, அறிவுமில்ல அமஞ்சிருக்கிது? (கிட்டச்சென்று) எங்குட்டி? அப்படித்தானே? சும்மாசொல்லுகுட்டி? (தமயந்தி கண்ணை மூடிக்கொண்டு விலகுகிறாள்) என்ன கண்ணை மூடிக்கிட்டியே? மூடிக்கிட்டா என்ன? நானுமா பொட்டையாயிருவேன்? என்றுகுட்டி பின்னுக்கு வாங்குறே?

தமயந்தி:—ஐயா! தங்களுக்கு அநேகவந்தனம் செய்கிறேன். இனி இந்த வார்த்தைகள் வேண்டாம். ஆனால், தாங்கள் சொல்லுகிற இத்தனையும், மனதாரச் சொல்லுவதில்லையென்று நானறிவேன். இல்லாவிடில், பாம்பின்வாயிலிருந்து கருணையுடன் காப்பாற்றி, என்னைவிட்டுப் பிரிந்த என்பர்த்தாவைக்கூட, என் நிலைமைக்கிரங்கித் தாஷித்த

மகாத்மாவாகிய தங்களுக்கோ இவ்வெண்ணம் உண்மையில் வரப்போகிறது? ஒருபொழுதும் வரமாட்டாது. ஆனால், 'இவளோ பால்யமாகவும், அழகுள்ளவளாகவுமிருக்கிறாள். காட்டிலோ தனித்துமிருக்கிறாள். கணவனைவிட்டுப் பிரிந்தேனென்கிறாள். இத்தனையும் உண்மையாகவேதா மிருக்குமோ? அல்லது, சோரத்தனமேதேனு மிருக்குமோ? நாம், பாம்பின்வாயினின்றும் தப்பவைத்தது சற்பாத்திரந்தானா'? என்று அறியவேண்டியே செய்திருக்கிறீர்கள். எப்படியாயினும், அவ்வார்த்தைகளை இனிக்கேட்கச்சகியேன். ஆதலின், தயவுசெய்து இனிச்சொல்லாதீர்கள்.

வேடன் :—அட! பயமகங்குட்டி! என்ன சமுத்துக்காரம் பேசுறாடா? எ. குட்டி! என்னா இருந்தாலும், நானோ ஆம்புள்ளே, நீயோ பொம்புள்ளே! நீயா யென்னேயேக்கிறது? (ஓடித் தமயந்தியின் கூந்தலைப்பிடிக்கிறான்).

தமயந்தி :—ஐயகோ! கேள்விமுறையில்லையோ? இந்தக்கானகத்தி லென்னை யிச்சண்டாளன் பிடித்துத் துன்பப்படுத்துகிறானே? என்னசெய்வேன்? மனிதசகாய மில்லையே? ஓ, தெய்வமே! உனக்குக் கண்ணில்லையோ இக்கொடுஞ்செயலைக்காண? காதில்லையோ என் தீனவாசகத்தைக்கேட்க? அடா! பாவி! என்னைத்தொந்தரவு செய்யாதையடா! உனக்கு நமஸ்காரஞ் செய்கிறேனடா!

வேடன் :—ஒன் நயசக்காரத்தெக் கொண்டுக்கிட்டுப்போய் அந்த ஒடப்புலேபோடு. நீ மாத்திரம் எம்பொஞ்சாதியா வந்தா ஒனக்கு நெதம்பத்துக்கும்பிடு நாம்போடுவேனே?

தமயந்தி :—அடா, சண்டாளா! நான் பத்தினிப்பெண்ணடா! நான் வயிறெரிந்தால் அது வீணே போகாதடா! உன் குலத்தைச் சுடுமடா! ஐயோ! ஏனடா வீணே கெடுகிறாய்? அன்னியப் பெண்களை யிச்சித்தவர்க ளெல்லோ

ரும் அலங்கோல மடைந்திருக்கிறார்களடா! நீயுமவர்க ளுடனே சேரவேண்டும்?

வேடன்:—ச்சை! வந்தது வரட்டும். ஆ! இம்பிட்டுப்புள்ளே! ஒனக்கு இம்பிட்டுத் துணிச்சலா? புளு நசுக்கினாலும் போச்சு! ஆ!! ஒண்ணை நாமாத்தா மின்னைக்கி எம்மனசுக்குச் சரியாயில்லாமெ விடுவேனா? பார் சொல்ரேன், (மயிரைப்பிடித்துக் குலுக்குகிறான்)

தமயந்தி—:அடா, பாதகா! வேண்டாமடா!

வேடன்:—அடவாம்! இனி 'டா, டா' ண்டு பேசினையோ, இந்தாலே தெரியுமா? (வலக்கையை ஓங்குகிறான்)

தமயந்தி:—தங்களிடத்துவந்து அகப்பட்டுக்கொண்ட ஒரு கேவலம் சாரிகையாவேனே நான். எனக்கு வேறுதுணையில்லாதபொழுது என்னைத் துன்பப்படுத்தல் உம்முடைய ஆண்மைக் கழகாகுமா?

வேடன்:—நாந்தான் நீதிபடிக்காதேண்டேனே? நாரக்களுதே! (தலையை இன்னுமொருமுறை விசைத்துக் குலுக்குகிறான்.)

தமயந்தி:—ஐயோ! நானென்ன செய்வேன்? இந்தச்சண்டாளன் என்னை வருத்துகிறானே! என்னாற் சகிக்கக் கூடவில்லையே! நானென்ன செய்வேன்? என்னைக் காப்பாரில்லையோ? (அதிகமாய்க் குலுக்குகிறான், 'பேசாதே என்கிறான்) ஐயோ! வலிக்கிறதே! அடா! பாவி! நீ ஆணோடு பெண்ணோடு பிறக்கவில்லையாடா? உன் தாய் பெண்ணல்லளோ? உன் தாரம் பெண்ணல்லளோ? அவர்களை உன்போன்ற ஒரு மூர்க்கன் பலவந்தஞ் செய்தால் நீ காணச்சகிப்பாயோ? அப்படி யென்னையும் நினைக்கலாகாதோ? அடா! என் நிலைமையில்மட்டும் நானிருந்திருப்பேனானால், என்னை நீ யேறட்டுப் பார்க்கமாட்டுவையா? என் நாதன், என் கண்மணி, என் ராஜ ரிவ்விடத்திலிருந்தா லுன்னை எமலோகஞ் சேர்த்திருப்பாரடா! அடா,

சண்டாளா! என் போதாத வேளையால் நானிப்படி வந்த போதிலும், என் பிராணநாதன், ஆடவர்க்கரசன், அத்தகைய ஆண்மகனை யனுபவித்த என்னைப்பார்த்து வாய் கூசாது பேசுகிறாயேடா? உன் வாயழுக வில்லையே? உன் தலை வெடிக்கவில்லையே? கற்புடைய மங்கையரைக் கதறச்செய்பவர் தலை வெடித்துவிடு மென்பார்களே? இக்காலத்தி லப்படியில்லையோ? அல்லது, நான்றான் உத்தமியல்லேனோ? அடா, பாதகா! என்னை விட்டுவிடடா! வீணே கெட்டுப்போகாதையடா! ஏனடா, சுடர் விட்டெரிக்கும் சூரியனைப் பருந்தோ நெருங்குவது? இறக்கை தீந்தெரிந்தன்றோ நீறாகும்? ஆதலால், வேண்டாம், சொல்வதைக்கேள்.

வேடன்:—இன்னி யென்னமும் பேசினையோ, செவிட்டுலே விடுவேன். என்ன ரொம்ப ரொம்பப் பேசுறே? நானுந்தான் எம்புட்டு நேரந்தாம் பேசுவன்னு பார்க்கிறேன். சும்மா பேசுறியா? யாரை யென்னபண்ணலா மிங்கிறே? ஆ? ஆத்தாளுன்னே, போகிதுகளுந்தென்னிருந்தேன். எம் பெஞ்சாதியையுமில்லா இளுத்துப் பேசிப்பிட்டே? நாங்கெட்டுப்போவேனும்! நீ வாந்த வாள்வுக்கு? மகா உத்தமீல்லநீ? உத்தமி யிப்படித்தானே யிருப்ப? ஆம்புளளென்னுகூடப் பாக்காமெ த்தட்டுவாணியாட்டமா, 'டா,டா'ண்டு பேசிக்கிட்டு?

தமயந்தி:—ஐயோ! ஜகதீசா! அநாதரக்ஷகா! என்ன செய்வேன்? என்னைத் தட்டுவாணி யென்கிறானே? இதுதானோ, என் பதிவிரதாதர்மம்? ஐயோ! மனிதர்களுக்குக் கேடுவருவதுண்டு. இப்படியும் வருமா? என் கண்ணாளரைப் பிரிந்ததுமன்றி, இதுவும்வேண்டுமோ? ஐயோ! என்னுயிர் போகவில்லையே? ஜகதீசா!

"இல்லையோ தெய்வ மிருந்தா லிரங்காதே,
கல்லையோ நான்தொழுதேன்" கைலாயத் தெம்மானே?

ஏ! பன்னகபூஷணு! என்னை அந்தப்பாம்பிற்கே யிரை யாக்கி யிருக்கக்கூடாதோ? அதனுல் என் பிராணன்மட் டுந்தானே போயிருக்கும்? இப்பொழுது என்மானமும் போய்விடுமே? ஐயோ? என்னுயிர்க்குரிசில், அன்புடன் வாசனுதித்தைலங்களைத் தம்மிருதுவாகிய கரங்களினுற் றடவித் திருத்திக் கோலஞ்செய்த கூந்தலை, இக்கிராதக னுே தொடுவது? அந்தோ! தெய்வமில்லையோ? ஏ உமாபதி! நான் வீமராஜனுக்குப் பெண்ணுய்ப்பிறந்து, நளராஜனை மாலையிட்டு (வேடன் நெருங்குகிறுன்) அவருக்கு ஒரெள்ளளவும் துரோகம் நினையாது, இல்லறம் நடத்தி வந்த தண்மையாகில், எப்படியாவது என் மானத்தைக் காக்கவேண்டும். இல்லாவிடில், என்னுயிரையாயினும் கிரகித்துக் கொள்ளவேண்டும்!

வேடன்:—ச்சை; கனுதே! எங்கிட்டவா. பெரியவுங்க பேரையெல்லாஞ் சொல்லிப் பயமுறுத்திரியோ?

(விசையாய்ப் பிடித்திழுக்கிறுன்.)

தமயந்தி:—ஐயையோ! கேள்வியில்லையோ? ஜகதீசா! சாகிறேன்! போகிறேன்!! என் நாதா! உங்களைக்காணுது உயிர் போக்குகிறேன்.

நித்தியாநந்தர் தோன்றுகிறுர்.

அதுகண்டு வேடன் பிரமித்துக் கூந்தலை விட்டுவிடுகிறுன்.

(தமயந்தி ஓடி அவர் காலில்விழுந்து) மகப்பிரபோ! தங்களடைக்கலம். தாங்கள்தா மென்னைக் காப்பாற்றவேண்டும் வேறுகதியில்லை.

நித்தியாநந்தர்:—(தூக்கியெடுத்து) பயப்படாதை. தேறியிரு. (வேடனைப்பார்த்து) யாரடா! பாதகன்? என்னகாரியமடா செய்யத்துணிந்தாய்? கேவலம், ஒரு ஸ்திரீஜாதியிவள். நீயோ வெறுந்தடியன். அவளை, மானைத்துரத்தும் வ்யாக்ரம்போற் கொஞ்சமேனுங் கருணையில்லாமற் றுரத்து

கிருயா? அவள் யார் தெரியுமா? நாமவேற்காளை நளராஜன் பத்தினியாகும். (தமயந்தி பிரமித்து நிற்கிருள்) மகா பதிவிரதை. தேவதா ஸ்திரீகளும் இவளுடைய பதிவிரத்யத்தைக்கண்டு திகைக்கிருள். ஏதோ போதாத வேளையா லிக்கதியாயிருக்கிருள். அடே! நளராஜனுடைய பராக்கிரமமென்ன? அவனுடைய சிறந்த வாழ்வென்ன? அவனும் அவன் மனைவியுமே இக்கதியானல், மனிதவாழ்க்கை யென்னடா சாசுவதம்? அதிமேலும் நீ கேவலம் கிராதகன். நீயா இவளை யிச்சிப்பது? அடா? இவள் காட்சி உனக்குக் கிடைக்கத்தக்கதா? நெருப்படா இவள்! நல்ல கருணைக்கடலாதலின், நீ பிழைத்தாய். இல்லாவிட்டால், உன்னை அவளுடைய பதிவிரதாக்கினியால் தகித்திருப்பாளடா! நல்லது, தப்பிப்பிழை. (வேடன் மறுமொழி சொல்லமாட்டாது பிரமித்து ஒன்றுந்தோன்றுமல் தவசியின் பாதத்தில் விழுந்து விடுகிருன்).

**நித்தியாநந்தர்:**—ஏ, கலியா! எழுந்திரு. ('கலியா. என்றதும், தன் பேரைத் தெரிந்துகொண்டதனல், அதிக பயபக்தியோடும் எழுந்து, தவசியை வணங்கிக் கைகூட்பி)

**வேடன்:**—ஐயா! சாமியாரே! நாம் புத்தியில்லாமேச்செஞ்சதை மன்னிக்கணும். சாமியளே! நாமென்னமோ கெட்டபுத்தியாலெ அந்தம்மாசொன்னதை எல்லாங் கேளாமெ (தமயந்தி ஆச்சரியமும் சந்தோஷமும் அடைந்து நிற்கிருள்) வீணே தொந்தரை செய்தாலும், தங்களைக் கண்டதும் புத்திவந்திரிச்சி சாமிகளே! நீங்கதாங்காப்பாத்தணும் (மறுபடி காலில் வந்து விழுகிருன்)

**நித்தியாநந்தர்.**—கலியா! உன் அபராதத்தை க்ஷமித்தேன் எழுந்திருந்து அந்த உத்தமியை மூன்றுதரம் வலம் வந்து அவள் காலில் விழுந்து, கவுளிற் புடைத்துக்கொண்டு அவளிடத்து மன்னிப்புக் கேட்டுக்கொள்.

(அவன் அப்படியேசெய்கிருன்)

தமயந்தி :—அப்பா, கலியா! எழுந்திரு. உனக்கு இவ்விதப் புத்தி வருமென்று நானெண்ணவேயில்லை! இந்தப் பெரியவர் மகிமைதானிது. உன்னை நான் மன்னிக்க என்ன தடையிருக்கிறது? என்போதாதவேளையால் நீயப்படிச் செய்தாயேதவிர வேறில்லை. எப்படியோ உன்னாலே எனக்கும் இந்தப்பெரியவர் தரிசனங் கிடைத்தது.

நித்தியாநந்தர் :—அடா, கலியா! இனிமேலாவது புத்தியோ, டிரு. உன் பத்தினி உன்னிடத்தில் மெத்தவாஞ்சையுள்ளவள். அவளுக்கு மனஸ்தாபமில்லாமல் அவளோடு ஒத்து வாழ். அவள் கேவலம் வேட்டுவஜாதிப் பெண்ணாயினும் அவளும் கற்புடையவளே. ஆதலால், அவளைத்துன்பப் படுத்தாது வாழக்கடவாய். இனி, அந்நிய மாதர்களை விஷமெனமதி. அப்படி உறவுகொண்டாட வேண்டினால் அவர்கள் வயதிற்குத் தகுந்தபடி உன் மாதாக்களாகவும், ஸகோதரிகளாகவும் நினை.

கலியன் :—புத்தி, [அவரை வணங்கிச் செல்லுகிறான்.]

நித்தியாநந்தர் :—(தமயந்தியைநோக்கி) பார்த்தாயா? கெட்டவனாயிருந்தவன் உன்னைக் கிட்டியதால் நல்லவனானான்.

தமயந்தி :—ஸ்வாமி! அப்படிச் சொல்லக்கூடாது. தங்கள் தரிசனத்தாற்றான். தபோதனரே! என்பிராணனையும் மானத்தையும் இழக்குந்தருணத்தி லென்னைக் காத்தருளிய கருணையங்கடலே! திருத்தவ மேற்கொண்டதேவா! மாயையைமாய்த்த மாதவா! உமாபதிய்ய உருக் கொண்டன்ன உத்தமனே! என்னைக் காப்பாற்றவேண்டும். நான், மக்களைப் பிரிந்த மாபாவி. கணவனைத் தணந்த காதகி. எனக்கனுக்கிரகிக்கவேண்டும்.

நித்தியாநந்தர் :—குழந்தாய், தமயந்தி! பயப்படாதை. உன் விஷயம் முழுவது மறிவேன். உங்கள் பழவினையாலும் தெய்வ சங்கற்பத்தாலும் நேர்ந்தது. என்றும் இப்படியே போகாது. நீயுன் கணவனைக்காண்பாய்.

தமயந்தி :—(கண்ணீர்விட்டு) காண்பேனுப் பிரபோ? நிச்சயந் தானு?

நித்தியாநந்தர் :—நிச்சயங்காண்பாய். இனியுன்வாழ்க்கையின் வழிகரடுமுரடாயிராது. இப்பொழுதே நீ இச்சாலைவழி யாகச் சென்றால் அங்கு ஒரூரிருக்கும். அங்குக் கொஞ்ச காலம் தங்கி, உன் தாய்தந்தையரைக் காண்பாய். உன் ஞேடு சென்று கொஞ்சப்பிரயத்தினஞ்செய்ய, உன் கணவ னைப்பெறுவை. ஆதலின், இவ்வழிச்செல்வாய். (வழியைக் காட்டுகிறார்) நான் தவத்திற்குப் போகிறேன்.

தமயந்தி :—மகாப்பிரபோ! தங்களுக் கநந்தகோடி நமஸ்கா ரம் (நமஸ்கரிக்கிறாள்) இப்படி என் ஆபத்தினின்றுங் காப் பாற்றி, என்காதலரைக் காண்பேன் என்கிற சந்தோஷ வார்த்தையையுஞ் சொன்ன தங்களுக்கு நானென்ன செ ய்யப்போகிறேன்? இஃதன்றோ கருணைமூர்த்திகளின் பெருமை? இஃதன்றோ ஈசன் திருவருள்? ஆபத்துக் காலத்திற் கைம்மாறு எதிர்பாராது கருணை புரிதலன்றோ பெரியவர்களின் தன்மை? இத்தகைய பெரியவர்களின் முகமாயன்றோ, ஈசன் தன்மகிமையை வெளியிடுகி ரூர்? பிரபோ! நான் போய்வருகிறேன். நமஸ்கரிக்கி றேன். (நமஸ்கரிக்கிறாள்).

நித்தியாநந்தர் :—தீர்க்கசுமங்கலீபவா! குழந்தாய்! போய்வா. நானும் செல்லுகிறேன்.

[போகிறார்கள்.



# அங்கம்—௪.

## முதற்களம்.

இடம்: அயோத்தியில் ரிதுபன்னனரண்மனையிலோரறை.

காலம்: இரவு

பாத்திரம்: வாகுகன்.

**வாகுகன்:**—(தனக்குள்) இன்றைத்தினம் நாம் செய்யவேண்டிய காரியங்களனைத்துமாயின. நாளைத்தினம் சமையலுக்கு வேண்டிய வேற்பாடுகளும் செய்தாகிவிட்டன. இனி நாம் படுத்துறங்கலாம். ஐயோ! என்கண்மணி என்னசெய்கின்றாளோ? கான்விலங்குகளுக் கிரையாயினளோ? சாமவிடர்சைப்பட்டுக் கதறுகின்றனளோ? வழிதடுமாறி முட்கீறிக் கற்றைக்க மருளுகின்றனளோ? யானறியேன். தன் தாய்தந்தையர்கள், பிள்ளைகுட்டிகள் முதலியவர்களையும், என்பொருட்டு நீத்துக் கானகத்திறங்கிய என்காதலி, என்னைக்காணாது என்னசெய்தனளோ? அவள் மனது என்னபாடுபட்டதோ? பாடுசகியாது மூர்ச்சித்து உயிர் துறந்தனளோ? ஐயோ! இஃதென்னகாலம்? யார்செய்த கொடுமையோ? என்னையே கதியென்று கொண்ட என்காதலியைக் காக்குந்திறமையற்றேனே? பயங்கொள்ளியாய் அவளை நித்திரையில நீத்துவந்தேனே? அவளிருந்த இடம் காடென்றும், காலம் இருள் நிறைந்த இரவென்றுங்கூடப் பாராமல் விட்டுவந்தேனே! இது கேட்டால், பேடியரும் நகைப்பாரன்றோ? நீதிமன்னனெனப் பலராலுங் கொண்டாடப்பட்டவென்னீதி, என்காதலிபாற்கரந்ததோ? 'நீயோ

நீதிமான்.' என்று என்மனமே என்னை யிகழ்கிறதே!
என்னசெய்வேன்? ஏ! காந்தாமணி! எங்குற்றனையோ?
என் கருதினையோ? என்செய்தனையோ?
பெண்டாள மாட்டாப் பேதையென் றனையோ?
நயவஞ்சகஞ் செய்யு நாயென் றனையோ?
மானங்கெட்ட மடைய னிவனென் றனையோ?
சொன்னசொற் காவாச் சோரனென் றனையோ? (கரு

என்னருமைக்கண்மணி! நானுன்னிடத்து வைத்துள்ள அன்பிற்கும், ஆவலிற்கும், என் நிலைமையில்மட்டு மிருந்திருந்தால், இப்படியோ நடந்திருப்பேன்? அதையும் நீ அனுபவியாதவளன்றே? இப்பொழுது, நான் பரதேசி போற் பதியிழந்து, செயலற்றவனாய்ச் சிந்தைநொந்து பேடியைப்போல் உன்னைப்பேணுதலுங்கூடா நிலைமையிலிருக்கிறே னாதலின்; உன்னை யுன் தாய்வீடு போகச் சொன்னேன். நீயோ, 'தங்கள் நாயகரைப்பார்க்கிலும் தெய்வமாவது, அவருக்குப் பணிவிடை செய்வதைப்பார்க்கிலும் தவமாவது, இவ்வுலகிற்கிடையாது' என்று மதிக்கும் கற்புடைய மங்கையர்க்கு அரசியாதலின், உன்கணவனேய கதியென்று வந்துவிட்டாய். உனது முகவிலாசத்தால். தன்றுயரனைத்தையும் உன்கணவன் மறந்தனனேனும் நீ படுந்துன்பத்தைக் காணச் சகியாது உன் க்ஷேமத்தை நினைந்தே உன்னைவிட்டுப் பிரிந்தான். ஆகையால், என் மாசறுபொன்னே! என் கருத்தைக் கொண்டு கருமத்தைக் கடைக்கணிப்பாயோ? எனதின்னமுதே! இனி உன்னையென்று பருகி யுயிர் தமைப்பேனோ? என்காதற்கிள்ளையே! என்று உனது இனியகிளவியைக்கேட்டானந்திப்பேனோ? நமது நாட்டிலிருக்கும் பொழுது, இந்த நாழிகையில்நமது சயனக்கிருகத்தில், என்னருகே யிருந்து, உன் இன்சொல்லமுதத்தை என் செவிவாய்ப் புகட்டுவையே? (உருத்தோன்ற) ஆ! என்ன

ரசியே! வந்து விட்டனையோ? (எழுந்து) எவ்வா றிங்குவந்தாய்? (கட்டப்போய் வெட்கித்திரும்பி) ஐயோ! என் மனத்தினது செய்கை தானோ? ஒரு பொருளி னுருவத்தை, ஆழ்ந்து சற்று நேரம் யோசித்துக் கொண்டிருந்தால், அப்பொருளின் உருத்தோன்றுமென்பார்களே? அஃதிதுதானோ? (படுக்கின்றான்) ஆ! அதோ நின்கிறாளே? உருவெளியென்றேனே? என் கண்மணி! (எழுந்து) ஏ! தமயந்தி! ஏன் தனியே நிற்க வேண்டும்? வரக் கூடாதா என்னருகில்? ஓ, ஓ! என் தேகங் கறுத்திருப்பதாலேயப் படுகின்றனையோ! சகி! இது கொஞ்ச நாளில் மாறிவிடும். நான் பாதகன், உன்னைப் பிரிந்து வந்தேனே அப்பொழுது வழியில், ஒரு மூங்கிற் புதர் நெருப்புப்பட்டெரிந்தது. அதனிடையி லகப்பட்டு ஒரு நாகம் தவிக்கக் கண்டு அதைக் காப்பாற்றினேன். அதற்குப் பதிலாக, நம் நிகழ் காலத்திற்கிடையூறா யிருந்த, என் தேகக் காந்தியை மாற்றி இக்கோலத்தைக் கொடுத்தது. நங்காலம் மாறினால் உடனே இக்கோலமும் மாறிவிடும். ஆதலின், கண்மணி! வா என்னருகில். (நெருங்கிக் கையைவீசிக் கைக்குப் புலப்படாமை கண்டு திரும்பி) ஐயோ! என் மனப்பேய் தானோ? அம்மம்மா! (திடுக்கிட்டு) யாரேனும் நான் பிதற்றுவதைப் பக்கத்தி லிருந்தும் கேட்டிருப்பார்களோ? அப்படிக் கேட்க நேரில், என் மர்மம் வெளியாய் விடுமென்றோ? (நாற்புறமும் பார்த்து) நல்லவேளை, ஒருவருமிருப்பதாகக காணோம். என்ன நினைத்துப் பிதற்றினாற்றான் பயனென்ன? இனியாவது நங் காதலியைக் காணவாவது? இவ்வளவு தான் நம் பாக்கியம். இனியிப்படியே யிருந்து, இறக்க வேண்டியதுதான். நடந்தபடி நடக்கிறது. நமக்குக் காலையிலோ சீக்கிரம் எழுந்திருக்க வேண்டும். ஆதலால், இனி நானுறங்கப்போகிறேன்.

[பெருமூச்செறிந்துகொண்டு போகிறான்.]

## இரண்டாங் களம்:

---

இடம்: குண்டினபுரத்தி லரண்மனைப் பூசாக்கிருகம்.

காலம்: அந்திமாலை.

பாத்திரம்: தமயந்தி.

**தமயந்தி:**— (மணிவிளக்கேற்றி விளக்கைவணங்கிப் பிரார்த்திக்கிறாள்) ஏ! அம்பிகே! நிறை மங்கலியம் தரவேண்டும், பரதேவதா! என்றுகாணும்படி செய்வையோ என்னையன் திருவடியை? என்று நான் உற்சாகமாய் அலங்கரித்துக் கொண்டு உன்னை வணங்கப் போகிறேனோ? என் தந்தையார் நான் வந்தது முதல் எனது கோலத்தைக்காணச் சகியாது, நாலுபக்கங்களிலும் தேடி வரும்படி வேவுகாரர்களை அனுப்பியும், ஒருவரும் தலைவரைக் கண்டு வந்திலர். (சுடர் பிரகாசமாகக் கண்டு) இன்றையதினமென்ன ஜகதம்பிகை மகிழ்ந்து விளையாடுகிறாள்? (விளக்கினின்றும் புஷ்பமுதிர்கிறது) லோக நாயகி! என்ன உத்தரவு செய்கிறாய்? ஒரு நாளுமில்லாமல் இன்று புஷ்பமளிக்கிறாயே? என்னகாரணம்? ஏதோ, எல்லா வற்றிற்கும் நீதான் துணை.

சேடி வருகின்றாள்.

**சேடி:**—அம்மா! ஏதோ தங்கள் மாவிந்த நகரத்தில் தங்க ளரண்மனை யிலிருந்த பண்டிதரா மொருவர். தங்களைக்காண விரும்புகிறாராம். அதைக் குறித்துத் தங்க ளபிப்பிராயத்தை யறிந்து வரும்படி சொன்னார் நமது மந்திரி.

**தமயந்தி:**—(ஆனந்தக் கண்ணீரோடு) ஆ! அப்படியா? உடனே வரவிடு. நானிங்கேயே யிருக்கிறேன். [சேடி போகின்றாள்] லோகமாதா! இதுதானோ நீ புஷ்ப மளித்தது? இவரைக் கண்டா லெனக்குக் கொஞ்சம் ஆறுதலுக் கிடமாக விருக்கும். இவர் ஒரு வேளை என் பர்த்தாவை எங்கேனும்கண்

டிருந்தாலு மிருப்பார். ஐயோ! அப்படி நல்ல காலமும் நமக்கு வருமோ? அம்பிகை? உன் கருணை யென்னவோ? (மறுபடியும் புஷ்பமுதிர்கிறது) ஏதோ விசேஷ மிருக்கிறது! இப்படி நினைத்த போதெல்லாம் புஷ்ப முதிர்கிறதே! என் கண்ணாளரைக் காணு நாள் நெருங்கிற்றோ?

பண்டிதர் நாகேச பட்டனார் வருகின்றார்.

**தமயந்தி:**—(எதிர்கொண்டு) மகாநுபாவா! நமஸ்காரஞ் செய்கிறேன். (நமஸ்கரிக்கிறாள்).

**பண்டிதர்:**—தீர்க்க சுமங்கலீபவா!

**தமயந்தி:**—ஸ்வாமி! இந்த ஆசனத்திலிருங்கள். தங்கள் தோழராகிய என் காதல ரெங்கிருக்கிறார்? அதைப் பற்றி ஏதேனும் தெரியுமா, பிரபோ? (கண்ணீர் விடுகிறாள்)

**பண்டிதர்:**—அம்மா! உட்காரப்படி. பதறாதே. (உட்காருகிறாள்) கண்ணைத் துடைத்துக்கொள். பகவான் அநுக்கிரகிப்பார். அ, ஆ! என்ன கஷ்டகால மிது? நானும், ஐம்பது வருஷ காலமாய், உங்கள் மாமனார் காலம் முதல் உங்கள ரண்மனையி லிருந்து வருகிறேன். அந்த வம்சத்தி லொருவராவது, நீதியல்லாததைச் செய்தாரென்பது கிடையாது. அதிலும், உன் பர்த்தா நளராஜர்——எனக்குச்சிறு வயதுமுத லவரைத் தெரியும்—அவரிடத்தி லொருகெடுதலுங் கிடையாது. இந்தச்சூதாட்ட மொன்றுதான் அவரிடத்திலிருந்தது. அதுவே கேடாக முடிந்ததே! என்ன அநியாயம்? ஒவ்வொருவர் எத்தனையோ துர்க்கிருத்தியஞ்செய்தும் வாழ்கிறார்களே?

**தமயந்தி:**—மகாநுபாவா! உலகமே யப்படித்தானே யிருக்கிறது.

**பண்டிதர்:**—என்னவிருந்தாலும் இப்படி வரக்கூடாது. ஆனாலுமநியாயம்! என்ன? நாட்டையிழந்து, பெண்டுபிள்ளை

களையும் பிரிந்து, இருக்கு மிடமும் தெரியக்கூடாமற் போவதென்றூற் சகிக்கக்கூடாத துயரந்தான். என்ன! நீ யிவ்விடம் வந்திருக்கிறாயென்று ஜனங்கள் மூலமாகத் தெரிந்துகொண்டு உன்னைப்பார்க்கவந்தேன். உன்னைப் பார்த்தது மெனக்கு அடையாளமே தெரியவில்லையே! நீ துக்காக்கிராந்தையா யிருப்பாயென்று நானறிவேன். நாட்டு ஜனங்களும் வெகுவாய்ச்சொன்னார்கள். ஆயினும், உன்னிலைமை யிப்படியிருக்கு மென்று நான் நம்பவில்லை! உன்னைப் பார்த்தபிறகும் தமயந்தியைக் காணேமேயென்று திகைத்து நின்றேன். பிறகு, உன்குரலாற் கண்டேன். நல்லது, காட்டில் ராஜ னுன்னைவிட்டுப் பிரிந்த விருத்தாந்த மனைத்துந் தெரிந்துகொண்டேன் ஜனங்கள் மூலமாக. பிறகு, நீ எங்குச்சென்றிருந்தாய்? அது விஷயம் அவர்கள் சொன்னது விளங்கவில்லை.

தமயந்தி:—ஸ்வாமி! நான் காட்டைவிட்டு நீங்கி, என் சிற்றன்னை நகரஞ்சென்றேன். அஃது என் சிற்றன்னை ஊரென்றெனக்குத் தெரியாது. அவளையும் அதற்குமுன் நான் பார்த்ததில்லை. அவளரண்மனையில் சைரந்திரியா யிருந்தேன்.

பண்டிதர்:—அடாடாடாடாடா!

தமயந்தி:—பிறகு, என் தந்தையார் என்னைத்தேடவேண்டி யனுப்பிய தூதன் என்னைக்கண்டு கூட்டிவந்தான்.

பண்டிதர்:—அப்படியா? நல்லது! நளராஜர் உன்னுடன் குறிப்பாகவாவது, எங்கேனும் போவதாகச் சொன்னாரோ?

தமயந்தி:—குறிப்பிட்டு என்னண்டை ஒன்றும் சொல்லவில்லையே! சொல்லியிருந்தால் இவ்வளவு ஸ்ரமமென்ன? என் தந்தையார் எல்லாத்தேசங்களிலும் தேடும்படி ஒற்றர்களை அனுப்பினதற்கு அகப்படாமலா போய் விடுவார்? "எங்கேயாவதுபோய் ஈனத்தொழில் செய்தாவது காலத்

தைத் தொலைக்கவேண்டும். அப்பொழுது நீயுமிருந்து கஷ்டப்படக்கூடாது" என்று மட்டும் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தார்.

பண்டிதர்:—ஆனால், எல்லாத் தேசங்களுக்கும் தூதர்கள் போயிருந்தார்களா? அப்படியும் அகப்பட வில்லையா?

தமயந்தி:—இல்லையே, பிரபோ! தங்கள் மூலமாக ஏதேனும் தெரிந்து கொள்ளலாமென்றல்லவோ எண்ணினேன்?

பண்டிதர்:—எனக்கெங்கும் புலப்படவில்லையே? ஆனால்—

தமயந்தி:—'ஆனால்' என்னஸ்வாமி? சொல்லுங்களேன்? எங்கேனு மிருப்பதாகக் கேள்விப்பட்டீர்களோ?

பண்டிதர்:—இல்லை. நான்தானிப்படித் தேச சஞ்சாரஞ் செய்து வரும்பொழுது, ரிதுபன்னன் நாடாகிய அயோத்தியி லொருநாட்டங்கி, அரசன் சமுக மடைந்து அவ்வரண்மனைச் சமையற் கட்டிலிலேயே சாப்பிட்டேன். மேலே சொல்வதற்கு வாய்கூசுகிறதே?

தமயந்தி:—பாதகமில்லை, சொல்லுங்கள். சாப்பிட்டீர்கள் அப்புறம்?

பண்டிதர்:—அங்கொருவர் பரிமாற வந்தார். அவரைக்கண்ட உடனே நம்மரசர் ஞாபகம் வந்து விட்டது.

தமயந்தி:—(ஆவலுடன்) ஏன்? எதனாலப்படி?

பண்டிதர்:—ஏதோ, அவருடைய முகத்திலுள்ள குறுகுறுப்பும், கண்களின் கருணை நோக்கும், கம்பீரமும், தேகத்தினமைப்பும், உயரமும் எல்லாம் அவருடையனபோலவேயிருந்தன. அவரும், என்னைப் பார்த்தவுடன் கீழ்நோக்காயினார். ஆனால், அவர் மேனி முழுமையும் இருள்போன்ற கருமை நிறைந்திருந்தது. அந்த வர்ணமும், அவர் அனுசரிக்கும் தொழிலுந்தாம் எனக்குச் சந்தேகத்தை யுண்டு

பண்ணின. ஆனால், இதுமட்டும் நிச்சயம். அந்தச்சமை யற்காரர் நளராஜ ரல்லாவிட்டாலும், வேறு யாராவது அவரைப்போன்ற அரசர் அத்தொழிலுக்கு வந்திருக்க வேண்டுமே தவிர, அவர் சாமானியச் சமையற்காரரல்லர்.

**தமயந்தி** :—அவர் பேச்சினின்றுங் கண்டிருக்கலாமே?

**பண்டிதர்** :—அதுதானே விசேஷம்! பேசவேண்டிய பல சந்தர்ப்பங்கள் நேரினும் மௌனஞ் சாதித்து விட்டாரே! அடுத்த தடவை பரிமாற வேறொரு பரிசாரகன் வந்து விட்டான். அதனால், என் சந்தேகம் அதிகமாயிற்று.

**தமயந்தி** :—அங்குள்ளாரிடத்து விசாரித்திருக்கலாமே?

**பண்டிதர்** :—விசாரித்தேன். அவர்கள், ஏதோ அவர் வந்து சுமார் ஆறுமாத காலமாயிற் றென்றும், சமையற் செய்வதில் வெகுசமர்த்தரென்றும், அரசன் அவரிடத்து அதிக அன்பு பாராட்டி வருகிறானென்றும் சொன்னார்கள்.

**தமயந்தி** :—ஆறுமாதமா? பிராம்மணோத்தமா! எனக்குஞ்சந்தேகம் பலமாயுண்டாகிறது. நீங்கள் சொன்ன விவரங்களுக்குக் காலமும் ஒத்திருக்கிறதே? அவர் என்னைப்பிரிந்தும் சுமார் ஆறுமாத காலந்தானிருக்கும்.

**பண்டிதர்** :—இன்னுஞ் சொல்கிறேன் கேள்! அன்றிரவில் நான் சமையற் கட்டிற்குப் பக்கத்துக் கட்டிற் படுத்திருந்தேன். இந்தச் சமையற்காரரும், அவருதவிப் பரிசாரகனும் பக்கத்தரையிற் படுத்திருந்தார்கள். அப்பொழுது, எனக்கிருந்த சந்தேகத்தைப்பற்றி, 'என்னடா? நமது சக்கிரவர்த்தி இப்படியா வந்துசேர்வார்? நன்றா யெண்ணினோம்' என்று யோசித்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது ஒருபாடல் அடுத்த அறையிலிருந்து காதிற் கெட்டியது. திடுக்கிட்டு எழுந்து, மறுபடியும் பதறக்கூடாதென்று நினைத்து அதைக் கவனித்தேன்.

நாலொரு கோடி கூறும் நண்ணிய பொருளை நானுஞ்
சாலவே பாதிப் பாவிற் சாற்றுவ னதுதா னென்றுங்
காலம தறிந்து செய்யுங் கனத்ததோ ருதவி புண்யம்
ஞால மேற் பாவமாகு நலிவினைப் பிறர்க்குச் செய்தல்.

என்ற செய்யுளென் காதில் விழுந்தது. அந்த மிடற்றொலி நமது ராஜனுடையது போலவே யிருந்தது. இந்தப் பாடலும் அவர் பலமுறை சொல்லிக் கேட்டிருக்கிறோமே ஆதலால், அவரே யென்றெண்ணினே னாயினும் இன்னும் கேட்போமென்று கேட்டேன். உடனே வேறொரு பாடலைப்பாடினார். அதைக்கேட்டதும் நம்மரசர் போலவே யிருந்ததுபற்றி, என்னை யறியாமலே பெருமூச்செறிந்தேன். உடனே, அவருடனிருந்தவன், "யார் அங்கே?" என்று கேட்டான். "நான்றான் வேற்றூர் மனிதன்" என்றேன். அதன் பிறகு சப்தமேயில்லை.

தமயந்தி :—அப்பாடலும் தங்களுக்குத் தெரியுமோ?

பண்டிதர் :—அஃதெனக்குத் பாடமில்லை. ஆனால், அதன் கருத்தை யறிவேன். அதாவது,

"சூரியன் மேற்கே யுதித்தாலும், மேருமலை யசைந்தாலும், நெருப்பு குளிர்ந்தாலும், தாமரைமலர் பர்வதத்தினுச்சியில் மலர்ந்தாலும், பெரியோர்கள் தாம் சொன்ன வார்த்தையை யழித்துப்பேசார்" என்பதே.

தமயந்தி :—அதுவா? ஐயோ! இந்தப்பாடல் எனது வள்ளல் அடிக்கடி சொல்லக்கூடியதாயிற்றே! எனக்குகூட அது பாடமே! அதை நான் சொன்னால், இதுதானா அவர் பாடிய பாட்டென்று சொல்கிறீர்களா?

பண்டிதர் :—சொல்கிறேன். எங்கே?

தமயந்தி :—

தினகர னுதய மேற்குத்
திசையென மாறிட்டாலுங்

கனகவெற் பசைந்திட்டாலுங்
கனலிதான் குளிர்ந்திட்டாலும்
வனசமென் மலருமாண்டோர்
மலைமிசை மலர்ந்திட்டாலுங்
கனமிகு சான்ருேர் தங்கள்
கட்டுரை யழித்துப் பேசார். (கள)

பண்டிதர் :—இதுவே! இதுவே!! நீ சொன்னமாதிரியே சொன்னார். ஆனமட்டும் பொறுத்துக்கொண்டே வந்தேன் "கட்டுரையழித்துப்பேசார்" என்ருர் சகிக்கவில்லை. பெருமூச்செறிந்து விட்டேன். அவராகத் தாமிருக்கவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டு, தக்க ஏற்பாடு செய்யச் சொல்லலாம் உன் பிதாவிடம்சொல்லி, என்று இங்கு வந்தேன். வந்தவிடத்தில் நீ வந்திருக்கும் சங்கதி தெரிந்து, உன்னைக்கண்டேன்.

தமயந்தி :—நல்லது, அவர் என்பர்த்தாவென்றே எனக்குந் தோன்றுகிறது. ஆனல், மிகக் கறுப்பென்கிறீர்களே. அதுவும் கஷ்டத்தை யனுபவித்துக்கொண்டு புகை யடியிலிருப்பதனுற் கறுத்திருக்கலாம். நல்லது, அந்தணரே! அவர்தாமோ வென்று தீர்மானிக்க என்ன செய்கிறது? ஒரு யுக்தி சொல்லுங்களேன்? பல விடங்களிற்கும் பயனில்லாமற் பலரை யனுப்பிவிட்ட படியால், இனி என் தந்தையிடஞ் சொல்லக் கூச்சமா யிருக்கிறது.

பண்டிதர் :—(யோசித்து) எனக்கொன்று தோன்றுகிறது. உனக்கெப்படி யிருக்குமோ?

தமயந்தி :—என்ன சொல்லுங்கள். எது சொன்னுலுங் கேட்கச் சித்தமாயிருக்கிறேன்.

பண்டிதர் :—நளராஜர் ரதசாரத்தியத்தில் ஒப்புயர்வில்லாதவரென்று தெரியு மல்லவா? அதைப் பரீக்ஷிக்கும்படி

ஒரு யுக்தி செய்யலாம். அதுவும் கைகூடிற்ருே, அந்தச் சமையற்காரர் நளராஜ ரென்பது நிச்சயம்.

**தமயந்தி** :—எப்படிப் பரீக்ஷிக்கிறது ?

**பண்டிதர்** :—உன்னுடைய சுயம்வரத்தின்பொழுது, பலதேசத்து மன்னர்களும், உன்மேற் காதல்கொண்டு வந்திருந்து, பிறகு ஏமாந்து சென்ருர்களல்லவா ? அவர்களுள், ரிதுபன்னன் மிகுந்தசபலமுள்ளவன். மேலும், உன் புருஷர் நாட்டை யிழந்து, காட்டை யடைந்து, உங்களையும் பிரிந்து இருக்குமிடமுந் தெரியாது வெகுநாளா யிருக்கிருரென்பதும் உலக மறியுமே? ஆதலி னிப்பொழுது, "நாட்டை யிழந்த நளராஜன் நெடுநாளா யிருக்கு மிடங் கூடத் தெரியாமை பற்றி நான் எனது குமாரத்தியாகிய தமயந்திக்கு இரண்டாவது சுயம்வரம் செய்வதாக உத்தேசித் திருப்பதனல், தாங்கள் வந்து சேரவேண்டும்" என்று உன் தந்தையா ரெழுதியதுபோல் ஒரு பத்திரிகை யெழுதி என்னிடங் கொடு. நான் கொண்டுபோய் அவ்வரசனை என்று பாக்கிறேஞே அன்றைக்கு மூன்ருவது நாள் சுயம்வரமென்று சொல்லிப் பத்திரிகையைக் கொடுக்கிறேன். அவன் நாட்டிலிருந்து நம் நாட்டிற்குத் தேர் ஒருநாளில் நடத்தக் கூடியவர் நளராஜரே. அன்றே அவ்வரச னிங்குவந்து சேர்ந்தாஞே, அச்சாரதி சமையற்காரரே· அவரே நளராஜர். இதுதான் எனக்குத் தொன்றுகிறது.

**தமயந்தி** :—ஒன்று தவிர மற்றவை யெல்லாம் சரியே ! நான் மனமார எனக்கு இரண்டாவது சுயம்வரமென்று சொல்கிறதா ? மேலும், அவர் என்காதலராக விருக்கும்பக்ஷத்தில், அவரென்னிடத்தில் வைத்துள்ள அன்பிற்கு, இதைக் கேட்டவுடனே துஷ்டை இவ்வளவு சாகசியா ? என்று என்னை வெறுத்துப் பிராணனை விடுவா ராஞல் என் செய்வேன் ?

**பண்டிதர்:**—அம்மா! எனக்கு ஜோஸ்யம் தெரியுமென் றுனக்குத் தெரியாதா ? அப்படி நேராது. அதைக்கேட்டுக் கொஞ்சம் வருத்த முறுவாராயினும், புத்திசாலியாதலின் முழுமையும் பார்ப்போமென்று வந்து சேருவார். நீயும் உன் புருஷரைக் காணவேண்டிச் செல்வதனுல், இரண்டாவது சுயம்வர மெனல் குற்றமாகமாட்டாது.

**தமயந்தி:**—நிச்சயந்தானு ? பிரபோ ! வந்து சேருவாரா ? சோதிட நூலையாராய்ந்து பார்த்தீர்களா ?

**பண்டிதர்:**—பார்த்தேன், நிச்சயமாய் வருவார்.

**தமயந்தி;**—ஆனுல், இதோ கடிதமெழுகித் தருகிறேன். (எழுதிப் பண்டிதரிடந்துக் கொடுக்கிறுள்) இதோ, எடுத்துச்செல்லுங்கள். தகுந்தபடி பார்த்துக் கொள்ளவேண்டும். நீரே யெனக்குத் தெய்வம். சீக்கிரப் வந்து சேரவேண்டும்.

**பண்டிதர்:**—அப்படியே போய் அதிசீக்கிரத்தில் வருகிறேன்.

**தமயந்தி.**—ஸ்வாமி ! நமஸ்கரிக்கன்றேன். (நமஸ்கரிக்கிறுள்)

**பண்டிதர்:**—தீர்க்கசுமங்கலீபவா ! போய்வருகிறேன். [போகிறுர்.

**தமயந்தி:**—(தனியே) தேவி ! உன்னுடைய அருளிவ்விதமேயோ ? எ !! கருணையங்கடலே ! உன்னேக்கமும், உன்னெண்ணமும், எவரறியற்பாலர் ? யோகியரே மயகுங்கிருரென்றுல், பேதை நானே வறிவேன் ? ஏதோ நீயே காபபாற்ற வேண்டும். (திருப்பவும் புஷ்ப முதிர்கிறது) ஏதோ, எங்கள் பாக்கியம் திரும்புங்காலம்போ லிருக்கிறது இன்னும் புஷ்ப முதிர்கிறதே ?

சேடி வருகின்றுள்.

**சேடி:**—அம்மா ! ராணியார் உணவுகொள்ளக் காத்திருக்கிறுர்கள். உங்களை அழைத்துவரச் சொன்னுர்கள்.

**தமயந்தி:**—இதோ வந்துவிட்டேன். [போகிறுர்கள்]

# மூன்றாங் களம்.

---

இடம்: அயோத்தியில் ரிதுபன்னனரண் மனையிற் கிணற்றுப்புறம்.

காலம்: இரவு.

பாத்திரம் வாகுகன்.

வாகுகன்:—ஜகதீசா! இதென்ன வனியாயம்? வாழையடி வாழையாகி வாழ்ந்துவந்த இராஜ வம்சத்தில் நான் பாவி தோன்றித், தொன்றுதொட்டு எம்மரபிலே யிருந்ததாகிய அரசுரிமையையும் இழந்து, என்னருமைக் குடிகளைக் கிளிகளைப் பூனையிடத் தொப்பித்தல்போலப் புஷ்கரனிடத் தொப்பித்து, என் மனைவி மக்களையும் பிரிந்து, எனது உருவமாறிப் பிறனொருவனுக்குக் குற்றேவலுஞ் செய்ய நேர்ந்ததே! என் செய்வேன்? ஐயோ! என் கஷ்டகால மிதனுடன் போகக்கூடாதா? எந்தத்தலைவியிடத்து அன்பு பாராட்டி, அவளு மென்னை நேசிக்கிறாளென்று எண்ணியிருந்தேனோ, அத்தகையாள் நான் உயிருட னிருக்கும்பொழுதே வேறொருவனை மணம் புரியப் போகிறாளாமே? இத்தீச்செயல் நானறியாது நடந்து தொலையக்கூடாதா? நான் கேட்டுத்தவிக்க வேண்டுமா? அட! கஷ்டமே! என்காதில் விழுந்ததுடன் போகவில்லையே?

எந்த மாதை யுயிர்நிலை யென்று நான்
சொந்த யாக வணைத்துச் சுகித்தேனோ
அந்த மாதை யயலவர்க் காக்கவே
சிந்தை நொந்துஞ் சிறுதொழிற் செய்வெனோ? (௬அ)

என் செய்வேன். நாளைக்காலையில் இங்குவிட்டுப் புறப்பட்டு நாளை மாலையே குண்டினபுரஞ் செல்லவேண்டுமாம். அவ்வளவு விரைவில் தேர் நடத்துவதற்கு நான

ன்றி யியலாதென்று அரசனுக்குத் தெரிந்துவிட்டதே, ஐயோ! என் தேர் நடத்துந்திறமை இதற்கோ பயன்பட்டது? நான் தேர் வித்தையில் தேர்ந்தவ னென்று சொல்லிக்கொள்ளாதிருந்தேனு? இனி யென்ன செய்கிறது? அவன் அன்னத்தைப் புசித்துவிட்டு அவனுக்குத் துரோகஞ் செய்யலாமா? என்ன பாபமோசெய்து இந்தத்துன்பத்திற் காளானேம்! இனி, எஜமானத் துரோகமும் சம்பாதித்துக் கொள்ளவேண்டுமோ? போய்த்தான் தீரவேண்டும். ஈசா! உனக்குக் கருணை யில்லையோ? கருணாகரனென்பது உன்பேர்களி லொன்றன்றோ? நான் எளைபடும் பாடு உன் திருச்செவிக் கேறவில்லையோ?

அந்நாளெனது நாற் படையு
மமைச்சர் பலரும் புடை சூழப்
பன்னு வழுத்தப் பகை யரசர்
பலரும் வெருவி யெனைப் பணிய
மின்னே ரிடையா டனை மணக்க
விரும்பிச் சென்ற யாக்கை யுட
னிந்நா ளவளை யெணி யேரு
மிறைவன் றேரூர்ந் தேகுவெனே (கக)

இப்பிறவி என்ன பிறவியோ? ஆண்மகனாய்ப் பிறந்து அகில லோகத்தையும் ஆண்டு, தீராப்புகழ்பெற்ற நானே, பிறனொருவனுக்கு என் பெண்சாதியைக் கூட்டி வைக்க முயலுவேன்? ஒருகாலு மில்லை. என் மனவியை அடைய எண்ணங் கொண்டதாக, என்னிடத்துத் தெரியப்படுத்திய பொழுதே என் தேகந் துடித்தது! என் கைகள் தினவெடுத்தன! என் கண்கள் பொறி கான்றன! ஆயினும், எஜமான னென்றும் எனக்கும் போதாதவேளை யென்றும் நினைத்துச் சும்மா யிருந்து விட்டேன். தேர் நடத்துவதாகவும் சம்மதித்தேன். இப்பொழுது என் மனம் பதைக்கிறதே! நான் பிடித்த கரத்தையோ வேறொருவன் தொ

டுவது? நான் தழுவிய கோமள சரீரத்தையோ வேறொ
ருவன் பரிசிப்பது? நான் முத்தமிட்ட சந்திர வதனத்
தையோ அன்னியன் ஆவாக்கொண்டு நோக்குவது? இவ்
வுயிருள்ள அளவுங் கூடாது! கூடாது!! எவனொருவன்
அத்தகைய இச்சையைக் காட்டுகிறானோ, அவனிவ்வா
ளுக் கிரையாத லொருதலை. (வெறுவெளியைக் கையால்வீசிக்
கீழேவிழுகின்றான். பின்னும் எழுந்து) ஆ! இஃதென்ன அறியா
மை? என்னே பிதற்றினேன்? எதற்கோ பிறரை வெகு
ளுவது? நற்பொரு ளொன்று கிட்டுவதாயின், அதனைப்
பலருப்பெற முயல்வதியல்பு. அதற்காக நா மவரைச்
சீறுவதி லென்ன பயன்! இரண்டாஞ் சுயம்வர மேற்படு
த்திய வீமனை யன்றோ சொல்ல வேண்டும்? நற்குலத்திற்
பிறந்தவன்——நீதியரச னெனப்பெயர் வாய்ந்தவன்—
அவன் புதல்வியின் நிலைமையையும், மனக்குறிப்பையுங்
கருதாது, உத்தம புருஷனுக் கன்றோ வாழ்க்கைப் பட்டுள
ளென்பதையும் நினையாது, இருகுலங்கட்கும் இழுக்கு
வருமே என்றாலோசியாது, இன்னணஞ் செய்தானே?
இவனோ புத்திமான்? இவனோ மானமுடையவன்? நன்
றா யிருந்தது இவன் நீதி! ‘ஏக புத்திரிதானே, அவளையு மிந்
நிலையிற் காணலாமா?’ என்று செய்யத் துணிந்தான் போ
லும்? உன்னுடைய அற்பச் சந்தோஷத்தின் பொருட்
டுப் பெண், பெண்ணைப்பெற்றோர், பெண்ணைக்கொண்
டோர் முதலிய யாவர்க்கும், என்றுந் தீராப் பழியைச்
சுமத்த நினைத்தாய்! ஏ! அரசனே! இரண்டாம் விவா
கம் யாருக்கேற்பட்டது? புருஷனைச்சேர்ந்த னுபவியாம
லிழக்கநேர்ந்த பூவையர்க்கும், மற்றுமுள்ள மத்திம ஜா
திப் பெண்களுக்குமன்றோ? புருஷனை யனுபவித்த உத்
தம ஜாதிப் பெண்ணாகிய தமயந்திக்கோ அவள் புருஷ
னுயிர்த்திருக்கும்பொழுதே இரண்டாஞ் சுயவரம் செய்
வது? நான் மட்டும் உன்னைப்பார்க்க நேரிடில் உன் சிர
த்தைக் கொய்வே னிக்கத்தியினால்! (கையை வெறும் வெளியில்

வீசி விழுகின்றான். மறுபடி எழுந்து) ஐயோ! பேதையேன்?
பேதையேன்! என்ன அவர்களை நொந்துகொண்டேன்.
அவர்கள் பேரி லென்ன குற்றம்? இக் கொடிய பாதகியை
யன்றோ வெறுக்கவேண்டும்? இவள் மணம் புரியவே னெ
ன்று இணங்காவிடில், இவ்வளவு தூரம் நடந்திருக்குமா?
இத் தீயாள்! இத் துணிவுடையாள்! இவ் வரக்கி! இக் கா
மினி! என்னோடு கூடவிருந்து, நா னனுபவித்த சுகங்க
ளனைத்தையும் பங்கிட்டு வாழ்ந்து, நான் காடு போம்பொ
ழுதும் என்னிடத்து வெகுவாய் அன்பு பாராட்டி என்
னுடன் வந்துவிட்டு, இனி யென்னாற் பயனில்லை என்று
தெரிந்ததன்மேல் வேறொருவனைக் கைப்பிடிக்கத் துணிந்
தாளே காதகி? என்னிடத்துக்கொண்ட அன்பு உண்மை
யாயின் இப்படிச் செய்வாளா? ஏதோ அரசனாக விருந்தத
னால் அன்பு பாராட்டி வந்தாள்போலும்?———ஆயின்,
நாட்டை யிருந்து காடுசெல்லும்பொழுதும் என் கூட வந்
தாள்? ஒருகால், என்னிடத்துச் சனங்கள் மிக வன்பு
பூண்டிருந்ததனால், என்னைமீட்டும் நாட்டிற்குக்கொண்டு
போவார்க ளென் றெண்ணினளோ? அல்லது, புருஷனை
விட்டிருப்பதே வசைச் சொல்லிற் கிடம்; அவனும் நம்மி
டத்துக் காதலுள்ளவன்; அவனிடத்துக் காதலால் நா
மும் காடு செல்வதாகச்சென்று, அவன் மனதைக்
கவர்ந்து, நம் தாய்வீடு செல்லலா மென் றெண்ணினளோ?
அவ்விதமும் நடவாமல், நானும் பிரிந்துவிட்டே னாதலின்,
தாய்வீடு சென்று, எனக்காகக் கொஞ்ச காலங் காத்திரு
ந்து, நான் வாராமை கண்டு, காட்டுவிலங்குகளுக் கிரை
யாகி யிருப்பனென் றெண்ணிச், சுகம்பெறவேண்டி,
மறுமணங் கருதினளோ? உண்மையாய் என்னிடத்துக்
காதலுள்ளவ ளாயி னிப்படிச் செய்யாள். புருஷ னிறந்
தாற் கூடவிறப்பார்க ளன்றோ பத்தினிப் பெண்டிர்கள்?
இவள் அவ்விதப் பத்தினிப் பெண் ணல்லளோ?———
இல்லையேல், என்னிடத்து அவ்வள வன்புட னிருந்திருப்

பாளா? என்னதான் நினைப்பது? எவ்விதந் தான் நிச்சயிப்பது?——நிச்சயிப்பதென்ன விருக்கிறது? பெண் பேய்களே இப்படித்தான். எழுஞாயிறை யேத்துவாரேயன்றிப் படுஞாயிறைப் பாராட்டார். ஒருவனுற் சுகமனுபவிக்கும்வரை, வாழுமரத்துப் புல்லுருவி போலனுபவித்து விட்டுப் பிறகு புறக்கணிப்பார்.

* "அன்புநூ லாகவின் சொல்லர் தொடுத்த மைந்தகாத
லின்பஞ் செய்காமச் சாந்திற் கைபுனைந் தேற்றமாலை
நன்பகல் சூட்டி விள்ளா தொழுகினு நங்கை மார்க்குப்
பின்செலும் பிறர் கணுள்ளம் பிணையனார்க்கடியதொன்றே"

என்று பிறர் சொல்லக்கேட்ட நான், இஃது அநியாயமாய்ப் பாவையர்களைப் பழிப்பதாகு மென் றெண்ணினேன். அதனுண்மை யின்றுதா னறிந்தேன். என்னிடத்துத் தமயந்தி யிருந்தமாதிரி, வேறு ஒருமனைவியும் தன் கணவனிடத்திருந்திடாள்! இவளோ இவ்வித மாறுதலடைந்தனளே? இனி யிவ்வுலகிற் பெண்பாலரை நம்ப இடமேயில்லை. அவர்களெவ்வள வன்பு பாராட்டினாலும், அவ்வளவும் ஸாகஸமென்றே துணிய வேண்டும்.

† "வெம்புவாள் விழுவாள் பொய்யே
மேல்விழுந் தழுவாள் பொய்யே
தம்பலந் தின்பாள் பொய்யே
சாகிறே னென்பாள் பொய்யே
அம்பிலுங் கொடிய கண்ணா
ளாயிரஞ் சிந்தை யாளை
நம்பின பெயர்க ளெல்லாம்
நாயிலுங் கடை யாவரே." (எக)

என்ன வநியாயம்? என்னிடத்து அவளிருந்தமாதிரி யென்ன? இப்பொழுது செய்திருக்கு மேற்பா டென்ன?

* சீவக சிந்தாமணி. † விவேக சிந்தாமணி.

இவ்விதம் மாறுதலடையும் மாதர்களை நம்பியா ஆடவர்களுய்யவேண்டும்? ஐயகோ! இப்படியுங் காலம் வந்ததே! இக் கன்னியர்களை நம்புமவர்கள், இனியாகிலும் என்னைக்கண்டு தெளியட்டும்! அவர்களை நம்புவதைக் காட்டிலும் வேறெதையும் நம்பலாம்.

"தாமகேது புவிக்கெனத் தோன்றிய
வாமமேகலை மங்கைய"

ரெனத்தகும்! தருட்!! என்ன? ஒரு ஸ்திரீ, எப்படித்தான் பல ஆண்டுகள் ஒரு புருஷனை யனுபவித்துப் புதல்வர்களையும் பெற்றுப் பின்னும் விவாகங் கருதினளோ? அட! கேவலம் ஓர் அணியை நாம் அபிமானத்துடன் அணிந்து வந்து, அதை இழந்துவிட்டால், அந்தக்குறிப்பிட்ட அணியி னிடத்திருந்த அன்பால், வேறு அதுபோன்ற அணியணியாது விலக்கி விடுகிறோம். இந்த யோக்கியதைகூடக் கிடையாதா ஒரு புருஷனுக்கு? மாதர்களென்ன? இன்ப நுகர்ச்சிக்கென்றுதாம் படைக்கப்பட்டிருக்கிறார்களா? ஒரு தலைவனை விடுத்து மறு தலைவனைத்தேட? ஏ! பெண்குலமே!

கட்குடியனைப்போற கணமொரு நினைவாய்க்
கறங்கிடுங் காரிகைக் குலமே!
வெட்கமுற் றிலையோ? விவத்தை யற்றனையோ?
வேதனை யனைத்திற்கு மிலமே!

மட்கல மென்கோ வாடவர் தமையே
மனையற வாரிதி யதனி
னுட்கவிழ்த் திடுமோ ருறுபுழை யோட
மோவென வுரைக்குகோ வினையே? (எ௨)

ஐயகோ வுன்னை யாடவர் பலரு
மடைந் துயிரிழந்திட லென்னே?
வெய்யதாங் காமச் சுரவெறி யதனால்
வேறுவேறு யுடைந்தல தூஉம

பொய்யதாம் வழியை நாடியே போகச்
சுழலிடை யழுந்திபு மன்றேல்
மையலார் தனமென் மாபுய லதனல்
மாய்ந்திடு மியல்பினை யலேயோ. (எ௩)

அட! பெண்களுக்குக் குலச்சிறப்பு வேண்டாமா? பெருந்தன்மை வேண்டாமா? கற்பொழுக்கம் வேண்டாமா? பொருளும், போகமுங் கொடுக்கும் புருஷனிருந்தாற் போதுமென்றிருக்கலாமா! தமயந்தி விஷயத்தி லப்படியன்றோ முடிந்துவிட்டது? ஆதலின், ஆடவர்காள்! இனியாகிலும் பெண்களை நம்பாதீர்! பெண்களினியல்பு வெளிப்படையாய்த் தோன்றுது.

* "பெண்ணெனப் படுவ கேண்மோ
பீடில பிறப்பு நோக்கா
வுண்ணிறை யுடைய வல்ல
வோராயிர மனத்த யாகும்
எண்ணிப் பத்தங்கை யிட்டா
லிந்திரன் மகளு மாங்கே
வெண்ணெய்க்குன் றெரியுற் றாற்போன்
மெலிந்து பின்னிற்கு மன்றெ" (எ௪)

என்னதான் விரக்தி மேலீட்டாற் சமாதானப படுத்திக் கொண்டாலும், மனம் பதறுகிறதே! என் செய்வேன்? என் கண்மணி; என்னரசி; அவளேயோ பிறன்தொடுவது? என்மனம் துடிக்கிறதே? ஏ! தமயந்தி! நீ என்னிடத் துக்காட்டிய நட்பனைத்தும் நடிப்பேயோ? நீ இப்படி மாறுதலடைவாயென்று நானெண்ணவே யில்லையடி! ஏ! காந்தாமணி! அப்படி நானுனக்கென்ன தீங்கிழைத்தேன்? நான் உன்னைக்காரிருளிற் கானகத்தே விடுத்தே னுதலின், உன்னிடத்து அன்பற்றவனென்றும் முற்காட்டிய அன்பனைத்தும் பாசாங்கென்று மெண்ணி

* சீவகசிந்தாமணி.

வெறுத்தனையோ? ஐயோ! நானுன் நன்மையையே என்றுங் கருதுபவனாவேனே! நீ யென்னை யறிந்திலையோ? இனி, என்னிலையை யுனக்கெவ்வாறு காட்டுவேன்? நாளை இவ்வளவு நாழிகைக்கெல்லாம் வேறொருவனுக் குடையவளாகி விடுவையே? அதற்குள், நானெப்படி என்னன்மைக் காட்டிக்கொள்ளுவேன்? சமயம் வாய்த்தபோதிலும், எனது புன்தொழிலோடும், கறுத்த மேனியோடும், 'நான்றான் நளன்' என்று சொன்னால் நீ நம்புவையோ? நீ நம்பினாலு முன் உறவினர்க ளொப்புவர்களோ? (சற்று யோசித்து) ஆ! என்ன நினைக்கலாயினோம்? அப்படியேதான் நம்மை யாதரித்தாலும், நாம் போய் 'நான்றான நளன்' என்று சொல்லி அவர்கள் தயவிற் காளாகிறதா? நன்றாயிருந்தது! (கொஞ்சம் பொருத்து) என்ன இருந்தபோதிலும் என்பத்தினியைப் பிறன்கைக் கொள்வதென்றால், நெஞ்சந் துடிக்கிறதே! அதுவும், என் கண்காணவா? அதிலேயும் ரிதுபன்னன் மணக்கநேரிடில், அவனுட னுல்லாசமாய்ப்பேசி விளையாடிக் கொண்டு வரும் தமயந்தியை, அவனுடைய தேர்ப்பாகனாகவா நானிருந்து பார்க்கிறது? என் குருதி குதிக்கிறதே? அதை நான்காணச்சகியேன்! ஆதலால், இதுவரை அன்னமளித்துக் காப்பாற்றிய அரசனை, அவனெண்ணப்படிக் குண்டினபுரஞ் சேர்த்துவிட்டு, என் கத்திக்கிரையாகவேண்டியதுதான். இதுவே திண்ணம், (சற்றிருந்து) நல்லது, இத்தனை நேரமும் அவளுக்குப் பாதகமாகவே நினைத்து வந்தோமே? ஒருகால், அவள் என்னைக்காண வேண்டி இத்தந்திரம் என் செய்திருக்கக்கூடாது? இப்பொழுது மணவோலை கொண்டுவந்துள அந்தணரோ, நமது அரண்மனை வித்வான். முன்னொருமுறை யிங்கு வந்தவர். அன்று சாப்பிட்டபொழுதே அவர் என்னைக் குறிப்புடன்நோக்கினார். அன்றிரவு நான் பாடினதையுங் கேட்டுப் பெருமூச்செறிந்தார். ஆதலால், அவர் என்னை

சந்தேகித்துத் தமயந்திபிடஞ் சொல்லி யிருக்கலாம். அவள், என்னைக்காணவேணடியே இந்தயுக்தி செய்து மிருக்கலாம். இல்லாவிட்டால் நூறுயோசனை தூரமுள்ள ஊருக்கு முதல் நாள் புறப்படும்படியா மணவோலை வரும்? அப்படியேன் சாதகமாய் எடுத்துக்கொள்ளக் கூடாது? ஏ! ஜகதீசா! இப்படிச் சாதகமான காலமும் ஏற்படுமோ? அல்லது, மெய்யாகவேதான் புனர்விவாக மாகிவிடுமோ?

முற்பிறப்பிற் செய்தவினை முடிந்ததுவோ
 மொய்குழலா டனையே துய்க்க?
நற்குடியிற் பிறந்தவொரு நலத்தையுமே
 நாடாது நவின்றா ளன்றோ?
கற்பாசி யலரோவக் காரிகையுங்
 காதலினு லெனையே காணக்
கற்பனையாய் விடுத்தனளோ கடிமணத்தி
 னோலையிதைக் கண்டிலேனே? (எரு)

நாமென்ன செய்யலாம்? விசாரப்பட்டுப் பயனில்லை. நடக்குங்காரியம் நடந்தேதீரும். ஆதலால், வீண்காலம் போக்குவானேன்? பொழுது கழிகின்றது! காலையிலெழுந்து நம் கடனைத்தொலைக்கவேண்டும். குண்டினபுரம் போனபிறகு, ஒன்றும் நேரிதா யில்லாவிட்டால், நாமுயிர்துறக்க வேண்டியதுதான்; எவ்வாறு முடிகின்றதோ? ஜகதீசா!

"எண்ணாத வெண்ணமெல்லாம் எண்ணியெண்ணி யேழை
 புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே." [நெஞ்சம்
"ஓயாதோ வென்கவலை உள்ளே யானந்த வெள்ளம்
 பாயாதோவையா பகராய் பராபரமே." (எஎ)
"பாராயோ வென்னைமுகம் பார்த்தொருக்கா லென்கவலை
 தீராயோ வாய திறந்து செப்பாய் பராபரமே." (எஅ)
"உள்ளமறிவாய் உழப்பறிவாய் யானேழை
 தள்ளிவிடின் மெத்தத் தவிப்பேன் பராபரமே" (எகூ)

[போகின்றான்

# அங்கம்:-ரு.

## முதற்களம்.

இடம்: குண்டினபுரத்திலரண்மனை யந்தப்புரம்.

காலம்: மாலைப்பொழுது.

பாத்திரம்: தமயந்தி.

தமயந்தி:—என்னவாயிற்றோ? போன அந்தணர் வருங்காலமாயிற்றே! அங்கு அவர் கண்டு ஐயுற்றது எனது ஐயனேயின், நிச்சயம் சீக்கிரத்தில் வந்துவிடுவார்கள். ஒருகால், இவ்வந்தணர் இன்னும்போய்ச் சேரவில்லையோ? வழியிலேதேனும் ஆபத்திற் குள்ளாயினரோ? அல்லாக்கால், ரிதுபன்னன்றான், ஒருவரனுபவித்த மாதென்று தேட்டமற்றிருந்து விட்டானோ?——அல்லது, அந்தணர் ஐயுற்றது தான் பிழைத்ததோ?——அன்றி, இச்செய்திகேட்ட தலைவர் வெகுண்டு வெறுத்துத் தம்மை மாய்த்துக்கொண்டனரோ? ——ஒன்றுந் தெரியவில்லையே, ஜகதீசா? கைக்குவந்துவிட்டதென் றெண்ணினேனே? கானனீராய் முடியுமோ? உன் திருவுள்ளமெப்படியோ?

சேடி வருகின்றாள்.

சேடி:—அம்மா! யாரோ ஓர் அந்தணர் வந்திருக்கிறார். (தமயந்தி திடுக்கிடுகிறாள்) அவர் ரிதுபன்ன மகாராஜனுடன் வந்தவரென்று சொல்லுகிறார். தங்களைப் பார்க்கவேண்டுமாம்.

தமயந்தி:—நல்லது, உடனே வரவிடு. [சேடி போகின்றாள்.
வந்துவிட்டார்போலும்! எனது ஐயன்றானோ-

பண்டிதா நாகேசபட்டர் வருகின்றார்.

மகாநுபாவரே! எப்பொழுது வந்தீர்கள்? நமஸ்கரிக்கிறேன். (நமஸ்கரிக்கிறாள்.).

பண்டிதர் :—தீர்க்கஸுமங்கலீபவா! ஜயம்! ஜயம்!! ஜயம்!!!

தமயந்தி :—ஜயந்தானு, பிரபோ? எனதையன் வந்தாரா? தாங்கள் ஐயுற்றபடி அவர் எனது ஐயர்தாமா?

பண்டிதர் :—ஆம். உன்றலைவர் வந்தார். எனது ஐயம் தெளிந்தது.

தமயந்தி :—எவ்விதம் தெளிந்தது, பிராம்மணோத்தமா? தேர் ஒருபொழுதில் வந்ததனாலேயா?

பண்டிதர் :—அதுமட்டு மன்று.

தமயந்தி :—வேறெவ்விதம், பிரபோ?

பண்டிதர் :—நான் மணவோலையை அரசனிடத்துக் கொடுத்து மூன்றுநாட் சுயம்வர மென்றேன். அவ்வளவு சீக்கிரத்தில் தேர் நடத்தக்கூடியவர் சமையற்காரரொன் றறிந்த அரசன், அவரை வரவழைத்து அவரிடம் சமாசாரத்தைச் சொன்னுன். அப்பொழுது அவர்முகத்தி லுண்டான குறிகளை நான் நன்கு கவனித்தேன். பிறகு, பரிமாறின பொழுதும் அவரைக் குறிப்பாய்ப் பார்த்தேன். அப்புறம், ஒருமுகூர்த்த தேசகாலத்திற் கெல்லாம், அவ்வாண்மனைப் பின்புறஞ் சென்றேன். அங்கு யாரோ ஒருவர் உறக்கப்பேசின சத்தங்கேட்டது. அப்பொழுது, 'இரண்டாஞ் சுயம்வர மேற்படுத்திய வீமனையன்றோ சொல்லவேண்டும்?' என்ற வாக்கியம் காதில் விழுந்தது.

தமயந்தி :—(மிட்ட நெருங்கி ஆவலுடன்) அப்புறம்?

பண்டிதர் :—அது நம்ம விஷயமா யிருந்ததால், கொஞ்சம் மறைவாயிருந்து கேட்டேன். அப்பொழுது ஒருவர் உன்

தகப்பனுரைப் பலவாயிகழ்ந்துவிட்டு, 'நான்மட்டும் உன்னைப்பார்க்க நேரிடில் உன் சிரத்தைக்கொய்வேனிக்கத்தியினல்,' என்று வெகுகோபத்துடன் முழங்கிக் கீழே விழுந்தார். எனக்குப் பயமாயிருந்தது. ஓடிவந்துவிட்டேன். பிறகு நடந்த தறியேன். இவ்வளவு ஆக்கிரோஷத்துடனும், கம்பீரத்துடனும் பேசியவர், நளராஜரென்பதிற் சந்தேகமில்லை. மேலும், தேர் நடத்தினதென்ன சாமானியமா? ரிதுபன்னன் என்னையும் அத்தேரிலேற்றிவந்தான். அப்பொழுதென்ன பறக்குமா தேர்? கந்தர்வலோகத்துத் தேர்களுக்கு இரகுண்டென்பார்கள். இவ்வளவு வேகம் அவைகளுக்கிராது. எனக்கு வயசானதனலே, அந்த வேகத்திலே, மூச்சுவிடக்கூடமுடியவில்லை. வாயுவேகம் மனேவேகம் பின்னிட வேண்டுமே? அத்தகைய சமர்த்தர் நளராஜரே.

தமயந்தி :—இவர்கள் வந்துவிட்டார்களா?

பண்டிதர் :—ஆம், வந்துவிட்டார்கள். தாமரைக்குளத்து அருகிலுள்ள மாளிகையி லிறங்கியிருக்கிறார்கள்.

தமயந்தி :—(பெருமூச்செறிந்து தனக்குள்) எனதையன் என் சுயம்வர காலத்தில் வந்திறங்கியிருந்த மாளிகையன்றே? (வெளியாய்) அந்த மாளிகையிலா?

பண்டிதர் :—ஆம். ரிதுபன்னன் உன் தந்தையைப் பார்க்கச் சித்தமா யிருக்கின்றான்.

தமயந்தி :—பார்க்கட்டும்போய். ஏன்? மகாநுபாவரே? இனியென்ன ஏற்பாடு சொல்லுகிறீர்கள்? எப்படிச் சந்தேகந் தெளிந்து வெளிப்படுத்துகிறது?

பண்டிதர் :—நான் முன்னமேயே யோசித்துப் பார்த்தேன். எனக்கொன்றுந் தோன்றவில்லையே? நல்லதம்மா! இனி நீயே யோசித்துச் செய்யவேண்டியவைகளைச் செய்து

கொள். நானும் யோசிக்கிறேன். ஸந்த்யாகால மாகிவிட்டது. ஆதலால், நான் சீக்கிரமாய் ஸந்த்யாவந்தனஞ் செய்து வருகின்றேன்.

**தமயந்தி** :—(சற்றுயோசித்து) நல்லது, செய்யுங்கள்.

[பண்டிதர்போகின்றார்.

நான் இனி யென்னசெய்வேன்? எனக்கொன்றுந் தோன்றவில்லேயே? இதுவரைப் புத்திசொல்லிவந்த அந்தணரும், தமக்கொன்றுந் தோன்றவில்லையென்று சொல்லிப் போயினரே? என் ஐயனே இவ்வூரிலேயே வைத்துக்கொண்டோ நான் தனியேயிருப்பது? என்னதாம், ஆயிரம் முகாந்திரங்களால் அவர் நளராஜர்தாமென்று துணிந்தாலும், அவரை நான் நேரிற் பார்க்கவேண்டாமோ? அவரோ உருமாறி யிருக்கிறாராம். அவர் நளராஜர்தாமென்று நான் சொன்னால், ஜனங்கள் ஒப்புக்கொள்ளவேண்டாமா? இல்லேயேல் வசைச்சொல்லுக்கன்றோ இடமாகும்? (ஆலோசித்து) நல்லது. எனக்கொன்று தோன்றுகிறது. அது நிச்சயம் பலித்தே தீரவேண்டும். ஒருவர் எவ்வளவுதாம் உருவத்தில் மாறுதலடைந்தாலும், மதத்தில் மாறுதலடைந்தாலும், தொழிலில் மாறுதலடைந்தாலும், அவர் தம் அன்பில் மாறுதலடைய முடியவே முடியாது.

* "அன்பிற்குமுண்டோ வடைக்குந்தாழார்வலர்
புன்கணீர் பூசறரும்." (௭0)

ஆதலால், உடனேபோய், அப்படியே செய்கின்றேன்.

[போகின்றாள்.



* திருக்குறள்.

## இரண்டாங்களம்.

---

இடம்: குண்டினபுரத்தில் தாமரைக் குள மாளிகை.

காலம்: அந்திமாலை.

பாத்திரங்கள்: ரிதுபன்னன், வாகுகன்.

**ரிதுபன்னன்** :—(தனக்குள்) இஃதென்ன வாச்சரியம்? ஏதோ, சுயம்வரமென்று திருமணப்பத்திரிகை வந்தது; இங்கு வந்து பார்த்தால் ஒரு விசேஷமு மிருப்பதாகக் காணேனே? என்ன? சுயம்வரமாயின், நமக்கு வந்துள்ள திருமுகப்படி நாளைக்கிருக்கவேண்டும். நாளைச்சுயம்வரத்திற்குப் பட்டண மிப்படியா இருக்கும்? நகரம் அலங்கரிக்கப்படவில்லை! வேற்றரசர்களையோ காணேம்! இப்படியா இருக்கும் சுயம்வரமென்றால்? முதல் சுயம்வரத்தின் போது பட்டணம் பட்டபாடென்ன? அரசர்களும் வெகு காலத்திற்கு முன்னமேயே வந்து காத்திருந்தார்கள்? ஒன்றுந் தெரியவில்லையே? (வாகுகனைநோக்கி) உனக்கேதாகிலும் தெரியுமோ, வாகுகா?

**வாதுகன்** :—எதைப்பற்றி?

**ரிதுபன்னன்** :—சுயம்வரத்தைப்பற்றி?

**வாதுகன்** :—ஸ்வாமி! எனக்கொன்றும் தெரியாது. ஆனல், சுயம்வர மிருக்கமாட்டாதென்று தோன்றுகிறது.

**ரிதுபன்னன்** :—ஏன்?

**வாதுகன்** :—சுயம்வரமென்று லிப்படியா இருக்கும்? மேலும், நாம் வந்திருப்பதற்கு, நம்மை அரசன் எதிர்கொண்டழைத்திருக்க மாட்டானு?

ரிதுபன்னன்:—அது நமது குற்றம். நாம் தெரியப்படுத்தவி ல்லை. அது கிடக்கிறது, வாகுகா! நீ குளத்திற்குப் போ யினையே, அங்கு ஒரு பிரஸ்தாபமு மில்லையா?

வாதுகன்:—அங்கு, அரண்மனையதிகாரராமொருவர்—

ரிதுபன்னன்:—(மிக்கவாவலுடன்) ஊ.

வாதுகன்:—அவர் என்னைப்பார்த்து, 'நீர் யார்?' என்றுகேட் டார், 'நான் ரிதுபன்ன மகாராஜாவின் ஸேவகன்' என் றேன். "உங்கள் ராஜா இங்குவந்த விசேஷமென்ன?" என்று கேட்டார். உடனே எனக்குச் சுயம்வரத்தைப்பற் றிச் சந்தேகம் வந்துவிட்டது. அதன்பேரில், 'உங்கள் மகாராஜாவினிடத்தி லொருகாரியமாக வந்திருக்கிறார்' என்று சொல்லிவிட்டேன்.

ரிதுபன்னன்:—அப்படியா? ஆனல், சுயம்வரம் இல்லையெ ன்றே சொல்லலாம்போ லிருக்கிறதே?

வாதுகன்:—ஆம். ஆனல், இஃதெனக்கப்பொழுதே தெரியும்.

ரிதுபன்னன்:—எது?

வாதுகன்—சுயம்வர மிருக்கமாட்டாதென்பது.

ரிதுபன்னன்:—எப்படி யுனக்குத் தெரியும்?

வாதுகன்:—நளனை விவாகஞ் செய்துகொண்டு அவனை யனுப வித்த தமயந்தி வேறொருவரை இச்சிப்பாளா? அந்த நள னைத்தவிர, அவளுக்கேற்ற புருஷன் வேறுகிடைப்ப தரி தன்றோ? அதை அவளும் அறிவாள். அவனிட மிருந்த அன்பின் மிகுதியால், நாட்டையும் குழந்தைகளையும் பிரி ந்து, காடு சென்றவள், இப்பொழுது, அவனைக்காணு மேயென்று, பத்தினிப்பெண்ணாகிய தமயந்தி வேறொரு வரை மணப்பாளா?

ரிதுபன்னன்:—அவன்மாத்திரம் கன்மனதோடு அவளைக்காட்டில்விட்டுப் போகலாம். இவ்வளவு காலம் காத்திருந்தும் அவன் வராமைகண்டு இவள் மாத்திரம் வேறொருவனை மணத்தல் நேரில்லையோ ?

வாதுகன்:—அவன் காரணமென்னே? அதை அவளே யறிவாள்.

ரிதுபன்னன்:—அதனாற்றான் மறுமணஞ் செய்யத் துணிந்தாள். அதுகிடக்கட்டும்; ஆனல், வந்தநிருபம் பொய்யா?

வாதுகன்:—அப்படித்தா னிருக்கவேண்டும். நிஜமாயின், பட்டண மிப்படியாவிருக்கும்? வேற்றரசர்கள் வந்திரார்களா? அரசனும் உங்கள் வரவை எதிர்பார்த்து மரியாதை செய்யானே? நீங்களென்ன சாமானியரா, அரசன் விசாரியாதிருக்க? அவர்போல நீங்களும் ஒரு மன்னர் தாமே? நீங்களென்ன தாழ்ந்தவர்களா ?

ரிதுபன்னன்:—வாஸ்தவந்தான். வேறு யாரப்படிச் செய்திருப்பார்கள்? வாகுகா! எனக்கொன்று தோன்றுகிறது. உன்னபிப்பிராய மென்ன ?

வாதுகன்:—என்ன, ஸ்வாமி ?

ரிதுபன்னன்:—என்னருகே வா. (வாகுகன் அருகே செல்லுகின்றான்) ஒருகால் அந்தத் தமயந்தி——அவள் முதல் சுயம்வரத்தின்பொழுதே என்னிடத்து எண்ணங்கொண்டவள். அப்பொழுதே மாலையை வைத்துக்கொண்டு என்னருகிற் சற்றுத் தயங்கினாள். அப்புறம், ஏதோ நளன் கழுத்திற் போட்டுவிட்டாள்——அவள் இப்பொழுது ஒருகால், அந்த எண்ணத்தை வைத்துக்கொண்டு, எனக்குமட்டும் தனியே கடிதமெழுதி யிருப்பாளோ ?

வாதுகன்:—அவள் எழுதி என்ன செய்கிறது ?

ரிதுபன்னன்:—என்னவோ? அவனென்ன யோசித்திருக்கிறனோ? அவனைக்கண்டாலல்லவோ அது நமக்குத் தெரியும்?

வாகுகன்:—அவனை யினியெப்படிப் பார்க்கிறது?

ரிதுபன்னன்:—நான்தான். அந்தக்கடிதத்தையு மெடுத்துக் கொண்டு நேரப்போகிறேனே? எனக்கென்ன பயமா என்ன?

வாகுகன்:—மெத்த நன்றாயிருக்கிறது தாங்கள் சொல்வது! எனக்கோ இப்பத்திரிகை உண்மையென்று தோன்றவில்லை. எவரோ வம்புக்காக எழுதியிருக்கவேண்டும். அப்படியே உண்மையாயினும் நீங்களோ சக்ரவர்த்தி! நீங்களாபோய்க் கேவலம் ஒரு ஸ்திரீஜாதியைப் பார்க்கிறது? அப்படி ஆத்திரமுள்ளவன் உங்களைத்தான் வந்து பார்க்கட்டுமே? ஒருவேளை, இப்பத்திரிகை பொய்யாயிருந்தது, நீங்களவளிடம்போய் என்னசெய்கிறது? உங்கள் கௌரவமென்னும்? ஆதலால் பதறக்கூடாது. பதறுதகாரியம் சிதறுது.

ரிதுபன்னன்:—வாஸ்தவந்தான். நாம் வந்தது அவளுக்கெப்படித்தெரியும்? அரசனுக்கே இன்னும் தெரியவில்லையே?

வாகுகன்:—நாம் வந்து ஒரு முகூர்த்தகாலந்தானே ஆகிறது? இனிக் கொஞ்சநேரத்தில் அரசனுக்குத் தெரிந்துவிடும். உடனே அவளுக்கும் தெரிந்துவிடுகிறது.

ரிதுபன்னன்:—அஃது எவ்வளவு நாழிகை செல்லுமோ? நல்லது, நீயொன்று செய்கிறாயா?

வாகுகன்:—என்ன?

ரிதுபன்னன்:—நீ தமயந்தியிடப்போய் நான் வந்திருப்பதாகச் சொல்லேன்?

வாதுகன்:—(வருத்தத்துடன்). மறுபடியும் நீங்கள் சொன்னதையே சொல்லுகிறீர்களே? நீங்கள் போவதற்கும், உங்கள் மனிதனை நான் போவதற்கும், என்னவித்தியாசம்? ஓலை பொய்யாயின், அவமானம் உங்களுக்குத்தானே?

ரிதுபன்னன்:—சரி! அப்படியானு லென்னசெய்யலாம்?

வாதுகன்:—செய்கிறதென்ன? இன்று நீங்கள்வந்த சங்கதி தமயந்திக்குத் தெரிந்துவிடும். நீங்கள் நாளைத்தினம் அரசனைப்போய்ப்பார்த்தால், திருமுகத்தினுண்மை வெளிப்படுகிறது.

ரிதுபன்னன்:—ஒருகால் சுயம்வரத்தேதி மாறியிருக்குமோ?

வாதுகன்:—எப்படி யிருந்தாலும், நாளைக்கு அரசனைக்கண்டால் எல்லாந் தெரிந்துவிடுகிறது.

ரிதுபன்னன்:—பத்திரிகை பொய்யாயின், அரசனைப்பார்ப்பது கேலிக்கிடமன்றோ? பாராது போய்விடுவதே நலமாகுமே?

வாதுகன்:—அப்படியன்று, நமக்குப் பத்திரிகை பொய்யென்பதும் நிச்சயந்தெரியாது. மேலும், ஒரு அரசனுடைய தலைநகருக்குவந்துவிட்டு அவ்வரசனைக்காணுமலும், வந்த காரியத்தைப் பாராமலும் செல்வது ராஜதந்திரமன்று. 'நமது பலம் வேவுகாண வந்தாரோ?' என்று ஐயுறலாகும். ஆதலின், நீங்கள் அவரைக்கண்டே போகவேண்டும்.

ரிதுபன்னன்:—நீ சொல்வது நியாயந்தான். நிருபம் உண்மையாயின் பாதகமில்லை. இல்லையேல், அரசன் 'எங்குவந்தீர்?' என்று கேட்டால் என்ன சொல்கிறது?

வாதுகன்:—சொல்வதென்ன? வேட்டைக்குச் சென்றதில் தனித்தேரேறி நெடுந்தூரம் வழிதப்பி வந்துவிட்டோம்.

மெய்வழி இந்நகரத் தருகேதான் கண்டோ மாதலின் ஓரிரவிங்குத்தங்கிக் களைப்பாற எண்ணங்கொண்டோம். வந்தவிடத்துத் தம்மைக்காண விருப்புற்றோம்! என்று சொல்லிவிடுங்களேன் ?

ரிதுபன்னன் :—நல்லது அப்படியே செய்கிறேன். அதுதான் மேல்.

வாதுகன் :—இப்பொழுது யாரேனும் அரண்மனை உத்தியோ கஸ்தர்கள் தங்கள் வரவை விசாரிக்கவரும் தருணமாயி ற்று. ஆதலின், இனித் தாங்கள் சிங்காதன வறையிலிரு ப்பது நயம். யாரடா, மெய்காவலன் ?

மெய்காவலன் வருகின்றான்.

மெய்காவல்:—ஸ்வாமி !

வாதுகன்:—சிங்காதனவறை சுத்தப்படுத்தி யாகிவிட்டதா ? மகாராஜாவினுடைய பிரயாண உடையைவாங்கி வைத்து விட்டுத் திருக்கோல வுடையைத் தரிக்கக்கொடு.

மெய்காவல்:—ஸ்வாமி! உத்தரவு. [போகின்றான்.

ரிதுபன்னன்:—சரி! நான் போய் உடை யுடுத்துக் கொள் கின்றேன். எனக்குக் கொஞ்சம் இளம்பசியா யிருக்கி றது. சீக்கிரத்திலே தேனும் சிற்றுண்டிக் கேற்பாடுசெய்.

வாதுகன்:—இதோ செய்துவிட்டேன். [ரிதுபன்னன் போகின்றான். இஃதென்ன? ஒவ்வொன்றும் புதுமையாகவன்றோ இரு க்கிறது? முதலில், சுயம்வரப் பத்திரிகையைப் பார்த்த தும், நமக்குச் சீற்றம் அதிகமாயிற்று. அவ்வெகுளித்தீ யால் நம்மையே நாம் மாய்த்துக்கொள்ள எத்தனித் தோம். நல்லவேளையாய்ப் பிறகுண்டான சந்தேகத்தாற் றப்பினோம். இங்குவந்து பார்த்ததில், ஐயமே வலியுறும் போலிருக்கிறதே ! இல்லாவிட்டால், வந்த பத்திரிகை

க்கு இப்படிக் கேள்விமுறையற்று கிடக்கும்? இது, நாம் நினைத்தபடி நடமை வரவழைக்கத்தான் போலிருக்கிறது. அதற்கு இவ்வளவு தந்திரம் யார்செய்திருப்பார்? ஆனல் நமது பண்டிதர் மிகபுத்திசாலியாயிற்றே. அவர் தாம்செய்திருக்கக்கூடும். அப்பண்டிதரை இப்பொழுது ஒருமுறை கண்டா லுத்தமம்.——கண்டுதான் என்னலாபம்? நள னென்று நானே ஒத்துக்கொள்கிறதா? ஒருவேளை, அர சன் சொன்னபடி, சுயம்வரம் மாற்றிவைக்கப்பட்டிருந் தது? அல்லது, அவன் கூறியவாறே, அவனைமட்டும் வர வழைத்து மணக்க விரும்பியிருந்தாள்? அப்பொழுதென் னகும்? அப்பொழுது 'நான் நளன்' என்று ஒப்புக்கொ ள்வதே நங்சேட்டிற்காகும். இவ்வுருவத்தோடும், இத் தொழிலோடும் ஒருவன் நளனென்று சொல்கிறனென் றல், 'அவனைக்கொலைசெய்துவிடு' என்று உத்தரவுபிறந் தாலும் பிறந்துவிடும். ஆனல், நம் நிலைமையைக் காட்டி லும் அப்படிச் சாவது நயந்தான். ஆயின், நாமாக ஏன் அதை வருத்திக்கொள்ளவேண்டும்? அவளுக்கேன் அப பாதகத்தைச் சேர்க்கவேண்டும்? வேண்டாம். வந்தது வரட்டும் உள்ளதிலொன்றுங் குறையாது. என்ன ஆன போதிலும், தமயந்தியைப் பிறன்தொடப் பார்ப்பதி ல்லை. அப்பொழுது உயிரை விடுவதுதான் இருக்கவேயி ருக்கிறது. | அதற்குள் அவசரப்படுவானேன்? (சற்றுப்பொ றுத்து) ஐயோ! கஷ்டம்! இன்னும் என் கஷ்டமென்னை விடவில்லையே? முன்னாளில், நான் காதலித்த தமயந்தி யைத் தேவர்களுக்கு இணக்கவேண்டிக் தூதுசெல்ல நேர்ந்தது.. அதுபோதாதோ? இப்பொழுதுமா, நானனு பவித்து, நசைபாராட்டிப் பிரிந்திருக்கும் என் நங்கை

யைப் பிறனொருவனோடு சேர்க்கத் தூதுசெல்லவேண்டும்? 'நீ தமயந்தியிடம்போய், நான் வந்திருப்பதாகச் சொல்லேன்?' என்கிறான்!—அவர் கண்டாரா நம் நிலைமையை? நான் சேவகன்றானே? அவர் சொல்வதைக் கேட்கவேண்டியவன்றானே? நல்லவேளை. நான் சொன்னதைக்கேட்டு என்னைக் காப்பாற்றினாரே? அப்படிப் போகத்தான்வேண்டுமென் றிருந்தாரோ, நான் அவளைப் பாராமலே உயிர் நீங்கியிருப்பேன். நல்லவேளை, என் கண்மணியைச் சுயம்வரகாலத்தி லொருமுறை பார்த்தாவது சாகலாம். ஐயோ! என்னவோ பிதற்றிக்கொண்டிருக்கிறேனே? நாழிகை யாகிவிட்டதே? அரசரோ பசியென்று சொல்லிப்போயினரே? ஆதலின், வந்ததுவரட்டும், நம்வேலையை நாம் பார்க்கப்போவோம்.

[போகின்றான்.



## மூன்றாங்களம்.

---

| | |
|---|---|
| இடம்: | வீமன் கொலுமண்டபம். |
| காலம்: | முற்பகல். |
| பாத்திரங்கள்: | வீமன், ரிதுபன்னன், வீமன் மந்திரி. |

**வீமன்** :—ரிதுபன்ன மகாராஜரே! என்னவிசேஷம்? தங்களுடைய தரிசனம் கிடைக்கவேண்டி நான் செய்த பாக்கியமென்னே? பார்த்து நிரம்ப நாளாகிவிட்டன வன்றோ?

**ரிதுபன்னன்** :—(வாடியமுகத்துடன்) ஆம். நான் வேட்டையின் பொருட்டுக் காட்டிற் சஞ்சரித்துக்கொண்டிருக்கும்பொழுது வழிதவறி, இப்பட்டணத்தருகில் வழிகண்டேனாதலால் இங்குத்தங்கிக் களைதீரலாமென்றுவந்தேன். வந்தவிடத்திற் றங்களைப்பார்க்க விரும்பினேன்.

**வீமன்** :—நிரம்ப சந்தோஷம்! வழிதவறியதனால் தங்களுக்கு அதிக சிரம மேற்பட்டிருப்பினும், எனக்கு அது நன்மையாகவே முடிந்தது, தங்கள் தரிசனத்திற்கிடமானதனால். நல்லது, தங்கள் நாட்டில் நல்ல மழையுண்டா? ஆடு மாடுகளுக்குப் புற் பூண்டுகளும், குடி ஜனங்களுக்குப் பயிர் பச்சையும் அதிகரித்து நாடு செழித்தோங்கி யிருக்கின்றதா? ஜனங்கள் வருணாசிரம தருமப்படி நடந்து வருகிறார்களா? பசுக்கள் அபிவிருத்தியாகி வருகின்றனவா? பிராம்மணோத்தமர்கள் யாகாதி கிருத்தியங்களிற் குறைவன்றி நடந்து வருகிறார்களா?

**ரிதுபன்னன்** :—ஒரு குறையுமில்லாமல், எல்லாஞ் சரிவர நடந்து வருகின்றன.

வீமன் :—நிரம்ப சந்தோஷம்! நல்லது நம்மூர் முழுமையும சுற்றிப் பார்த்தீர்களா? சில தேவாலயப் பிரமாலயங்களும், சில ஆஸ்தானமண்டபங்களும் புதியவாய்க் கட்டப் பட்டிருக்கின்றன. சில சிங்காரத்தோட்டங்கள் புதியவாக ஆக்கப்பட்டிருக்கின்றனவாம். அவைகளையெல்லாம் தாங்கள் சுற்றிப்பார்க்கலாம். நான் கொஞ்சக்காலமாக இவைகளிலெல்லாம் கவனம் செலுத்துகிறதில்லை, மனவுற்சாக மின்மையால். அவைகளெல்லாம், நமது மந்திரியின் மேற்பார்வையி லபிவிருத்தி யடைந்திருக்கின்றன.

மந்திரி :—(ரிதுபன்னனைநோக்கி) இன்றையத் தினம் சாயங்காலம் வேண்டுமானால் அவைகளை யெல்லாம் சென்று கண்ணுறலாம்.

ரிதுபன்னன் :—அப்படியே செய்வோம்.

இரண்டு காவலாளர்கள் தொடர வாகுகன் வருகின்றான்.

ரிதுபன்னன் திகைக்கிறான்.

வீமன் :—இஃதென்ன விசேஷம்? இவன் யார்? இவனை ஏன் கட்டிக்கொண்டு வந்தீர்கள்?

முதற்காவலாளன் :—மகாராஜா! இவன், நேத்து ஒரு ராசா வந்திருக்கிறாங்களே, அவுககூட வந்தவனும்.

வீமன் :— (ரிதுபன்னனைப் பார்த்துக்கொண்டு) சரி! அவன் என்ன செய்தான்?

காவலாளன் :—ஏதோ, நம்ம கொளந்தேங்க இருக்காங்களே, அவுகளெக்கண்டு இவன் அளுதானும். அதுக்கு மோகனம்மா புடிச்சிக்கிட்டு இங்கே இட்டாரச் சொல்லிச்சு.

வீமன் :—என்னடா? நீ சொல்லுவது ஒன்றும் ஏற்படவில்லையடா? உடனேபோய் மோகனம்மாவைக் கூட்டிவாடா.

காவலாளன் :—புத்தி! [போகின்றான்

வீமன் :— (ரிதுபன்னனைப்பார்த்து) இவன் தங்களுடன் வந்தவனா ?

ரிதுபன்னன் :—ஆம். அவன்தான் எனது சமையற்காரனும் சாரதியும்.

வீமன் :—என்ன ! ஒருதொழிலுக் சொருதொழில் சம்பந்த மில்லையே ?

ரிதுபன்னன் :—அவன் சமையல்தான் செய்வான். சமயாசமயத்திற்குத் தேரும் நடத்துவான்.

வீமன்:—அடா, காவலாளி ! அவன் கைக்கட்டை அவிழடா ? அவன் யோக்கியன்போற் காணப்படுகிறான்.

(காவலாளி கட்டையவிழ்க்கிறான்)

(ரிதுபன்னனை நோக்கி) இஃதென்ன சங்கதி ? இதை நீங்களே விசாரித்து விடுகிறீர்களா ?

ரிதுபன்னன் :—அப்படியே செய்கிறேன்.

மோகனம், நளராஜன் மகன், காவலாளி இவர்கள் வருகிறார்கள்.

வீமன் :—ஏன், மோகனம் ! அவனென்ன செய்தான் ? அவனைப்பார்த்தால் நிரபராதியாய்த் தோன்றுகிறானே ?

மோகனம் :—தோன்றும் ! வேஷதாரி. நான் இன்றுகாலையில், நமது தாமரைக்குளத்தைச் சுற்றிப்பார்த்துவிட்டு வந்தேன். திரும்பும்பொழுது நமது குழந்தைகள் அங்குள்ள மாளிகைக்குப் போகவேண்டினார்கள். அப்படியே சென்றோம். அங்கு, இக்கரியன் சமையற்செய்துகொண்டிருந்தான்.

வாதுகன் :—(தனக்குள்) ஏது, நம்மைத்தொலைத்துவிடுவாள்போலிருக்கிறதே ? அட, கஷ்டமே ! சிறைப்படவேண்டியதுவேறு பாக்கியிருந்ததா ? நல்ல குற்றத்திற்காகச் சிறைப்படுகிறோம். சரி. நிச்சயந்தான். நான் இன்று

னென்று தெரிந்துகொண்டுவிட்டாள். நானிருப்பது இடறுகட்டையேயென்று என்னைத்தொலைக்க வழிதேடிவிட்டாள் தமயந்தி. இப்பொழுதுதான் எல்லாத் தந்திரமும் வெளியாயின, போகிறது எப்படியாவது அவளை முன்னிட்டே இறத்தலும் நயந்தான். பலே! நல்லகாலம்! நான் பெற்ற குழந்தைகளை நான் கண்டு தவித்தால், அதற்குத்தண்டனையா? நல்ல வுலகம்! நல்ல நீதி!

மோகனன் :—அப்பொழுது, (ஆண்குழந்தையைச்சுட்டி) இக்குழந்தையைத் தன்னிடத்து வரவழைத்து, ஏதோ சில கேள்விகள் கேட்டுவிட்டு 'ஓ!' என்று அழுதான். உடனே குழந்தைகளு மழக்கிளம்பிவிட்டன. இப்பரிசாரகன் நங்குழந்தைகளைக்கண்டு அழ நியாயமென்ன? அவைகளையும் அழ விடலாமா? அவைகள் அழுவதைக்காண எனக்குச் சகிக்கவில்லை. அதனாற்றான், அவனைப்பிடித்து வெளிப்படுத்தித் தக்க தண்டனைக்குள்ளாக்க வேண்டுமென்று எண்ணினேன்.

வீமன் :—இவ்வளவுதானே? நல்லது, ரிதுபன்னமகாராஜரே! இப்பொழுது இந்த விஷயத்தில் விசாரிக்கப்பட வேண்டியவர்கள், உமது பரிசாரகனும், என் குழந்தையும்; 'கேட்ட கேள்விகள் யாவை?' என்று என்குழந்தையையும், 'அவைகளைக்கண்டு ஏன் அழுதான்?' என்று அப்பரிசாரகனையும் விசாரித்து விடுங்கள். தீர்மானம் சொல்லிவிடலாம்.

ரிதுபன்னன் :—நல்லது. அப்படியே செய்கிறேன். ஏனடா குழந்தாய்! உன்னை அவன் (வாகுகனைச்சுட்டி) என்னடா கேட்டான்?

குழந்தை :—நீ ஆருன்னு கேட்டான்.

ரிதுபன்னன் :—நீ என்ன சொன்னாய்?

குழந்தை :—நான் தொரராஜான்னு சொன்னேன்.

ரிதுபன்னன் :—அப்புறம்.

குழந்தை :—ஒங்கப்பா ஆருன்னு கேட்டான்.

ரிதுபன்னன் :—ஊ.

குழந்தை :—நளமகாராஜான்னேன்.

ரிதுபன்னன் :—அப்புறம் ?

குழந்தை :—ஒங்கப்பா எங்கே ? ஒங்க ஊரெதுன்னு கேட்டான். எங்கப்பா எங்கேயோ ? எங்க ஊரு மாவிந்த நகரமின்னேன்.

ரிதுபன்னன் :—உனக்கு இதெல்லாம் யாரப்பா சொல்லிக் கொடுத்தார் ?

குழந்தை :—எங்க மோகனம்மா.

ரிதுபன்னன் :—இன்னும் உன்னை என்ன கேட்டான் ? நீ என்ன சொன்னே ?

குழந்தை :—நீயேன் அங்கெபோகல்லே ? ராஜாக்குப் பொறந்தாட்டு ஒங்க ஊரெ வேறொருத்தங்கிட்ட விட்டேட்டு, நீ இன்னொருத்தன் நாட்டுலே இருக்கிறையே, ஒனக்கு வெக்கமில்லையா ? இன்னு கேட்டான். எனக்கு ரோஷமாயிருந்தது. நான் அழுதேன்.

வீமன் :—சரி ! இனித் தங்கள் பரிசாரகனை விசாரிக்கலாம்.

ரிதுபன்னன் :—அடா, வாகுகா ! நீ யந்தக் குழந்தைகளைக்கண்டு அழுததுண்டா ?

வாகுகன் :—உண்டு, ஸ்வாமி.

ரிதுபன்னன் :—அக்குழந்தைகள் அரண்மனைக் குழந்தைகளென்று உனக்குத் தெரியுமா தெரியாதா ?

வாதுகன் :—தெரியும், ஸ்வாமி.

ரிதுபன்னன் :—தெரிந்தும், அக்குழந்தைகளோடு நீ பேசலாமா? அவைகளைத் தொடலாமா?

வாதுகன் :—குழந்தைகள் லக்ஷணமாக விருந்தால், பலரும் தொட்டுப் பேச்சிற்கிழுப்பது ஸகஜந்தானே? குழந்தைகளுக்குக்கூடவா அவ்வளவு மரியாதை ஏற்பட்டுவிடும்? அப்படியும், நான் மரியாதைத் தப்பாக ஒன்றையும் செய்யவில்லையே?

வீமன் :—(மந்திரியிடம் தனியே) பார்த்தீரா, மந்திரி? இவனைக் கண்ட உடனேயே எனக்கு என்னமோபோலிருந்தது. அப்போழுதே கவனித்தேன். இக்குற்றவாளியினுடைய பார்வை, தேக அமைப்பு, பேசுந் தோரணை, குரல் இவையனைத்தும் சரியாய் நம் நளராஜனுடையன போலவேயிருக்கின்றனவன்றோ?

மந்திரி :—எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. ஆனால், இப்படி உலகத்தில் ஒருவரைப்போல் அநேகரிருப்பது ஸகஜம்.

ரிதுபன்னன் :—நீ அவர்களைக்கட்டிக்கொண்டு அழுவானேன்?

வாதுகன் :—அக்குழந்தைகளைப் பார்த்ததும், என் குழந்தைகள் ஞாபகம் வந்தன. அதனால், விசனித்தேன்.

ரிதுபன்னன் :—உனக்குப் பெண்சாதி பிள்ளைகளிருக்கிறார்களென்றே நீ சொன்னதில்லையே? அவர்களைப் பார்க்க வேண்டுமென்று நீ ஒரு முறைகூடப் போனதுமில்லையே?

வாதுகன் :—நான் அதற்குத்தகுந்த நிலைமையிலில்லை. நான் போகவில்லை.

ரிதுபன்னன் :—ஆனால், உன்மனைவியும், குழந்தைகளும் உயிரோடிருக்கின்றார்களா?

வாதுகன் :—ஆம். இருக்கின்றார்கள்.

ரிதுபன்னன் :—நீ அவர்களை விட்டு எவ்வளவுகால மாகிறது?

வாதுகன் :—ஏறக்குறைய ஆறுமாத மிருக்கலாம்.

ரிதுபன்னன் :—எவ்வூரிலிருக்கிறார்கள்? நீ அவர்களை எவ்வூ ரிற் பிரிந்தாய்? உன் பெண்சாதியின் நாமதேயமென்ன?

வாதுகன் :—எங்கள் ஜாதியிற் பெண்சாதியின் பெயரைப் புருஷர்கள் சொல்லக்கூடாது.

ரிதுபன்னன் :—நல்லது, அவர்களிப்பொழு தெங்கிருக்கிறார் கள்?

வாதுகன்:—இக்கேள்விக்கு நான் உத்தரம் சொல்லமாட்டேன்.

ரிதுபன்னன் :—ஏன்?

வாதுகன் :—எனக் கிஷ்டமில்லை.

ரிதுபன்னன் :—உன்னூ ரெது?

வாதுகன் :—மாவிந்த நகரம்.

ரிதுபன்னன் :—நல்லது, அவர்களை எவ்விடத்தில் விட்டுப்பி ரிந்தாய்?

வாதுகன் :—இதற்கு விடையளிக்க வேண்டியது அவசியந் தானோ?

ரிதுபன்னன் :—அவசியம். இல்லாவிட்டால் உன்னை நான் தண்டித்து விடுவேன்.

வாதுகன் :—என் மக்களை மாவிந்த நகரத்திலும், என்மனைவி யை நடுக்காட்டுப் பாழ் மண்டபத்திலுமையா! (மூர்ச்சித் து விழுந்துவிட்டான்; பின்பக்கத் தறையிலிருந்து கேட்டுக் கொண் டிருந்த தமயந்தி, "நாதா நாதா" என்றலறிக்கொண்டு ஓரேபாய்ச் சலாய்ப் பாய்ந்து நளராஜனைக் கட்டிக்கொண்டு அழவும் எல்லோரும் பிர

மித்து நிற்கிறார்கள். காஞ்சனமாலை முதலியவர்களும் செய்திகேட்டுவந்து விட்டார்கள்).

**தமயந்தி** :—என் நாதா! என் நாதா!! நாதா!!! (புலம்புகிறாள்)

அன்றனமுரைத்த வும்மழகினை நினைந்தன்பு
கொண்டே னதற்கழுவெனோ?
அமரர்சட மாளாகி யவர்தார மாகென
வழைத்தீ ரதற்கழுவெனோ?
சென்றுமது திருநகர மதனிலெனை யாண்டுய்த்த
சீர்மையை நினைந்தழுவெனோ?
சேனைபரி வாரமொ டனைத்தையு மிழந்தவொரு
செய்தியை நினைந் தழுவெனோ?
குன்றவுயிர் குழறமொழி குதலைமொழி மதலைபிரி
குறையதற் கின்றழுவெனோ?
குடிகேட னரசனொரு நொடியேனு மவனுறைதல்
கூடா தெனற்கழுவெனோ?
என்றுயர மதைதீரு மன்றுசகி யாமலெனை
யகென் றதற்கழுவெனோ?
எதிலரை மானநம திருவர்தம துடையுமன்
றேகமாச் சென்றழுவெனோ? (அக)
வனமதி லுமைப்பிரிந் தெனதுயிர் துடிக்கவே
வாடினதை யெணியழுவெனோ?
வஞ்சவுர கத்தினுறு வாயினிற் சிக்குண்ட
வாதையினை யெணியழுவெனோ?
உனதாணை சடவாத வனவேட னுமெனக்
குற்றதை நினைந்தழுவெனோ?
உறவின ரகத்துநா னூழியப் பெண்ணென
வுறைந்ததை நினைந் தழுவெனோ?
மனமது துடிக்கவே மனையிலெனை வைத்தழும்
மாதாவை யெணியழுவெனோ?
மாநிலமு மவமென மனத்துன்பு குடிகொண்ட
மாதந் தையர்க்கழுவெனோ?

புனர் விவாகம்புரிய வேண்டுமென வெளியிட்ட
பொய்யுரை யதற்கழுவெனோ?
புதியவுரு வோடுமைப் போற்றவே நேரிட்ட
பொல்லா வினைக்கழுவெனோ? (அஉ)

(தமயந்தி அடித்துக் கீழே விழுகின்றாள், நளன் மூர்ச்சை தெளிந்தெழுகின்றான்).

வீமன் :—(நளனைக் கைகொடுத்தெடுத்தூக்கி) நீர் யார்? உள்ளதை உள்ளபடி விள்ள வேண்டும்.

வாதுகன் :—ஸ்வாமி! நான்நிடதநாட்டை ஆண்டுவந்த நளன். இக்காரிகையைக் கைப்பிடித்த கணவன் நானே.
(வீமன் நளனைக் கட்டிக்கொண்டு கண்ணீர் விடுகின்றான்: ரிதுபன்னன் பிரமித்து விழிக்கிறான். அவன் தேகம் நடுங்குகிறது. சபையிலுள்ள மற்றவர்கள் கண்ணீர் சொரிகிறார்கள். காஞ்சனமாலையும், மோகனமும் தமயந்திக்குச் சயித்தியோபசாரம் செய்கிறார்கள்).

வீமன் :—எனதருமை மருகரே! தங்களுக்கும் இக்காலமா? இருந்தாலும் பாதகமில்லை. என் குழந்தை—என் தமயந்தி நோற்ற நோன்பிற்கு நீர் இம்மட்டாகிலும் வந்தீர். எனக்கு நிரம்ப சந்தோஷம். என் ஜன்மம் இன்றே கடைத்தேறிற்று. நானும் பிள்ளையில்லாப்பெரும்பாவி——நான் பாவி, என் பிள்ளைக்குச் சமானமென்று தங்களைக் கருதினேனே, அதனாற்றான் தங்களுக்கு இவ்வாபத்து வந்ததோவென் றெண்ணினேன். நல்லவேளை, நான் போன ஜன்மத்திற் கொஞ்சம் பூஜை செய்திருக்கிறேன், அது பலித்தது. ஆதலின், இன்றே உமக்கு இந்நாட்டைப் பட்டங்கட்டி வைத்துவிட்டு நான் தவமியற்றச் செல்கின்றேன். (தமயந்தி மூர்ச்சை தெளிந்து விழித்துப்பார்க்கிறாள்)

காஞ்சனமாலை :—என் குழந்தாய்! இன்றே உன்விருப்ப மீடேறிற்று. உன்விரதம் முடிந்தது. உன்பூஜை பலித்தது. என் கண்மணி! 'உன்னையும் நாங்கள் மறுபடி, முன்போல, உன் கணவன் பக்கத்தில் அலங்கரித்து நிற்கக்

காண்போமா ?' என்றெண்ணியிருந்தோம். எந்தத்தெய்வமோ எம்பக்கலிரங்கி இக்காரியம் செய்தது.

வீமன்:—இங்கேவா காஞ்சனம்! நங்குழந்தையைக் கூட்டிப்போய், அதிசீக்கிரத்தில் நெடுநாளாய் மாசுபடிந்து கிடக்கும் தேகத்தை நீராட்டிச் சடையிட்ட குழலையுந் திருத்திக் கோலஞ்செய். இன்றைக்கே நல்ல முகூர்த்தம் பார்த்துப் பட்டாபிஷேகஞ் செய்ய வேண்டும். போங்கள் சீக்கிரம். மோகனம்! தாமதம் வேண்டாம்.

மோகனம் காஞ்சனமாலை, தமயந்தி, நளராஜன் குமாரன் இவர்கள் போகிறார்கள்.

மந்திரி! நமது ஆசார வாசலிலுள்ள ஜயபேரிகையையடிக்கச் செய்யும். மங்களவாத்தியங்கள் முழங்கச்செய்யும். நளராஜன் வந்துவிட்டாரென்றும், அவருக்கு இன்றையத்தினம் இந்நாட்டைப் பட்டங்கட்டப்போகிறோமென்றும், ஊர்முழுவதும் பறையறையச்செய்யும். மந்திரி! ஊர் முழுதும் மங்களதோரணங்கள் கட்டி அலங்கரிக்கட்டும். பட்டத்து யானை, குதிரைகள் தக்கவாறு அலங்கரிக்கப்படட்டும்.

மந்திரி:—அப்படியே, ஸ்வாமி! யாரடா காவலாளிகள்? வாருங்களடா இங்கே. [மந்திரியும், காவலாளிகளும் போய்விடுகிறார்கள்.

வீமன்:—(ஆசனத்திலுட்கார்ந்து) நளமகாராஜரே! இவ்வாசனத்திலமரும். என் தம்முடைய சரீரம் இவ்விதம் கறுத்திருக்கிறது? சுகக்குறைவினாற்றானோ?

நளன்:—அன்று. ஒரு தேவதையின் அநுக்கிரகத்தினால் இப்படியாயிற்று.

ரிதுபர்ணன்:—இவ்விதம் உருக்கெடுவது கூடவா தேவாநுக்கிரகம்?

**நளன்:**—அந்தத்தருணத்திற்கு அஃது அநுக்கிரகந்தான். அல்லது, என்னுருவுடனே நான் வந்திருந்தால், தாங்களென்னைப் பரிசாரகனாக ஏற்றிருப்பீர்களா?

**வீமன்:**—ரிதுபன்னமகாராஜரே! உம்முடைய பாக்கியமே பாக்கியம்! சக்கிரவர்த்தியாகிய நளமகாராஜரை, அவருடைய தீனதசையில் வைத்தாதரித்த பெருமை பெற்றீரே? அந்தப்பாக்கியமெனக்குக் கிடைக்கவில்லையே?

**ரிதுபன்னன்:**—ஐயோ! நான் அபராதியாகவன்றோ ஆனேன்! நளராஜரென்றறியாது போனேனே! எவ்வளவோ கொடுமையாய் அவரை நடத்தினேனே! இப்பொழுது, என்மனந்துடிப்பது எனக்கன்றோ தெரியும். நளராஜர் என்னைப் பூரணமாய் மன்னிப்பாரோ?

**நளன்:**—மகாராஜரே! அஃதென்ன நீரப்படிச் சொன்னீர்? உம்மைப்போன்ற நீதிமன்னரும், சேவகர்களை வைத்தாதரிப்பவரும், கிடைப்பதரிது. அதனாலன்றோ என் துன்பத்தையும் மறந்து பொழுது போக்கிவந்தேன். ஆதலின், நான் உமக்கு நிரம்பக் கடமைப்பட்டவன். உம்மை நான் மன்னிக்கவேண்டியதென்னவிருக்கிறது? மனிதர்கள் என்றிருந்தால் ஏதேனும் தவறிருப்பது சகஜந்தானே? ஆதலாற் கவலையுறவேண்டாம். உம்முடைய பக்ஷத்திற்கு உம்மை நான் ஒருபோதும் மறவேன்.

**ரிதுபன்னன்:**—எனக்கும் பேச வாயில்லை. இத்தகைய பெருமை வாய்ந்தவள்ளலைத் தகுந்தபடி நடத்தத் தவறினேனே!

**வீமன்:**—நல்லது. நளராஜரே! இப்பொழுது இந்தப்புதிய உருவம் தேவையில்லையே? இதைப்போக்கிக்கொள்ளலாயோ?

**நளன்:**—போக்கிக்கொள்ளலாம். இரண்டு நிமிஷகாலம் அநுமதி கொடுத்தால், உருவை மாற்றி வருவேன்.

வீமன்:—ஆக்ஷேப மென்னவந்தது? எப்படியாவது தங்களுடைய சாந்தியோடுகூடிய சரீரத்தைக் கண்டுகளிக்கக் காமுறுகிறோ மன்றோ?

நளன்:—ஆனால், இதோ போய்வருகிறேன். [நளன்போகின்றான்.

ரிதுபன்னன்:—இப்படியும் காலம் வருமா மனிதர்களுக்கு? நளராஜர் நீதிமன்னராவரே, அவருக்கிப்படி நேரச்காரணமென்ன?

வீமன்:—இப்பிறப்பில் நீதிமன்னர்தாம். முற்பிறப்பிலென்ன வினை இயற்றினரோ?

ரிதுபன்னன்:—எனக்கு இப்பொழுது தேகம் நடுங்குகிறதே! அபராதியானேனே!

வீமன்:—அப்படியென்ன நீங்கள் அபராதியாயிருக்கக்கூடும்? அவரைச் சேவகராகவைத்து வேலை வாங்கினதுதானே?

ரிதுபன்னன்:—இல்லை. வேறு விஷயமுமுண்டு.*

வீமன்:—என்ன இருந்தாலும், அவரவைகளைப் பாராட்டார்.

* "இன்னா செய்தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு?" (அரு)

என்னும் விரதம் பூண்டவாராதலின் நீ ரஞ்சவேண்டாம்,

சுயரூபத்துடன் நளராஜன் வருகின்றான்.
வீமனும் ரிதுபன்னனும், எழுந்து அழைத்து அருகிலுள்ள
சிம்மாதனத்தி லிருத்துகிறார்கள்.

நளராஜரே! இப்பொழுதுதான் என் கண்களும், மனமுங் குளிர்ந்தன. இக்கோலத்தைப்பார்த்த கண்ணால் அக்கோலத்தையும் பார்க்க நேர்ந்ததே!

ரிதுபன்னன்:—வாஸ்தவமாய் இவ்வுருவைக்கண்டால், யார் தாம் தம்மிடத்து வேலைக்கமர்த்திக் கொள்வார்?

---

* திருக்குறள்.

**வீமன்:**—யாரடா, சேவகன்?

சேவகன் வருகின்றான்.

**சேவகன்:**—ஸ்வாமி!

**வீமன்:**—அந்தப்புரத்திற்குப்போய், என் குழந்தை, அவள் தாய் முதலியவர்களை உடனே கூட்டிவா. எமது ஐயருருவைக் கண்டு களிக்கட்டும்.

**சேகவன்:**—ஸ்வாமி! (போகின்றான்

வேறொருசேவகன் வருகின்றான்.

**சேவகன்:**—மகாராஜா! நிடதநாட்டு மந்திரியாம் ஒருவர். கையிற் கிரீடம் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். நளமகாராஜரைப் பார்க்கவேண்டுமாம். (நளன் விம்மிதமாயினன்)

**வீமன்:**—உடனேவரவிடு. [சேவகன் போகின்றான்.

மதியூகி நான்கு அந்தணர்களுடன் வருகிறு

வரவேண்டும் மதியூகியாரே!

**நளன்:**—(ஆசனத்தை விட்டெழுந்து மந்திரியைத் தழுவிக்கொண்டு) மந்திரியாரே! என்ன விசேஷம்? நமது குடிகள் ஒரு குறையுமின்றி வாழ்ந்து வருகிறார்களா? (கண்ணீருடன்) தங்கள் குடும்பத்தாரனைவரும் க்ஷேமமா?

**மதியூகி:**—மகாப்பிரபோ! எல்லோரும் சௌக்கியமாயிருக்கிறார்கள். என்ன சுகமிருந்தும், தாயைப்பிரிந்த கன்றுகள்போல் (கண்ணீர் விட்டு) தம்மைப்பிரிந்து வருந்துகின்றார்கள் குடிஜனங்கள். ஏதோ, எல்லாருடைய பிரார்த்தனையாலும், பாக்கியத்தாலும், தங்களையே மறுபடியும் பெற நேர்ந்தது. (எல்லோருமாச்சரியப்படுகிறார்கள்).

**நளன்:**—என்ன சமாசாரம், மந்திரி? தாங்கள் சொல்வதொன்றும் விளங்கவில்லையே? கையிற் கிரீடம் ஏது?

மதியூகி :—அதுதான், தங்களுக்குத் தரித்துத் தங்களைக் கூட்டிக்கொண்டுபோக. உங்கள் வரவை யெதிர்பார்த்திருக்கிறார்கள் குடிகள். பட்டணமுழுமையும் விநோதமாய்ச் சிங்காரிக்கப்பட்டிருக்கின்றது.

நளன் :—எனக்கெப்படிக் கிரீட மளிப்பது?

மதியூகி :— புஷ்கர னிறந்து விட்டான்.

வீமன்-ரிதுபன்னன் :—இறந்துவிட்டாரா ? எப்பொழுது ?

நளன் :—(கண்ணீர்விட்டு) அடாடாடாடா ! எப்பொழுது, மந்திரி ?

மதியூகி :—இரண்டு மாதகால மாகிறது.

நளன் :—இப்பொழுது யார் ஆண்டு வருகிறார் ?

மதியூகி :—நான்தான் பார்த்துவந்தேன். தாங்களிருக்குமிடந் தெரியாததனால்.

நளன் :—அஃதே னப்படி ? புஷ்கரன் புத்திர னெங்குபோனான் ?

மதியூகி :—தாங்கள் வனம்போன வுடனேயே அவனிறந்துவிட்டான்.

நளன் :—அடாடா !

ரிதுபன்னன் :—அநியாயஞ் செய்பவர்க ளிப்படித்தான் போவார்கள்.

நளன் :—அப்படி யவரென்ன அநியாயஞ் செய்தார் ? ஏன், மந்திரி ? நமதருமைக் குடிகளை ஏதேனும் வருத்தினரோ ?

மதியூகி :—அவருக்கு ஆளுந்திறனில்லை யாயினும், குடிகளை வருத்தவில்லை.

நளன் :—சரி ! நீர் எனக்குக் கிரீடமளிப்பதற்குக் காரணம் ?

மதியூகி:—புஷ்கரனிறக்குமுன், 'இந்த ராச்சியத்தை நளராஜனுக்குக் கொடுத்துவிட்டேன்' என்று எழுதிவைத்தார். ஜனங்களும் அநுமோதித்து ஆரவாரித்தார்கள். அன்று முதல் தாங்களிருக்குமிடந் தெரிந்துகொள்ள முடியவில்லை. சில தினங்களுக்குமுன், தாங்கள் இந்நாட்டில் வந்திருப்பதாகக் கனவுகண்டேன். அத்தகைய கனவு நமது மற்ற மந்திரிகளுக்கும் நிகழ்ந்ததனால், உண்மையாயிருக்குமென் றெண்ணிவந்தேன்.

வீமன்—ரிதுபன்னன்:—பகவானருளாகு மிது.

நளன்:—என்ன ஆச்சரியம்? கொஞ்சநாழிகைக்குமுன் நானிருந்ததற்கும், இப்பொழு திருப்பதற்கும் எவ்வளவுவித்தியாசம்? எனக்கொன்றும் பேசவே தோன்றவில்லை. எல்லாம் ஈசன் கருணையே! இது யாராலறியற்பாலது? நல்லது, மதியூகியாரே! புஷ்கரனுடைய குடும்பத்தார்கள் நமதரண்மனையிற்றாமே இப்பொழுது மிருக்கிறார்கள்? அவர்கள் சுகமே யிருக்கிறார்களன்றோ?

மதியூகி:—அவர்கள், புஷ்கரன் கட்டளைப்படி, அவர்களுடைய நாடு சென்று விட்டார்கள், பிரபோ!

நளன்:—அப்படியா? அந்நாட்டை யார் காப்பாற்றிவருகிறார்! அதற்குத் தகுந்தவரை யேற்படுத்த வேண்டியது நமது கடமையன்றோ?

மதியூகி:—ஸ்வாமி! அவ்வரசனுடைய பழைய மந்திரியே ஒப்புக்கொண்டு காத்து வருகிறார்.

நளன்:—சந்தோஷம்.

வீமன்:—நளமகாராஜரே! ரிதுபன்னராஜரே! நாம் நம் நாட்டிற்கு அரசராக நளராஜருக்குப் பட்டங்கட்ட ஏற்பாடு செய்தபொழுதே, அவருடைய இழக்கப்பட்ட பட்டமும் லபித்தபடியால்; இதையே நற்சகுனமாகக் கொ

ண்டு. இப்பொழுதே இரண்டு நாடுகளுக்கும் அரசராக இவருக்குப் பட்டங்கட்ட வேண்டுமென்று நினைக்கிறேன். ஆதலால், யாரடா! சேவகன்! சீக்கிரம் தமயந்தியை, அலங்கரித்து வரும்படி அவள் தாயினிடத்தும், மோகனத்தினிடத்தும் சொல்லிவா, சீக்கிரம்.

சேவகன்போகின்றான்.

யாரடா! மந்திரியைச் சீக்கிரம்வரவழை. நமது குலகுருவை யெழுந்தருளச்செய்யவேண்டும். பிராம்மணோத்தமர்களை யழைத்து வரவேண்டும். சீக்கிரம் பட்டாபிஷேகம் நடக்கவேண்டும்.

ஒருபுறம்: காஞ்சனமாலை, தமயந்தி, மோகனம் குழந்தைகள் இவர்களை, மறுபுறம் கிரீடத்தோடு மந்திரியும், பிராம்மணர்களோடு குலகுருவும் வருகின்றார்கள்.

எல்லோரும் வரவேண்டும்! குருஸ்வாமியாரே! நமஸ்கரிக்கின்றேன்.

குருஸ்வாமி:—ஸர்வஸாம்ராஜ்ய, ஸர்வஸித்திப்ராப்திரஸ்து!

வீமன்:—குருமகராஜ்! இப்பொழுது நல்லமுகூர்த்தந்தானே? மகுடாபிஷேகஞ் செய்யலாமன்றோ?

குருஸ்வாமி:—(யோசித்து) ஆகா! திவ்யமானவேளை. இப்படித் திடீரென்று நல்ல முகூர்த்தம் கிடைப்பது மிகவருமை.

வீமன்:—நல்லது குருஸ்வாமிகளே! தங்கள் ஹஸ்தத்தினாலேயே, இவ்விரண்டு கிரீடங்களையும், ஒவ்வொன்றாய் நளராஜன் சிரத்திற் றரித்து, 'நீடூழி நீதிமன்னனாக' வாழும்படி ஆசீர்வதியுங்கள்.

(குரு மகுடங்களைச் சூட்டுகின்றார். அந்தணர்கள் வேதகோஷஞ் செய்கிறார்கள். பெண்கள் மங்களம் பாடுகிறார்கள். வாத்திய ஜாலங்கள் கோஷிக்கின்றன. கட்டியக்காரர்கள் கட்டியங்கூறி, 'ஜய ஜய விஜயீபவ என்று ஆரவாரிக்கிறார்கள்.)

குருஸ்வாமி:—ஏ! நளராஜனே! இனி நீர் ஒரு குறையுமின்றி ஸ்ரீதேவி பூதேவிகளுக்குச் சமானமான தமயந்தியையும்

இவ்விரண்டு ராஜ்யங்களையும் பெற்று, நெடுங்காலம் நீதி மன்னனெனப் புகழ்பெற்று வாழ்வீராக! இவ்விரண்டு ராஜ்யங்களையு மாள்வதில், ஓர் ஆறுமாதகாலம் ஒரு நகரத்தையும், மற்றோ ராறுமாதகாலம் மறுநகரத்தையும், தலைநகராக்கிகொண்டு அரசு புரிவீராக!

**அந்தணர்கள்:**—ததாஸ்து! ததாஸ்து!! (பிராம்மண ஸ்த்ரீகள் வாழ்த்துப்பாடுகின்றார்கள்.)

அந்தரத்தில்——சனீசுவரபகவான் வருகின்றார்

**சனி:**—ஏ! நளமகாராஜனே! ஏ! நளமகாராஜனே!!

(எல்லோருந் திடுக்கிடுகிறார்கள்)

**நளன்:**—(திடுக்கிட்டு உயரப்பார்த்து) உயரவிருந்து யாரோ கூப்பிடுகிறார்போலிருக்கிறதே? யார் தெரியவில்லையே?

**சனி:**—நான்றான் சனீசுவரன்! (எல்லோரும் ஆச்சரியத்துடன் ஆகாயத்தைப்பார்க்கிறார்கள்)

**நளன்:**—(ஆகாயத்தைப்பார்த்து, பிரபோ! வந்தனம் செய்கின்றேன்.

**சனி:**—கல்யாண முண்டாவதாக! ஏ! நளராஜரே! உம்முடைய கோட்டை நீர் துறக்கும்படி செய்து, உமது பெண்டுபிள்ளைகளையும் உம்மைவிட்டுப் பிரித்துக் காட்டில்விடுத்து, உம்மை இழிந்த நிலையிலும் கொண்டுவந்து வைத்தவன் நானே. அதற்கு உம்மிடத்திருந்த குற்றம் நீர் சூதாட்டத்திற் கொண்ட அளவற்ற ஆசையே! தமயந்தியிட மிருந்த குற்றம், தன்னழகிற்கும், தன்புருஷனுடைய அழகு, ஆண்மைகளுக்கும் ஈடு இவ்வுலகி லொருவருமிலர் என்னும் இறுமாப்பேயாம். என்னாற்றுன்பமடையாதா ரொருவருமிலர். ஆயினும், என்னாற் பீடிக்கப்படும்பொழுதும், உம்போல் வாய்மையுட னிருந்தவரையும், உம்மனைவியைப்போல், சலித்தலில்லாது கற்பைக்

காத்தவரையும் நான் கண்டிலேன். ஆதலின், இனி நீங்கள் சூதாட்டத்தையும், இறுமாப்பையும் விட்டுவிடுங்கள். உமக்கு உமது நாட்டைக் கொடுக்கும்படி புஷ்கரனைத் தூண்டினவனும் நானே. இனி, நீங்கள் ஒரு குறையுமின்றி க்ஷேமமா யிருப்பீர்கள்!

(சடையோர்கள் மூக்கில் விரலைவைத்துத் திகைக்கிறார்கள்)

**நளன்:**—(தேகாநுக்கத்துடன்) ஏ! சனிராஜனே! எங்களுடைய பிழைகளுக்காகத் தாம் புகட்டிய புத்தியைப்பெற்றுப் பேறடைந்தோம். என் பத்தினியின் பதிவிரதா தர்மத்தைக்கேட்டுப் பரவசனாயினேன். மக்களைக்காணவும் மகிழ்வடைந்தேன். நாடு தந்ததற்கும் நமஸ்கரிக்கின்றேன்.

**சனி:**—இத்தனையும் உமக்கு ஈசனுலேற்படுத்தப் பட்டவை. உம்மிடத்து எனக்கு அதிகசந்தோஷமுண்டாகியிருப்பதனால், வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்ளும், தருகிறேன்.

**நளன்:**—காகவாகனரே! உம்பெருமைக் கோரளவுண்டோ? உம்மை அற்பனாகிய நானோ புகழ வல்லேன்? உம்மைத் தரிசிக்கும் பாக்கியமும் கிடைத்து, உமதருளும் கிடைப்பது நிச்சயமேயாகில், இப்பொழுது நான் பட்ட பாட்டைப் பார்க்கிலும் பல்லாயிரம் மடங்கும் படச்சம்மதிப்பேன். இனி யெனக்கென்னவரம் வேண்டியிருக்கின்றது? ஆயினும், நீர் ஆணை யிடுவதனாற் கேட்கின்றேன்.

மனுவுமது திருவடிக் கொன்றுள தலைமையென்னை
மறவா திருக்க வேண்டும்
மதிவேண்டு மென்னாளு மாயக் கவற்றினையு
மதியா திருக்க வேண்டும்
அனுதினமு மரியபெரி யோர்தமைக் கண்ட வுடனடிபணிந் திடவும்வேண்டும்

அருள்வேண்டு முமையிகழு மதமர்தமை யொருநாளு
மணுகா திருக்க வேண்டும்
பனுவல்கொண் டுமதுபுகழ் பாடவே வேண்டுமிப்
பாழ்ப்பிறவி தொலைய வேண்டும்
பரிவோடு மெனதுகதை பாடிப் படிப்பவர்
படிக்கவுடன் கேட்ட பேர்க
ளெனுமிவர் தமக்குந்து மருள்கொடுத் தேநாளு
மேங்கா தளிக்க வேண்டும்
எதிராளி யெவரேனு மதிகாரி நிலைபூணு
மேமரா சனுக் கநுசரே. (அச)

சனி:—அவ்விதமே அநுக்கிரகித்தேன். போய்வருகிறேன்.

[சனீசுவரன் அந்தர்த்தான மாகின்றான்.

நளன்:—பார்த்தீர்களா, சபையோர்களே? எனக்கு இவ்வளது தூரம் நேர்ந்ததற்குக் காரணம் தெரியாதிருந்ததே! இப்பொழுது தெரிந்து கொண்டோம். என்னிடத்து வேறொரு குற்றமுமில்லையாம். நான் பட்ட அளவற்ற கஷ்டத்திற்கும் காரணம் சூதாட்டத்திலெனக்கிருந்த ஆசையொன்றேயாம்! இதனால், நாம் சாமானியப் பொழுதுபோக்கென் றெண்ணக்கூடிய சூதாட்டம் கூடாதகாரியமென்று தெரிகிறது. வேறொரு குற்றமில்லாமல், இறுமாப்பே காரணமாம் தமயந்தியின் துன்பமனைத்திற்கும்! பார்த்தீர்களா சூதாட்டத்திலும், இறுமாப்படைவதிலு மிருக்கும் தீமைகளை? நல்லவேளை, வாய்மையும், கற்பும் முறையே என்னையும், தமயந்தியையும் காப்பாற்றினவாம்! வாய்மைக்கும், கற்பிற்கும் இவ்வளவு சிறப்பிருக்கிறதென்றாகிறதல்லவா? ஆதலால், சபையோர்களே! சூதாடுதல், இறுமாப்படைதல் முதலிய தீயவொழுக்கங்களைவிடுத்து, வாய்மையையும், கற்பையும், கடைப்பிடியுங்கள். 'நாம் இஷ்டப்படி நடக்கலாம். யார் என்னசெய்வார்?' என்றெண்ணுதீர்கள், தவறுகளனைத்தையும் கவனித்துத் தக்கபடி தண்டிக்கக் கலிபுருஷனை

யும் நியமித்திருக்கிறான் ஜகதீசன். ஆதலின், உலகத்தீர்களே! என் நிலைமையினின்றும் நீதி கற்றுக்கொள்ளுங்கள். இவ்விதம், உலகத்தில் நடக்கும் தீச்செயல்களை அப்போதைக்கப்போது கடிந்து, நல்லொழுக்கத்தை நிலைநாட்டவேண்டித் தக்க வேற்பாடுகளைச் செய்து வைத்திருக்கும் லோகநாதனுடைய வைபவங்களை என்னென்று புகழ்வது? அத்தகையானுடைய பரிபவத்தைப் பாடிப் பணிவோம்.

(நளன், வீமன், ரிதுபர்ணன், தமயந்தி முதலிய யாவரும் எழுந்து அஞ்சலிசெய்து நிற்கின்றார்கள்).

* "அவனன்றி யோரணுவு மசையா தெனும்பெரிய
வாப்தர்மொழி யொன்றுகண்டா
லறிவாவ தேதுசில வறியாமை யேதிவை
யறிந்தார்க ளறியார்களார்?
மௌனமொ டிருந்ததா ரென்போ லுடம்பெலாம்
வாயாய்ப் பிதற்றுபவரார்?
மனதெனவு மொருமாயை யெங்கே யிருந்துவரும்?
வன்மையொ டிரக்கமெங்கே?
புவனம் படைப்பதென் கர்த்தவிய மெவ்விடம்?
பூதபே தங்களெவிடம்?
பொய்மெயித மகிதமேல் வருநன்மை தீமையொடு
பொறைபொறு மையுமெவ்விடம்?
எவர்சிறிய ரெவர்பெரிய ரெவருறவ ரெவர்பகைஞர்
யாதுமுனை யன்றியுண்டோ?
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே." (அரு.

[எல்லாரும் போகின்றார்கள்

முற்றிற்று.

———

திருச்சிற்றம்பலம்.

---

* தாயுமானவர் பாடல்.

# செய்யுண் முதற்குறிப்பகராதி

[உடுக்குறியுற்றன மேற்கோட் பாக்களாம்]